வேதாந்தம்
வழி நூல்கள்
ஸ்ரீ லலிதா த்ரிசதி ஸ்தோத்ரம்

21-5

"ஸ்ரீ சங்கர க்ருபா அனுபந்தம்"

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு



॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला—३








# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

3

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–३

## (श्रीललितात्रिशतीस्तोत्रम्)

प्रथमो भागः ।



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா—3

## ஸ்ரீ லலிதாத்ரிசதீ ஸ்தோத்திரம்

(முதல் பாகம்)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

21-5



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யாள் அருளிய ஸ்ரீ லலிதா த்ரிசதீ பாஷ்யத்தின் தமிழ் உரை ஸ்ரீ V. ராமய்யா (Retd. Chief Engineer S. Ry.) அவர்கள் எழுதியதை ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதி வெளியீடாக பிரசுரித்தோம். ஸ்ரீ பகவத் பாதாளின் கிரந்தங்களில் ஸ்தோத்ரங்கள், பிரகரணங்கள் யாவற்றையும் தமிழ் உரையுடன் தொடர்ச்சியாக அச்சிட்டு வெளியிடவேண்டும் என்று பலர் வேண்டிக்கொண்டதற்கிணங்கி "ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலா" பிரசுரம் செய்து வருகிறோம். அதில் மேலேகண்ட ஸ்ரீ லலிதாத்ரிசதீ பாஷ்யத்தின் தமிழ் உரை இருபாகங்களையும் ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவின் 3வது 4வது புத்தகங்களாக வெளியிடுகிறோம். ஆசார்யாளின் ஸ்ரீ லலிதாத்ரிசதீ பாஷ்யம் மூலம் இதன் 2வது புஸ்தகமாகத் தனியாக வெளியிடப்பட்டிருக்கிறது. யாவரும் இதை வாங்கி வாசித்து ஸ்ரீ பகவத் பாதாளின் அநுக்ரஹத்திற்குப் பாத்திரமாக வேணுமாய் பிரார்த்திக்கிறேன்.

*K. V. சுப்பரத்னம்*



ॐ

# ॥ श्रीशृङ्गेरी श्रीजगद्गुरु संस्थानम् ॥

श्रीमत्परमहंस परिव्राजकाचार्यवर्य पदवाक्य प्रमाणपारावारपारीण
यमनियमासनप्राणायाम प्रत्याहारध्यानधारणासमाध्यष्टाङ्गयोगा-
नुष्ठाननिष्ठ तपश्चक्रवर्त्यनाद्यविच्छिन्न श्रीशङ्कराचार्य गुरुपरम्परा
प्राप्त षड्दर्शनस्थापनाचार्य व्याख्यानसिंहासनाधीश्वर सकल-
निगमागमसारहृदय सांख्यत्रयप्रतिपादकवैदिकमार्गप्रवर्तक
सर्वतन्त्रस्वतन्त्रादि राजधानी विद्यानगर महाराजधानी
कर्णाटकसिंहासन प्रतिष्ठापनाचार्य श्रीमद्राजाधिराज-
गुरुभूमण्डलाचार्यऋष्यशृङ्गपुरवराधीश्वर तुङ्गभद्रा-
तीरवासि श्रीमद्विद्याशङ्करपादपद्माराधक श्रीजगद्गुरु-
श्रीचन्द्रशेखरभारतीस्वामिगुरुकरकमलसञ्जात
श्रीजगद्गुरु शृङ्गेरी

**श्रीमदभिनवविद्यातीर्थस्वामिभिः ॥**

श्रीशंकरसेवासमितिविषये नारायणस्मरणपूर्वकं विरचिताः आशिषः समुल्लसन्तुतराम् ।

जगन्मातुः परस्याः शक्त्याः स्वरूपप्रकाशकानि नामानि सहस्रशः सन्ति ; तेषु "नामपारायणप्रीता" इत्यपि नाम प्रथितमेव । भगवत्याः आराधने वित्तव्ययायाससाध्यानि सन्ति नैकानि साधनानि ; नामपारायणं तु न तादृशम् । विनापि वित्तम्, विनाप्यायासमखिलैरपि जनैरनुष्ठातुं भगवत्याः कृपां संपादयितुं च सुलभं साधनम् । भगवता हयग्रीवेण महर्षये अगस्त्याय समुपदिष्टानि त्रिशतं नामानि ललितात्रिशतीति प्रथितानि सन्ति । श्रीविद्यामहामन्त्राक्षराण्येव मूलमास्थाय प्रवृत्तानामेतेषां नाम्नां पारायणं विशिष्टफलप्रदमिति जापकानां आनुभविको विषयः । श्रीमच्छङ्करभगवत्पादाः ललितात्रिशत्याः भाष्यं विधाय लोकानन्वगृह्णन् । सुरसरस्वतीपरिचयविधुराणां लोकानां भाष्यार्थावगमो दुष्कर इति मत्वा तदेव भाष्यं तमिऴ् भाषया अनूद्य, क्वचित् विपुलीकृत्य, अनुवादसहितं ललितात्रिशतीस्तोत्रं, शङ्करसेवासमितिः शार्वरिदीपावलीदिवसे प्रकाशयतीति विदित्वा नितरां मोदामहे वयम् । अर्थावगतिपूर्वकमनुष्ठानं वीर्यवत्तरं भवतीति शास्त्रेषु घोषः । तदिदं पुस्तकं पठित्वा अर्थमवगत्य, पारायणं विधाय, भगवत्याः विशिष्टायाः कृपायाः पात्राणि भवन्तु भक्तजनाः इत्याशास्महे ॥

मद्रास् नगरम्<br>10-10-1960

श्रीः

உ

### ஸ்ரீ ஜகத்குரு சிருங்கேரி ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின்

# ஆசிமொழி.

---

ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதி விஷயமாக நாராயண ஸ்மரணத்துடன் அருளிய ஆசீர்வாதங்கள் நனகு விளங்கட்டும.

உலகின் அன்னை பராசக்தியின் ஸ்வரூபத்தை நன்கு வெளிப்படுத்துகின்ற நாமாக்கள் (பெயர்கள்) ஆயிரக் கணக்கில் இருக்கின்றன. அவைகளில் 'நாமபாராயண ப்ரீதா'– नामपारायणप्रीता (நாமாவை — பெயரை திருப்பித் திருப்பிச் சொல்வதால் ஸந்தோஷமடைபவள்) என்ற நாமா யாருமறிந்ததே. அம்பிகையை ஆராதிப்பதற்குப் பல உபாயங்கள் இருக்கின்றன. அவைகளையெல்லாம் பணச் செலவுடனும், சரீர சிரமத்துடனும் நடத்தவேண்டும். நாமபாராயணம் அவ்வகையைச் சேர்ந்ததல்ல. ஒருவித பணச் செலவில்லாமலும் கொஞ்சமும் சிரமமில்லாமலும் எல்லா ஜனங்களும் நடத்துவதற்கும், அதன் மூலம் அம்பிகையின் கிருபையை அடைவதற்கும் ஸுலபமான ஸாதனம் இந்த நாமபாராயணம். பகவான் ஹயக்ரீவரால் அகஸ்திய மஹரிஷிக்கு உபதேசிக்கப்பட்ட முன்னூறு நாமாக்களும் 'லலிதா த்ரிசதீ' என்ற பெயரில் பிரஸித்தமாயிருக்கின்றன. ஸ்ரீவித்யா மஹாமந்திரத்திலுள்ள அக்ஷரங்களையே ஆரம்பமாகக்கொண்டு ஏற்பட்டிருக்கும் இந்த நாமாக்களை பாராயணம் செய்தல் மிக உயர்ந்த பலனைக் கொடுக்கும் என்பது ஜபம் செய்துவருபவர்களின் சொந்த அனுபவத்தில் கண்ட விஷயம். ஸ்ரீ சங்கர பகவத்

பார்த்தசாரதியார் இந்த லலிதா த்ரிசதிக்கு பாஷ்யமியற்றி ஜனங்களை அனுக்ரஹித்துள்ளார்கள். ஸம்ஸ்கிருத பாஷையில் பழக்கமில்லாத ஜனங்கள் பாஷ்யத்தின் பொருளை அறிந்துகொள்ள முடியாமல் போய்விடுமே என்று எண்ணி அதே பாஷ்யத்தைத் தமிழில் அநுவாதம் செய்து சில இடங்களில் விரிவுபடுத்தி இந்த தமிழ் அநுவாதத் துடன் லலிதாத்ரிசதீ ஸ்தோத்திரத்தை சங்கரஸேவா ஸமிதியானது சார்வரி வருஷம் தீபாவளி பண்டிகையன்று வெளியிடுகிறது என்பதை அறிந்து நாம் மிகவும ஸந்தோஷ மடைகிறோம். பொருளையறிந்து அனுஷ்டானம் செய்வது மிகுந்த வீர்யத்தைத் தரும் என்பது சாஸ்திரங்களில் ப்ரஸித்தமான விஷயம். பக்தர்களெல்லோரும் இந்நூலைப் படித்து பொருளையறிந்து, பாராயணம் செய்து அம்பிகை யின் உயரிய கிருபைக்கு பாத்திரர்களாகவேணுமாய் ஆசீர்வதிக்கிறோம்.

மதராஸ்
10—10—1960

ஸ்ரீ

# பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீசாரதாபீடாதிபதிகளான ஸ்ரீஜகத்குரு மஹாஸ்வாமிகளின் ஆசியை முன்னிட்டு இந்த ஸ்ரீ லலிதா த்ரிசதீ மலரை நாங்கள் வெளியிடுகிறோம். ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அவர்களுடைய ஸ்ரீலலிதாத்ரிசதீ பாஷ்யத்தில் நல்ல ஆராய்ச்சியும் பகவத்பாதர் அவர்களிடமும் ஸ்ரீ ராஜ ராஜேச்வரியிடமும் சிறந்த பக்தியும் உடைய ஸ்ரீ ராமய்யா அவர்கள் எல்லோரும் படித்து, அநுபவித்துப் பயன்பெறும் முறையில் இந்தப் பேருரையை எழுதியிருக்கிறார்கள்.

தீபாவளி சமயத்தில் இது வெளிவருவது மிகவும் மகிழ்ச்சிகரமானது. இப்போதைய பீடாதிபதிகளான ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த மஹாஸ்வாமிகளின் அவதார தினம் தீபாவளி; இவருடைய குருநாதரான ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகளின் அவதார தினம் தீபாவளிக்கு முந்திய ஏகாதசி. எனவே இந்த சுப காலத்தில் இது வெளிவருவது பக்தர்களுக்குப் பெரிய பாக்கியமாகும்.

இந்தப் புண்ணிய கிரந்தம் வெளிவருவதற்கு வேண்டிய பொருளுதவியைச் செய்து ஸ்ரீ லலிதா தேவியின் ஆசியைப் பெறும் பாக்கியம் பெற்ற மெஸர்ஸ் கானன் அண்டு டங்கர்லி (M/s. Gannon & Dunkerly) ஸ்ரீ P. S. சுப்பிரமணிய ஐயர் அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றி உரியதாகும்.

*K. V.* சுப்பரத்தினம்,

காரியதரிசி,

6—10—60

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.

# முகவுரை.

1. 'ஸ்ரீ லலிதா த்ரிசதீ' யென்பது ஹயக்ரீவர் கூறியிருப்பதுபோல் 'ஸர்வபூர்த்திகரீ' என்ற யதார்த்த கௌரவம் பூண்டது. வேதாந்த வேத்யமான பரம்பொருளை உபாஸித்தும், தியானித்தும் நிச்ரேயஸபலனை அடைவதற்கும், ஐஹிக ஸுகங்களைப் பெறுவதற்கும் இந்த வித்யை மிகவும் சிறந்தது. இதை 'லலிதாத்ரிசதீ' என்பானேன்? 'பராசக்தி த்ரிசதீ' என்றோ 'ஸ்ரீ ராஜராஜேச்வரி த்ரிசதீ' என்றோ பெயர் வைக்கலாமே என்றால், 'லலிதா' என்ற பதத்தின் கௌரவத்தைச் சார்ந்து இப்பெயர் அமைந்து உள்ளது. இந்த த்ரிசதீ நாமாவளியில் 'லலிதா' என்பது 62வது நாமாவாக அமைந்திருக்கிறது. அதன் பொருள் 'மிகவும் அழகுவாய்ந்தவள்' என்பது. கண்களால் காணப்படும் பொருள்களில் மிக நேர்த்தியாக இருப்பதை 'அழகுள்ளது' என்று கூறுகிறோம். ஆனாலும் அழகு என்ற பதத்திற்கு விரிவான பொருள் உண்டு. ஒருவன் நன்றாகப் பேசினால் 'பேச்சு அழகாயிருக்கிறது' என்கிறோம். பேச்சு என்பது கட்புலனுக்குக் கோசரமாயில்லாது செவிமூலம் அறியப்படுவதாயிருப்பினும், அதன்பால் 'அழகு' என்ற பதத்தை உபயோகிக்கிறோம். 'அழகாய் அரசு செலுத்துகிறான்' என்பது போன்ற கூற்றுகள் நடைமுறையில் வழங்குகின்றன. ஆகையால் 'அழகு' என்பது ஓர்வித 'ஸமஷ்டி' பதம். அதன் கருத்து 'ஆனந்தத்தைத் தருவது' என்பதேயாகும். பராசக்தி ஆனந்தஸ்வரூபியாதலாலும், அக்கருத்து 'அழகு' என்ற தமிழ் மொழிக்கு நிகராயிருக்கும் 'லலிதம்' என்ற வடமொழிப பதத்தினால் குறிக்கப்படுவதாலும் பராசக்தியைச் சார்ந்த வித்யையை 'லலிதா த்ரிசதீ' யென்று கூறுவது மிகவும் பொருத்தமே.

2. லலிதா த்ரிசதீயிலுள்ள நாமாக்களுக்கு வெளிப் படையான அர்த்தம் பலருக்குப் புலப்படும். ஆனால் இவைகள் ஆழ்ந்த பொருள் நிறைந்துள்ளன. இக்கருத்துக் களை ஸ்ரீசங்கர பகவத்பாதர்கள் தாம் இயற்றியுள்ள பாஷ்ய மூலமாய் உபதேசித்துள்ளார். அவரது பாஷ்யமில்லா விடில் இந்நாமாக்களின் உட்கருத்தையறிவது கூடாத காரியமென்றே சொல்லலாம். இவ்விதம் பரமாசாரியர்கள் ஸம்ஸ்கிருத பாஷையில் இயற்றியுள்ள பாஷ்யத்தை ஆதார மாகக்கொண்டு ஈண்டு வெளியிட்டிருக்கும் தமிழ் விரிவுரை இயற்றப்பட்டுள்ளது.

3. ஸ்ரீவித்யை பதினைந்து அக்ஷரங்கள் கொண்டது. இந்த த்ரிசதியிலுள்ள 300 நாமாக்களில் ஒவ்வொரு 20 நாமாக்களும் முறையே ஸ்ரீவித்யையிலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் முதன்மையாகக் கொண்டன. இவ்விஷயம் இதன் பூர்வபாகத்தில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீவித்யை மூன்று கண்டங்களாக (பிரிவுகளாக) பிரிக்கப் பட்டிருக்கிறது. முதல் கண்டத்திலுள்ள ஐந்து அக்ஷரங் களையும் முறையே முதன்மையாகக் கொண்டவை முதல் 100 நாமாக்கள். இவை இந்த முதல் பாகத்தில் வெளி யிடப்பட்டிருக்கின்றன. மற்ற 200 நாமாக்களும் இரண்டாம் பாகத்தில் வெளிவரும்.

4. இதை ஸ்ரீரங்கம் ஸ்ரீ சங்கர குருகுலத்திலுள்ள நூல் நிலைய அதிகாரியாயும், 'ஸ்ரீசங்கர க்ருபா' என்ற மாதப் பத்திரிகையின் உதவி ஆசிரியராகவுமுள்ள வியாகரண சிரோமணி, வேதாந்த வித்வான் பிரம்மஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள் பரிசீலனைசெய்து பற்பலவிடங்களில் திருத்தி யமைத்துள்ளார். இப்பேருதவி அன்னாருக்கு ஆசிரியரின்மீது உள்ள அன்பின் அறிகுறியேயாகும். அன்னாருக்கு யான் என்றும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டுள்ளவன்.

5. தவிர இப்புத்தகத்தை எழுத மூலகாரணமா யுள்ளவர் புதுக்கோட்டையில் கல்வி இலாகா டைரக்டராக இருந்து ஓய்வுபெற்றிருக்கும் ஸ்ரீமான் K. R. வெங்கடராம அய்யர் ஆவார். அவருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இப்புத்தகத்தைத் தமது ஆதரவில் வெளியிட்டுள்ள அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியாருக்கும் யான் கடமைப்பட்டுள்ளேன்.

6. அனைத்தையும்விட ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீ அபிநவ வித்யாதீர்த்த பூஜ்யபாதர் களின் தமிழ்நாட்டு விஜயமே இப்புத்தகம் வெளிவருவதற்கு முக்கியக் காரணம். இப்புத்தகத்தில் பற்பல குறைகளிருந் தாலும் அவற்றைப் பொருட்படுத்தாது, புத்தகத்தை எழுதியோன் தமது சிஷ்யனென்றெண்ணி அன்புமிகுந்து அதற்குத் தமது ஆசிமொழிகளை அருளியுள்ள ஆசாரிய ஸந்நிதானத்தின் தூய திருவடிகளை வணங்குகிறேன். மஹாகவி காளிதாஸர் கூறிய

क्षुद्रेऽपि नूनं शरणं प्रपन्ने ममत्वमुच्चैः शिरसां सतीव ।

என்ற வாக்குக்கு ஸ்ரீ ஜகத்குரு பாதங்களே நிதர்சனம்.

*V. ராமய்யா.*

## ॥ मङ्गलम् ॥

वरदानदयासिन्धुं नमामि गणनायकम् ।
सदानन्दमुखोल्लासं सर्वमानसहारिणम् ॥

या देवता भुवनकारणरूपभूता
सर्वं बिभर्ति गुणजाल-विलास-शक्त्या ।
सा मे तनोतु निजबोध विकास-भावं
टीकाविधानसमये ललितात्रिशत्याः ॥

नमामि वेदान्तसरोजभानुं
अनाद्यविद्यातिमिरापहारम् ।
यतीश्वरं शंकरदेशिकेन्द्रं
भवार्णवोत्तारणयोग्यनावम् ॥

आचार्येन्द्रमहं वन्दे शृङ्गगिरिनिवासिनम् ।
येषां दृष्टिविलासेन अज्ञोऽपि ज्ञानवान् भवेत् ॥

भजेऽभिनवपूर्वस्य विद्यातीर्थगुरोः पदे ।
अज्ञानहरणे व्यग्रे वृजिनोत्सारणे रते ॥



॥ श्रीगुरुभ्यो नमः ॥

ओं नमः परमात्मने ।

# முன்னுரை.

1. உலகில் கணக்கற்ற பொருள்களும் (forms of matter), சக்திகளும் (forms of energy) இருக்கின்றன. அவற்றை நமது ஐம்புலன்களின் உதவியாலும், மனம் என்ற ஆருவது புலனின் சக்தியைக் கொண்டும் அறிகிறோம். விஞ்ஞானிகள் தூரதிருஷ்டிக் கண்ணுடி முதலிய ஸாதனங்களால் இயற்கைப் புலன்களினுல் காண இயலாததைக் காண்கிறுர்கள். நம்மால் அறியக்கூடிய இவ்வனைத்தையும் நமக்கு வியக்தமாயிருக்கிறது என்கிறோம். தெளிவாயில்லாதவற்றை அவ்யக்தம் என்பார்கள். ஒரு பொருள் ஒருவனுக்கு வியக்தமாயிருந்து மற்றெருருவனுக்கு வியக்தமாயில்லாதிருக்கலாம். ஓர் உண்மை ஒருவன் மனத்தில் எளிதாகப் புலப்படும். மற்றெருவனுக்கு அது புலப்படாமல் இருக்கலாம். ஆயினும், சிறந்த விக்ஞானிக்கும் அறிவாளிக்குங்கூடப் புலப்படாதது அளவற்றவை. "கற்றது கடுகளவு, கல்லாதது கடலளவு"

2. இப்பொழுது அவ்யக்தம், வியக்தம் என்ற இரண்டினுடைய தன்மையையும் கவனிப்போம். குழந்தை பிறப்பதற்குமுன் அவ்யக்தமாயிருந்து பிறந்தபின் வியக்தமாகிறது, பிறப்பதற்கு முன் குழந்தை இல்லாதிருக்க முடியாது. 'नासतो विद्यते भावः' (2-16) என்பது கீதா வசனம். "ஒரு பொருள் முற்றும் இல்லாதிருப்பின் அது ஒருக்காலும் தோன்ருது." ஜீவாத்மாவின் பூர்வ வாஸனைகளும், பிராரப்த கர்மாவும் ஒன்றுகூடித் தாய் தந்தையரிடம் மறைந்து நிற்கும் சக்தி மூலமாய் வெளித்தோன்றிக் குழந்தை வடிவத்தை எடுக்கின்றன.

ஒரு காலத்தில் விக்ஞானிகள் நிறையுள்ள பொருள்கள் அனைத்தும் தனித்தனியான சுமார் 92 மூலகங்களுக்குள்

(elements) வகுக்கப்படுமென்று கருதினர். பின்பு இந்த 92 மூலகங்களும் தனித்தனியானது அன்றென்றும், அவைகள் ஒரே விதமான சக்தியின் வெவ்வேறு ஸ்தூல வடிவங்கள் என்றும் கண்டுபிடித்தனர். முதலில் அவர்கள் மனத்திற்கு வியக்தமாயில்லாத உண்மை பின்பு வியக்த மாயிற்று. இதே மாதிரி, வெப்பம், வெளிச்சம், மின்சக்தி முதலியவை தனித்தனியான சக்திகள் என்ற கொள்கை மாறி, உருவம் படைத்த பொருள்கள் உட்பட சக்திகள் அனைத்தும் ஆகாசத்தில் உண்டாகும் சலனங்களின் மாறு பாடுகளே தவிர உண்மையில் வேறுபட்டனவை அன்று என்றும் கண்டுபிடித்திருக்கின்றனர். விஞ்ஞான சாஸ்திரம் வியக்கத்தக்க உண்மைகளைத் தெளிவாக்கிய போதிலும் அவ்யக்தமாயிருப்பது இன்னும் அளவற்றதாகவே இருக்கிறது. உயிரின் தன்மை, உள்ளறிவின் தன்மை, ஆனந்தத் தின் இயல்பு இவைகள் மறைபொருளாகவே இருக்கின்றன. ஆயினும் மேற்கூறிய உதாஹரணங்களிலிருந்து அவ்யக்தத் திலிருந்து வியக்தமான உலகு உண்டாகிறது என்பது தெளிவுபடுகிறது.

3. வேதாந்திகள் உலகத்தை 'ஜகத்' (जगत्) என்ற பதத்தால் குறிக்கின்றனர். இந்த பதம் உலகத்தின் இயல்பை ஒட்டியது. உலகத்தில் அனைத்தும் தோன்றிச் சிறிது காலம் நிலைத்து இறுதியில் மறைந்துபோகும் தன்மை உள்ளன. எது (जायते) தோன்றுகிறதோ அல்லது பிறக் கிறதோ, பின்பு (गच्छति) சென்றுவிடுகிறதோ அல்லது மறைகிறதோ அதுவே 'ஜகத்'

4. ஆகவே நமக்குத் தென்படும் 'ஜகத்' என்பது ஒரு மறைபொருளிலிருந்து உண்டாயிருக்கவேண்டும். அழியும்பொழுது அதில் மறைந்து விடவேண்டும். ஆனால் அந்தப்பொருளோ நமக்கு அவ்வியக்தமாயிருக்கிறது. இந்த மறைபொருளை அறிய வேண்டுமென்றால் மறைகள் (வேதாந்தங்கள்) மூலமாகத்தான் அறியமுடியும். மறைந்

திருக்கும் இந்த மூலகாரணத்தையே வேதாந்திகள் 'பிரம்ம' மென்றும், 'பரமாத்மா' வென்றும் கூறுகின்றனர். அதன் ஸ்வரூபம் 'ஸத்' 'சித்து' 'ஆனந்தம்' என்பன; அதாவது முறையே என்றும் நிலைத்துள்ளது; அறிவினுக்கு அறிவாய் எங்கும் நிறைந்துள்ளது, பேரின்ப வடிவமாயுள்ளது என்பன.

தைத்திரீய உபநிஷத்தில் பிரஹ்மம் பின்வருமாறு விளக்கப்பட்டிருக்கிறது.

यतो वा इमानि भूतानि जायन्ते। येन जातानि जीवन्ति। यत्प्रयन्त्यभिसंविशन्ति। तद्विजिज्ञासस्व तद्ब्रह्मेति।' (भृगुवल्ली)

"எதிலிருந்து 'ஜகத்' பிறக்கின்றதோ, எதனால் உஜ்ஜீவிக்கின்றதோ, எதில் லயமடைகிறதோ, அதை அறிந்துகொள். அதுவே பிரம்மம்."

5. பிரம்மத்தை இவ்விதம் அறிந்துகொண்டு அதனின்றும் 'ஜகத்' பிறக்கும் வழியைக்கவனிப்போம். பிரம்மத்தினிடம் ஸூக்ஷ்மத்தினின்றும் ஸ்தூலமான பொருள்களைத்தோற்றுவிக்கவும் (evolution), ஸ்தூலமான பொருள்களை ஸூக்ஷ்ம நிலையை அடையும்படி செய்யவும் (Involution) சக்தியிருக்கிறது. பகவான் கூறுகிறார் :—

भूमिरापोऽनलो वायुः खं मनो बुद्धिरेव च।
अहङ्कार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा॥

अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्।
जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत्॥

एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय।
अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा॥

"மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் (வெளி), மனம், புத்தி, 'நான்—எனது' என்ற அகங்காரம் இவ்வெட்டும் எனது எட்டுவிதமான தாழ்ந்த இயல்புகள் (प्रकृतयः). இவற்றினின்றும் வேறுபட்ட சிறந்த இயல்பு ஒன்று உண்டு. அதுவே உலகனைத்தையும் தாங்கிநிற்கும் ஜீவன் எனப்படுவது. ஜீவனுடன் கூடிய இந்த எட்டு இயல்புகளினின்றுமே ஜகத்தில் தோன்றுவன அனைத்தும் பிறக்கின்றன என்பதை அறிந்துகொள் யானே ஜகத்தின் தோற்றத்திற்கும் மறைவுக்கும் காரணம்." (கீதை அ. 7. சு. 4, 5, 6)

6. பரமாத்மாவின் இத்தகைய இயல்பு பராசக்தி எனப்படுகிறது. எப்படி ஒருவனுடைய சக்தியை அவனை விட்டுப் பிரிக்கமுடியாதோ, அதைப்போலவே பராசக்தியை பரமாத்மாவினின்றும் பிரிக்கமுடியாது இந்த உண்மையைப் பாதி ஆண், பாதி பெண் உருவங்கொண்ட அர்த்தநாரி (अर्धनारी) யென்ற மூர்த்தத்தின் வழிபாட்டில் காணலாம். ஸௌந்தரியலஹரியில் இக்கருத்தைக்கொண்ட பின்வரும் சுலோகம் இருக்கிறது:—

शरीरं त्वं शम्भोः शशिमिहिरवक्षोरुहयुगं
तवात्मानं मन्ये भगवति नवात्मानमनघम् ।
अतः शेषः शेषीत्ययमुभयसाधारणतया
स्थितः सम्बन्धो वां समरसपरानन्दपरयोः ॥

"ஹே! பகவதி! நீ சம்புவின் (பரமாத்மாவின்) சரீரம். சூரியனும் சந்திரனும் உனக்கு ஸ்தனங்களாயிருக்கிறார்கள் (சூரிய சந்திரவடிவமாயிருந்துகொண்டு நீ உலகம் அனைத்தையும் போஷிக்கிறாய் என்பது கருத்து). பரமாத்மா உனக்குச் சரீரமாயிருக்கிறார். பூர்ணத்துவம், அதன் அம்சத்வம் என்ற இரண்டும் உன்னிடத்திலும், பரமாத்மாவிடத்திலும் ஒன்றுபோல் அமைந்துள்ளன. பரம்பொருளாகவும், பரமானந்தமாகவும் நீங்களே விளங்குகிறீர்கள்," சிவமும் சக்தியும் ஒருமைப்பட்டதே,

7. பராசக்தியைத் தனிப்பட்ட முறையில் வழி படுவதேன்? பரமாத்மாவை வழிபட்டால் போதாதா என்று கேட்கலாம். பரமாத்மாவை நிர்க்குணமாகிய தன்மையில் தியானிக்க ஆற்றலுள்ளவர்கள் அப்படிச்செய்யலாம். எல்லோரும் இத்தகைய ஆற்றல் படைத்தவர் அல்ல. அவர்களுக்கு எளியதாக பராசக்தி வழிபாடு ஏற்பட்டிருக் கிறது. ஒருவனை அண்டி நமது கோரிக்கை ஏதேனும் நிறைவேறவேண்டுமானால் அவன் விழித்துக்கொண்டு இருக்கும் பொழுதுதான் கேட்கவேண்டும். துயிலும் பொழுதுகேட்டால் பயன் கிட்டாது. பராசக்தி பரமாத்மா வினிடம் மறைந்திருக்கும் பொழுது பரமாத்மா ஆத்மா ராமனாகவும் நிர்க்குண ரூபியாகவும் விளங்குகிறான். ஆசா பாசங்கள் அனைத்தையும் துறந்த துறவிகள் அவரை அவ் விதமே தியானிக்கவேண்டும். வாழ்க்கைப்பயனை விரும்பு வோர் பராசக்தியின் மகிமைகளைப்போற்றவேண்டும்.

பீடங்களுக்குத் தலைமை வகிக்கும் யதிசிரேஷ்டர்களும் பராசக்தியை உபாஸிக்கிறார்கள். சிருங்ககிரி பீடத்தில் சாரதா ரூபமாகப் பராசக்தி உபாஸிக்கப்படுகிறாள். ஏனெனில் இந்தப்பீடங்களை அலங்கரிக்கும் ஆசாரியர்கள் தங்களுடைய முக்திக்கு மட்டும் பாடுபடுபவர்கள் அன்று. உலகத்தின் நன்மைக்காகத் தர்மப் பிரசாரம் செய்கிறார்கள். பிரம்ம வித்யை என்ற யாதொரு பராசக்தியின் விலாசம் உண்டோ அதை ஜனங்களுக்கு உணர்த்தி வருகின்றனர். இவர்கள் ஆதி குருவாகிய தக்ஷிணாமூர்த்தியின் குரு பரம் பரையில் அவதரித்தவர்கள். தக்ஷிணாமூர்த்தி பரமாத்மாவின் அவதாரம். பரமேசுவரன் தனது மாயா சக்தி மூலம் ஜகத் தைத் தோற்றுவித்தபின், ஜீவர்கள் 'நான், எனது' (अहंता ममता) என்ற அஞ்ஞான இருளில் தயங்கி, அதனின்றும் பிறக்கும் காமம், கோபம் முதலியவற்றால் கஷ்டப்பட்டு, திரும்பத்திரும்பப் பிறப்பு, இறத்தல் என்ற கட்டுகளுக்கு உட்பட்டுக்கொண்டேயிருந்தால் அவர்கள் உய்யும் வண்ணம் என்னேயென்று நினைத்துக்கருணை

மேற்கொண்டு தானே தக்ஷிணுமூர்த்தியென்ற ஆதி குருவாய் அவதரித்து அஞ்ஞானத்தை அகற்றும் ஞான மார்க்கத்தை உலகில் நிலை நாட்டினுர்.

8. இதன் உண்மை தக்ஷிணுமூர்த்தியைப்பற்றிய பின் வரும் தியான சுலோகத்தினின்றும் விளங்கும் :—

मौनव्याख्याप्रकटितपरब्रह्मतत्त्वं युवानं
वर्षिष्ठान्तेवसदृषिगणैः आवृतं ब्रह्मनिष्ठैः ।
आचार्येन्द्रं करकलितचिन्मुद्रमानन्दमूर्तिं
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे ॥

கருத்து :— தக்ஷிணுமூர்த்தி நித்ய யுவாவாக இருக்கிறுர். அதாவது ஜராமரணங்களுக்கு உட்பட்டவர் அன்று. ஆகையால் அவர் 'ஸத்' ரூபி. அவர் ஆசாரியர்களுக்குள் இந்திரனுக (முதன்மை வாய்ந்தவராக) இருந்து கொண்டு பிரம்ம நிஷ்டர்களாயிருக்கும் வயது முதிர்ந்த ரிஷிகணங்களுக்கு பிரம்ம தத்வத்தை விளக்கிக் கொண்டிருக்கிறுர். சின் முத்திரையைக் காண்பித்துக் கொண்டு ஒருவார்த்தையைக்கூட வெளிவிட்டு சொல்லாமல் அவர் உபதேசிக்கிறுர் வலது கைக்கட்டை விரலையும் ஆள் காட்டி விரலையும் இணைத்து ஏனைய மூன்று விரல்களையும் விடுத்துக் காட்டும் முத்திரைக்குச் சின்முத்திரையென்று பெயர். பிரத்யேகமாக ஒவ்வொரு ஜீவனையும்சுட்டிக்காட்டும் விரல் ஆள்காட்டி விரல். இது ஜீவாத்மாவைக் குறிக்கிறது ; அங்குஷ்டம் என்ற கட்டைவிரல் பரமாத்மாவைக்குறிக்கிறது ஏனென்றுல் அதைச் சேர்த்தாலன்னியில் ஒரு பொருளைத் தூக்கவோ, எழுதவோ முடியாது. இவ்விரு விரல்களையும் இணைப்பதன் கருத்து என்னவெனின், ஜீவாத்மாவும், பரமாத்மாவும் உண்மையில் ஒன்றுபட்டது என்ற தத்வம் உபதேசிக்கப்படுகிறது. சின் முத்திரையைத் தரித்துக் கொண்டிருக்கும் தக்ஷிணுமூர்த்தி 'சித்' ரூபியாக விளங்குகிறுர். மேலும் அவர் முகத்தினில் ஆனந்தம் ததும்புகிறது

இந்த ஆனந்தம் எதிலிருந்து பொங்குகிறதென்றால் அவர் தம் ஆத்மாவிலிருந்தே பொங்குகிறது. ஆகையால் தக்ஷிணுமூர்த்தி ஸ்வயமாகவே ஸச்சிதானந்த மூர்த்தி. அவரே பரமாத்மா தென் திசையை நோக்கி வீற்றிருக்கும் கருத்து என்னவெனின், ஜீவாத்ம பரமாத்ம அபேதமென்ற தன் உபதேசத்தை உணர்ந்தவர்கள் தென் திசைக்கு அதிபனை யமனிடத்தில் பயப்படவேண்டியதில்லை என்பதைக் காட்டவே ஆகும்.

தக்ஷிணுமூர்த்தி ஏற்றிவைத்த ஞான விளக்கை ஸ்ரீ சங்கரபகவத்பாதாள் மறுபடியும் பிரகாசிக்கச் செய்தார்கள். அதைக்காத்துக்கொண்டும் அதன் ஒளி எங்கும் பரவுமாறு செய்துகொண்டும் பீடாசாரியார்கள் தற் காலத்தில் விளங்கி வருகிருர்கள். பராசக்தியின் வழி பாட்டினுல் எந்தக்காரியமும் கைகூடுமென்றே பகவத் பாதாள் ஸௌந்தரியலஹரி போன்ற பிரகரண கிரந்தங் களை உலகத்தாருக்குப் பேருதவியாக அருளியிருக்கிருர்கள்.

9. வடமொழியில் 'சக்தி' என்ற பதம் பெண்பாலில் அமைந்துள்ளது. தவிர பரமாத்மாவையும் பராசக்தியை யும் ஜகத்திற்குத் தந்தை தாயெனத் தியானிப்பதால் தியானத்திற்கு வன்மையுண்டாகிறது. ஆயினும் பராசக்தியை உபாஸிப்பவர்கள் அவளே பரமாத்மா, என்ற உண்மையை மறந்துவிடக்கூடாது.

10. பரமாத்மாவின் இயல்புகள், மனம் உள்பட ஒன்பதெனக் கூறப்பட்டது. ஆனுல் ஜகத்தில் காணப்படும் பொருள்களோ கணக்கற்றவை. மேலும் ஒரு பொருளைப் போல் மற்றென்று இருப்பதாகவும் தெரியவில்லை. இவ்வித மாறுபாடுகள் எங்ஙனம் ஏற்படுகின்றன என்பதைக் கவனிக்கவேண்டும். இவ்வேறுபாடுகளுக்கு முதற்காரணம் என்னவெனில் முற்கூறிய மண், நீர் நெருப்பு முதலியவை ஒன்றுடன் ஒன்று தத்தம் அம்சவிகிதங்களுடன் சேரும்

பொழுது (combinations of fractional parts) கணக்கற்ற உருபு, தகைமை இவற்றின் வேறுபாடுள்ள தொகுதிகள் கிடைக்கின்றன.

11. இரண்டாவது காரணம் என்னவென்னின், பரமாத்மாவின் பிரகிருதியானது ஸத்வகுணம், ரஜோ குணம், தமோகுணம் என்ற மூன்றுவித குணவேற்றுமைகளுடன் விளங்குகிறது. இப்படி விளங்கும்பொழுது பராசக்திக்கு தேவமாயை என்ற பெயர் வழங்கப்படுகிறது.

दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया। (7—14)

सत्वं रजस्तम इति गुणाः प्रकृतिसंभवाः। (14—5)

இவை கீதாவசனங்கள். இம்மூன்று குணங்களின் அம்சபாகங்களின் தொகுதிகள் (combination of fractional parts) அனந்தம் (infinite) என்பது யாவருக்கும் எளிதில் புலப்படும். இக்காரணம்பற்றி உலகில் காணப்படும் கணக்கற்ற வேற்றுமைகள் உண்டாகின்றன.

12. மனம் உட்பட ஒன்பதுவித இயல்புகளும், மூவகைக் குணங்களும் எல்லா வஸ்துக்களிலும் இருக்க வேண்டும் என்ற நியதி, கிடையாது. பூமியில் மனம், புத்தி, அகங்காரம் இவை இருப்பதாகத் தெரியவில்லை. ஜீவன்முக்தர்களிடம் ரஜோகுணமும், தமோகுணமும் முற்றும் இல்லை. சாதாரண மனிதர்களிடம் இவ்வனைத்தும் வெவ்வேறு அளவில் பொருந்தியிருக்கின்றன. இவைகளின் பந்தங்களுக்கு உட்பட்டிருப்பதால், ஒருவனுக்கும் தனது உண்மையான பரமாத்மபாவம் புலப்படுவதில்லை. தன்னைத் தேசகால வரம்புகளுக்கு உட்பட்டுள்ள மண், நீர், நெருப்பு முதலியவற்றினுடையவும், மனது புத்தி, அகங்காரம் என்பவையினுடையவும், தொகுதியென்றே நினைத்துக் கொள்ளுகிறான். உண்மையில் இந்தத் தோற்றம் அனைத்தும் பூர்ணத்வம், நித்யத்வம், ஸர்வஜ்ஞத்வம்,

ஸர்வ சக்திமத்வம் பொருந்திய தனது ஆத்மபாவத்தின் உபாதிகள். தன்னைப்பற்றிய உண்மை நிலையை அறியாத் தன்மைக்கு மாயை, அல்லது அக்ஞானம் என்று பெயர்.

13. இவ்வித அஞ்ஞானத்தின் வேகம் ஞானம் உதயமாகும் மட்டுமேதான். வெளிச்சம் ஓரிடத்தில் வரும் முன்பு அங்கே இருள் இருக்கிறது. இருள் நீங்கவேண்டுமானால் வெளிச்சம் வரவேண்டும். அதைப்போல் அஞ்ஞானம் அகலவேண்டுமானால், தன்னைப்பற்றிய உண்மை துலங்க வேண்டும்.

कस्य त्वं कः कुत आयातः तत्त्वं चिन्तय यदिदं भ्रातः

என்ற சங்கரபகவத்பாதாள் உபதேசப்படி நாம் யார், நமக்கு ஆதாரம் எது, இதற்குமுன் எங்கேயிருந்தோமென்று ஒவ்வொருவனும் தன்னைப்பற்றிச் சிந்திக்கவேண்டும்.

14. மாயையாகிய அஞ்ஞானம் பரமாத்மாவின் சக்திகளில் ஒன்று என்றும் அதை வெல்லுதல் எளிதன்று என்றும் 'मम माया दुरत्यया' என்ற கீதா வாக்கியத்திலிருந்து அறிகிறோம். மாந்தர்களின் கடமை என்னவெனின், மாயையை வென்று அஞ்ஞானத்தை அகற்றவேண்டும். ஸ்ரீமத் பாகவதத்தில் வேதங்கள் கூடிப் பரமாத்மாவைத் துதிக்கும்பொழுது "जय जय जह्यजामजित दोषगृभीतगुणाम्" (10-87-14) என்று பிரார்த்திக்கின்றன, இதன் கருத்து :—

"ஒருவராலும் ஜயிக்கமுடியாத (நிகரற்ற அல்லது மாயையினால் பாதிக்கப்படாத) ஹே! பரமாத்மா! உனது பெயரும் புகழும் எங்கும் எக்காலத்திலும் விளங்கட்டும். அநாதியாக இருக்கும் மாயையை (அஞ்ஞானத்தை) அழிப்பாயாக. அது நித்தியகர்ப்பிணியாக இருந்து கொண்டு (மாந்தர்பால் தத்தம் பரமாத்ம பாவத்தை மறக்கடித்து தீய நினைவுகளையும் தீய செயல்களையும் இடைவிடாது உற்பத்தி செய்துகொண்டிருக்கிறதன்றோ?" என்பது.

15. மாயையின் ஸ்வரூபம் யாது என்பதைக் கவனிப்போம். ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாள் விவேகசூடாமணியில் இவ்விஷயத்தைப் பின்வரும் (111-வது) சுலோகத்தால் வர்ணித்திருக்கிறார்கள் :—

सन्नाप्यसन्नाप्युभयात्मिका नो भिन्नाप्यभिन्नाप्युभयात्मिका नो ।
सांगाप्यनङ्गाप्युभयात्मिका नो महाद्भुताऽनिर्वचनीयरूपा ॥

கருத்து :— "(1) மாயையைப்பற்றி, இருக்கிறதென்றோ இருக்கவே இல்லையென்றோ, அல்லது இருந்தும் இல்லாமலும் உள்ளதென்றோ கூற முடியாது, (2) பிரம்மத்தினின்று தனிப்பட்டதென்றோ. அதனுடன் ஒன்றுபட்டதென்றோ, அல்லது தனிப்பட்டும் தனிப்படாமலும் இருக்கிறதென்றோ கூறமுடியாது. (3) அவயவங்களுடன் கூடியதென்றோ, அவயவம் அற்றதென்றோ, அல்லது இருவிதமாகவும் இருக்கிறதென்றோ சொல்லமுடியாது. மாயை என்பது பரமாத்மாவினுடைய வியக்கத்தக்க பிரகிருதி. அதை இன்னதென்று மொழியினால் உரைக்க இயலாது

16. பராசக்தி தனது மாயாவிலாசத்தினால் ஜகத்தை நடத்துகிறாள் என்பதாலும் முக்தர்கள் நீங்கலாக அனைவரும் இச்சக்திக்கு உட்பட்டிருப்பதாலும், மாயையின் தன்மையை விஸ்தாரமாக அறிய அனைவருக்கும் ஆவல் இருக்குமாதலாலும் மேற்கூறிய சுலோகத்திற்குச் சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடத்தை அலங்கரிக்கா நின்று, ஜீவன்முக்தர்களாகப் பிரகாசித்த ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் எழுதியுள்ள வியாக்யானம் கீழே மொழிபெயர்த்து எழுதப்படுகிறது :—

" உலகில் உண்மையை 'ஸத்யம்' என்றும், பொய்யை 'அஸத்யம்' என்றும் சொல்கிறார்கள். இதுபோலவே பாதிக்கப்படும் பொருள் (அதாவது ஞானத்தால் அதிஷ்டானம் மட்டும் மிஞ்சும்படி மறைந்துபோகும் பொருள்) 'அஸத்யம்' என்பதும், இவ்வாறு மறைந்து போகாதபொருள் 'ஸத்' என்பதும் உலகில் பிரஸித்தமே.

ஒருவருக்கும் ஒரு காலத்திலும் தோன்றாத பொருளை 'அஸத்' (இல்லாத்தன்மையது) என்று கூறலாம்; உதாரணமாக முயல் கொம்பு, ஆகாய புஷ்பம் முதலியன. மாயையைக்குறித்து, தத்துவஞானம் உண்டாகிவிட்டால் மாயை அழிந்துவிடுகிறதென்றும், பிரம்மவித்யையை சம்பாதித்தால் அவித்யையென்ற மாயை அழிந்து விடுமென்றும், பரமாத்மாவை அறிந்துவிட்டால் மாயைக் கடலைத் தாண்டி விடுகிறார்களென்றும், சுருதிகளும் ஸ்மிருதி களும் கூறுகின்றன. ஆகையால் ஆத்மாவைப்போல் மாயையை 'ஸத்' என்று கூற முடியாது. ஸத்தாயிருக்கும் பொருளுக்கு ஒருபொழுதும் அழிவு கிடையாதென்று கீதா வாக்கியம் இருப்பதாலும், பிரம்மஞானம் அடைந்தபின் மாயை அழிந்துபோவதாலும் மாயை ஸத்பதார்த்தமல்ல. ஆனால் பிரம்மஞானம் உதிப்பதற்கு முன்பு மாயையினால் பயக்கும் பயன்களையும், அப்பயன்களின் மாறுபாடுகளையும், காரியகாரண ஸம்பந்தங்களையும் நாம் பார்க்கிறோம். அநுபவிக்கவும் செய்கிறோம். ஆகையால் ஒருபொழுதும் இல்லாத முயற்கொம்பைப்போல் மாயையை 'அஸத்' எனவும் சொல்ல இயலாது. ஒரு காலத்தில் ஸத்வமும் மற்றோர் காலத்தில் அஸத்வமும் மாயையில் உள்ளதாகவும் கூறமுடியாது. ஒரே காலத்தில் இருப்பதாகவும் கூறமுடியாது. ஏனெனில் ஞானம் உதிக்கும்பொழுது அஞ்ஞானம் அகன்றுவிடும். அஞ்ஞானம் இருக்குமட்டும் ஞானம் உதிக்கவில்லை என்பது தெளிவு. ஒரேகாலத்தில் ஒருவனிடம் ஞானம், அஞ்ஞானம் இரண்டும் ஒன்றுகூடி இருக்கமுடியாது. அதுபோல மாயை என்பது இருத்தலும் இல்லாமையும் இரண்டும்கூடிய தன்மைவாய்ந்தது என்று கூறுதல் பொருந்தாது. ஆகவே தோன்றி மறைந்துபோகும் ஸ்வப்னத்தில் காணப்பட்ட பொருள்களையும், வித்தை காட்டி தோற்றுவிக்கும் பொருள்களையும்போல் மாயையும் ஸத்துமல்ல; அஸத்துமல்ல; பொய்யான வஸ்து. ஆனால் லௌகிக வியவகாரத்தில் குடம் உண்டாக்கப்பட்டவுடன்

குடம் இருக்கிறதென்றும் அது உடைந்தபின் குடம் இல்லையென்றும் சொல்லப்படுகிறது. இக்கூற்று உண்மையாகா. ஏனெனில் கீதாசாரியார் சொற்படி இல்லாதது ஒருக்காலும் உண்டாகாது. இருப்பது ஒருக்காலும் அழிந்துபோகாது. (குடத்தைப் பற்றிய வரையில் குட உருவமாவதற்கு முன்னும் பின்னும் மண் உருவமாகக் குடம் இருந்தது) ஆகையால் மாயை ஸத்பொருளுமன்று, அஸத் பொருளுமன்று, ஸத்வம், அஸத்வம் இரண்டும் சேர்ந்த பொருளுமன்று ஸத்தென்றோ, அஸத்தென்றோ கூறமுடியாத பொருள் மாயை.

இதுபோலவே மாயை பிரம்மத்தினின்றும் முற்றும் பிரிந்த தன்மையது என்று சொல்லமுடியாது. ஏனெனில், சுருதிகள் "பிரம்மம் ஒன்றேதான். அதைத்தவிர வேறொன்றும் உண்மையில் இல்லை" என்கின்றன. இந்தக் கூற்று பொய்யாகிவிடும். மேலும் ஒருவனது சக்தியும் அவனும் பிரிந்திருப்பதாக உலக இயல்பில் காணப்படவில்லை. பிரம்மமும் மாயையும் ஒன்றேதான் என்பதும் இல்லை. ஏனெனில் பிரம்மஞானம் ஏற்பட்டுவிட்டால் மாயை அழிந்துவிடுகிறது. இரண்டும் ஒன்றாயிருப்பின் மாயை அழியும்பொழுது பிரம்மமும் அழிந்துவிட வேண்டும். மாயை பிரம்மத்துடன் ஒன்றாகவும் வேறாகவும் இருக்க முடியாது. ஏனெனின், ஒன்றாகில் வேறு ஆகாது. வேறு ஆயின் ஒன்றாகாது. ஆகையால் மாயையைக் குறித்துப் பிரம்மத்துடன் ஒன்றோ, அல்லது பிரம்மத்தினின்றும் வேறுபட்டதோ, அல்லது இருதன்மையும் கூடியதோ என்று உரைக்க இயலாததோர் வியக்தி என்றுதான் சொல்லமுடியும்.

மேலும் மாயையைப்பற்றி அவயவங்களுடன் கூடியதென்று சொல்லவும் பொருந்தாது. ஏனெனின், மாயை ஆதியற்றது. உறுப்புகளுடன் கூடியிருப்பின் ஆதியற்றதாக இருக்கமுடியாது. உறுப்புகள் அற்றதென்று வைத்துக்

கொண்டால், நாம் பார்க்கும் மாயாவிலாஸத்தின் மாறுபாடுகள் உண்டாகாது. உறுப்புகளுடன் கூடியும் கூடாமலும் இருக்கலாம் என்றால், ஒன்றுக்கொன்று முரண்பாடுள்ள கூற்றாக ஆகிறது. ஆகையால் மாயை இன்னதென்று சொல்லமுடியாத அத்யாச்சரியமான ஓர் வியக்தி."

17. மாயையின் சேஷ்டை இருவகைப்படும்; (1) ஆவரணம் (2) விக்ஷேபம். ஆவரண சக்தியினால் மாயை என்பது உண்மை உருவத்தை மறைத்துப் பொய் உருவத்தைப் பதியச்செய்கிறது. இது மாயையின் தமோ குணத்தின் காரியம். கயிற்றின் உருவத்தை மறைத்துப் பாம்பு உருவத்தை அதன்மேல் சுமத்துகிறது. விக்ஷேப சக்தியினால் ஜீவனைப் பொய்த் தோற்றத்திற்குத் தக்கவாறு பிரவர்த்திக்கும்படி செய்கிறது. இது மாயையின் ரஜோ குணத்தின் செயல். கயிற்றைப் பாம்பு என்று உணர்ந்த பின், தடியை எடுத்து அடிக்கவோ, அல்லது நடப்பவன் நின்றுவிடவோ செய்கிறான்.

மனிதன் ஆத்மாவின் ஸச்சிதானந்தமென்ற உண்மையை அறியாமல், "நான் உடல், மனம், இந்திரியங்கள் கூடிய வஸ்து" என்று எண்ணிக்கொள்ளுகிறான். இது மாயையினுடைய ஆவரண சக்தியின் விளைவு. பிறகு 'நான், எனது' என்ற உணர்ச்சி ஏற்பட்டுத் தனது அநுபவத்திற்காக உடல், மனம், இந்திரியங்கள் முதலியவற்றின் விஷயாதிகளான பொருள், பெண்டிர், மக்கள், மனை முதலியவற்றை ஈட்டுகிறான். ஆசை வளருகிறது. ஆசை நிறைவேறாவிட்டால் கோபம் மூள்கிறது. இவ்விதம் விக்ஷேபசக்தி ரஜோகுண மூலமாகப் பிரவர்த்திக்கிறது. இதுவே உலகின் இயல்பு.

ஜீவராசிகள் அனைத்தும் ஒரே பிராண சக்தியின் விலாசங்களாக இருக்கும்பொழுது, தேசத்துக்குத் தேசம் வேற்றுமை பாராட்டிக்கொண்டு நிலம், நீர், ஆகாயம் முதலியவற்றை மனித வர்க்கம் பங்கு போட்டுக்கொள்ளு

கிறது. இது மாயையின் ஆவரண சக்தியின் விளைவு. பிறகு தேசம், தேசத்தின் இயற்கை செயற்கைச் செல்வங்கள், இவற்றில் உரிமை பாராட்டுகிறது. உரிமைச் சண்டைகள் உண்டாகின்றன. உலகம் பாழடைந்து, மாந்தர் கணக்கின்றி மாய்கின்றனர். இதெல்லாம் மாயையின் விக்ஷேப சக்தியின் பயன்.

18. எதற்காகப் பரமாத்மா தனது மாயாசக்தியின் மூலம் ஜகத்தைத் தோன்றவைத்து ஜீவான்மாக்களை இவ்விதம் துன்புறுத்தவேண்டுமென்ற கேள்வி எழும்பும்.

முதலில் இந்தக் கேள்வியினால் யாதொரு நன்மையும் பயக்காது. ஒருவன் ஒரு ரஸ்தாவின் வழியாக நடந்து கொண்டிருக்கிறானென்று வைத்துக்கொள்வோம். அந்த ரஸ்தாவை ஒட்டிய பெரிய ஏரியொன்றின் கரை உடைந்து வெள்ளப்பெருக்கு இந்த பிரயாணியைச் சூழ்ந்துவிட்டால், ஏன் ஏரி உடைந்தது என்று வினவிக்கொண்டிருப்பான்? தன்னைக்காப்பாற்றிக்கொள்ள முயல்வான் அன்றோ? அதைப்போல், உலகத்தில் பிறவியெடுத்து, அதற்குரிய இன்ப துன்பங்களை அநுபவித்து, அனைத்தும் அநித்யமென்று அறிந்தபின், எவனாவது மறுபடியும் பிறப்பை விரும்புவானா? ஜனன மரணப் பிணியினின்றும் விரைவில் தப்பித்துக் கொள்ள முயலுவானே தவிர, ஏன் உலகு துக்கத்திற்கு இருப்பிடமாக அமைந்திருக்கிறது என்று கேள்வி கேட்டுக் கொண்டிருக்கமாட்டான். ஆயினும் இக்கேள்வி பிறந்த அளவில், அதற்குச்சமாதானம் சொல்லவேண்டும். ச்ருதிகளின் பதில் என்னவென்றால், சிருஷ்டியனைத்தும் பரமாத்மாவின் லீலைகளுக்கு அமைந்த களம் என்பதும் அதில் நிகழும் அனைத்தும் பரமாத்மாவின் லீலாவிநோதங்கள் என்பதும் பரமாத்மாவுக்குத் தனது மாயா லீலைகளை ஸாக்ஷியாக நின்று அநுபவிப்பதைத் தவிர அவனுக்கு வேறு யாதொரு லக்ஷியமும் கிடையாது என்பதுமே. பிரம்ம சூத்திரங்களில் இந்தக் கருத்தை அடக்கி लोकवत् तु लीला।

कैवल्यम् (2-3-16) என்ற சூத்ரம் அமைந்துள்ளது. உலகத்தில் நாடகத்தில் ருசியில்லாதவர்கள் துர்லபம். எளியவன் அரசனாக நடிக்கிறான். பெண் ஆணாக நடிக்கிறாள் இயற்கையில் தத்தம் குணசீலங்கள் என்ன என்ன உளதோ அனைத்தையும் மறைத்து ஏனைய குணசீலங்களை ஆரோபித்துக் கொள்ளுதல் நடிகனுடைய கார்யம். இதைப் பார்ப்பவர்கள் ஸாக்ஷியாக இருந்துகொண்டு மகிழ்ச்சியை அடைகிறார்கள். உலகென்ற பரந்த அரங்கத்தில் ஜீவர்கள் தத்தம் உண்மை ஸ்வரூபமாகிய ஸச்சிதானந்த வஸ்துவை மறந்து மாயை என்ற சூத்ரதாரியினால் ஆரோபிக்கப்பட்ட பற்பல சீல குணங்களுடன் நடப்பதைப் பார்க்கும்பொழுது, பரமாத்மா தன் ஆனந்த விலாஸத்தின் மலர்ச்சியை அநுபவிக்கிறார்.

19. பிரபஞ்சம் அனைத்தும் பரமாத்மாவின் மாயா லீலை என்பதால், மாந்தருங்கூடக் கூடியமட்டும் உலக நிகழ்ச்சியில் தங்களுக்கு உண்டாகும் இன்ப துன்பங்களையும் லாப நஷ்டங்களையும் பொருட்படுத்தாமல், விளையாட்டாக கருதவேண்டும். இந்த மனோபாவம் வளர வளர, பரமாத்மா எவ்வண்ணம் ஸாக்ஷிமாத்திரமாக விளங்குகிறானோ, அவ்வண்ணம் தாங்களும் படிப்படியாக ஆகிவிடுவார்கள். கர்மபலன்களில் பற்று அகன்றுவிடும். கர்மயோக நெறியை அடைந்துவிடுவார்கள்.

20. 'ஜகத்' உண்டாவது பரமாத்மாவின் அவ்யக்தமான மாயாசக்தியினால் என்பது இதுகாறும் விளக்கப்பட்டது. ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாள் விவேகசூடாமணியில் (சு. 112) எழுதுவது:—

अव्यक्तनाम्नी परमेशशक्तिरनाद्यविद्या त्रिगुणात्मिका परा ।
कार्यानुमेया सुधियैव माया यया जगत्सर्वमिदं प्रसूयते ॥

இந்தச் சுலோகம் சுருக்கமாக முற்கூறிய கருத்துக்களையடக்கியுள்ளது. "பரமாத்மாவின் சக்தியாகவும், அவ்யக்த

மென்ற பெயர்பூண்டும், அநாதியாகிய அஞ்ஞானரூபமாயும் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களின் தன்மை உடைத்தாகி, ஜகத்தைப்பெற்ற தாயாய் நிற்கும் மாயையை அவளிடத்தி லிருந்து தோன்றும் பயன்களின் மூலம் (அனுமான பூர்வ மாக) விவேகிகள் அறிகின்றனர்.”

21. மாயையை வெல்லுவது எப்படி? அஞ்ஞானத்தை அகற்றித் தத்வஞானத்தைப் பெறுவது எப்படி? பராசக்தியின் தன்மை கேவலம் வியாமோஹத்தையும் அஞ்ஞானத்தையும் உண்டுபண்ணுவதாயிருந்தால் ஆன்மாக்களுக்கு உய்வு ஏற்படாமலே ஆகிவிடும். ஆனால் அவள் கேவலம் அத்தன்மை வாய்ந்தவள் அன்று. இச்சா சக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்ற மூன்றின் உருவம் படைத்தவள். பரமாத்மாவின் ஸ்வரூப லக்ஷணங்களான ஸத், சித், ஆனந்தம் என்பவற்றின் வடிவம். ஆத்ம ஞானத்தைத் தரும் பிரம்மவித்யாரூபிணி “विद्या उमारूपिणी प्रादुरासीत् स्त्रीरूपा सा ब्रह्मेति होवाच। (கேனோபநிஷத் சாங்கர பாஷ்யம்) “பிரம்ம வித்யை என்பது உமையென்ற பராசக்தியின் ஸ்திரீ உருவத்துடன் அவதரித்தது.” முக்கிய மாகப் பராசக்தி கருணைக்கடல். அவளது கருணை ஸௌந்தர்யலஹரியிலுள்ள கீழ்க்கண்ட (22வது) சுலோகத்திலிருந்து விளங்கும்.

भवानि त्वं दासे मयि वितर दृष्टिं सकरुणा-
मिति स्तोतुं वाञ्छन्कथयति भवानि त्वमिति यः।
तदैव त्वं तस्मै दिशसि निजसायुज्यपदवीं
मुकुन्दब्रह्मेन्द्रस्फुटमकुटनीराजितपदाम्॥

“பவானி! நீ உன் தாஸனாகிய என் மீது உனது கருணை கடாக்ஷத்தைச் செலுத்துவாயாக என்று பக்தன் உன்னைப் பிரார்த்திக்க நினைத்து, ‘பவானி த்வம்’ (भवानि त्वम्) என்ற வார்த்தைகளைச் சொல்லும் அளவிலேயே, நீ பிரம்ம,

விஷ்ணு, இந்திராதிகளுடைய கிரீடங்களினால் வணங்கப்பட்ட பாதாரவிந்தங்களையுடைய உனது ஸாயுஜ்ய நிலையை அந்தப் பக்தனுக்கு அளிக்கிறாய்"

22. ஆகையால் மாயையினின்றும் விடுதலை பெற்று ஆத்மஞானத்தை அடையப் பராசக்தியின் மீதே பக்தி செய்யவேண்டும். அவள் மாயவலையை அறுத்து, நமது ஞானக்கண்ணைத் திறந்துவைத்து, ஜீவாத்மாவின் ஸச்சிதாநந்த இயல்பை நன்கு விளக்குவாள் இவ்விதப் பேரின்ப நிலையை அளிக்கவல்ல பராசக்தி இவ்வுலகில் நல் வாழ்க்கைக்கு வேண்டிய நீண்ட ஆயுள், தேகவன்மை, நல்லறிவு, மக்கட்பேறு, பொருட்பேறு, நற்கீர்த்தி முதலியவற்றைத் தன்னையண்டியவர்களுக்குக் கொடுப்பாளென்று சொல்லவேண்டுமோ? தற்காலத்திலுங்கூட அவள்பால் மனங்கனிந்து பக்தி செய்யும் அடியார்களுக்கு அங்கக் குறைகள் நீங்கிய நிகழ்ச்சிகள் பல. ஊமை பேசுந்திறனைப் பெற்றுள்ளான். கன்னிகைகள் நல்ல கணவர்களையடைந்திருக்கிறார்கள். இல்வாழ்க்கையிலோ, அலுவல்துறையிலோ உண்டாகும் துன்பங்கள் எளிதில் நீங்கி இன்பங்களாக மாறுபட்ட உண்மைக்கதைகள் பல. லலிதாதிரிசதியின் பலசுருதியில் பராசக்தியை உபாஸிப்பதால் நற்பயன் உண்டாவதைப் பரீக்ஷை செய்து பார்க்கலாமென்று ஹயக்ரீவர் சொல்லுகிறார்.

23. இச்சம்பவங்களில் வியப்படையக்காரணம் யாதொன்றும் இல்லை. ஸ்வயம்பிரகாசமாய் ஸர்வ சக்தியமைந்த ஜகன் மாதாவாகிய பராசக்தி அறிவினுக்கு அறிவாகியும் எங்கும் நிறைந்த பொருளாகவும் இருக்கிறாள். ஆதலால் நமது சிற்றறிவை அப்பேரறிவுடன் ஒடுக்குவதால் அதாவது அவளைத் தியானிப்பதால், நமது கோரிக்கைகளை அவள் உணர்ந்து அவளது கருணைப்பெருக்கினால் நம்மைக் காத்து, நன்மை அனைத்தையும் பயக்கிறாள்.

24. தேவீ உபாஸனையினால் ஒரு ராஜா மன்வந்தராதிபதியானான், ஒரு வைசியன் ஆத்ம ஞானமடைந்தான்,

இக்கதை மார்க்கண்டேய புராணத்தில் வருகிறது. அதுவே 'தேவீ மாஹாத்மியம்' எனப்படும்.

ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் ஸுரதன் என்று ஒரு சக்கரவர்த்தி இருந்தான். அவன் சத்துருக்களால் ஜயிக்கப் பட்டுத் தனது ராஜதானியில் ஒடுங்கும்படி நேர்ந்தது. அங்கேயும் அவன் மந்திரிகள் அவனுக்கு விரோதிகள் ஆயினர். உலகத்தில் வெறுப்பு உண்டாகி அவன் நாட்டை நீத்துக் காட்டுக்குச்சென்றுவிட்டான். அங்கே ஒரு முனிவரையண்டி நாட்களைக் கழித்துவரும்பொழுது, அவனுக்குப் பூர்வ நினைவுகள் அடிக்கடி வந்துகொண்டே யிருந்தன. 'ஈட்டிய பொருள் என்னவாயிற்றோ? மக்கள் நல்ல வண்ணமாயிருக்கிறார்களா? பட்டத்து யானை யாரிடம் சிக்கியிருக்கிறதோ?' என்ற கவலைகள் அவனை விட்டு நீங்கவில்லை. அப்பொழுது ஒரு வைசியன் அங்கே வருவதைக் கண்டு, அவன் வரலாற்றை வினவினான். அதற்கு அந்த வைசியன் "என் பெயர் ஸமாதி. அளவற்ற செல்வம் வைத்திருந்தேன். என் பெண்டிரும் மக்களும் பண ஆசை மேற்பட்டு என்னை விரட்டி விட்டார்கள். மனம் நொந்து இங்கே வந்திருக்கிறேன். ஆயினும் அவர்கள் நன்றாயிருக்கவேண்டுமேயென்ற கவலை என்னை விட்டு அகலவில்லை" என்றான். ஸுரதனும், ஸமாதியும் தத்தம் நிலையைப்பற்றி ஆலோசித்து தாம் விவேகம் பொருந்தி யிருப்பினும், மக்கள் பெண்டிர் கெட்டவர்களாயிருப்பினும், அவர்மீதுள்ள பாசத்தை அகற்ற வன்மையற்றவர்களா யிருப்பதைக்கண்டு வியந்து முனிவரிடம் இதன் காரணத்தை வினவினார்கள். அதற்கு முனிவர், "மக்கள் மனைவியிடம் பாசமுண்டாவது மனிதனது இயல்பு மட்டு மன்று. பசு, பறவை முதலிய இனங்களுக்கும் இத்தகைய பாசம் அமைந்துள்ளது. 'நான்', 'என்னுடையது' என்ற பிரக்ஞை பராசக்தியின் மஹா மாயையினால் உண்டாகிறது. அந்தச் சக்தியினாலேயேதான் பிரபஞ்சம் தோன்றி, இருந்து, மறைகிறது.

ज्ञानिनामपि चेतांसि देवी भगवती हि सा ।
बलादाकृष्य मोहाय महामाया प्रयच्छति ॥ देवीमाहात्म्ये १-५५

"ஞானிகளுடைய சித்தத்தையுங்கூடத் தன் மாயா பலத்தினால் பராசக்தி அஞ்ஞானத்தில் ஆழ்த்தும் தன்மை வாய்ந்தவள்" ஆகையால் உங்களுக்கு வியாமோஹம் உண்டாவதில் வியப்பு ஒன்றுமில்லை, ஆகையால்,

तामुपैहि महाराज शरणं परमेश्वरीम् ।
आराधिता सैव नृणां भोगस्वर्गापवर्गदा ॥ देवीमाहात्म्ये १३-५

"அந்தப் பராசக்தியையே சரணமடையுங்கள். அவளைத் தொழுவதால் மாந்தருக்கு இவ்வுலகில் நன்மைகள் உண்டாகி, ஸ்வர்க்க போகங்களும் கிடைக்கும். அவள் முக்தியென்ற பேரின்ப நிலையிலும் ஆழ்த்துவாள்" என்று விடையருளினர். பிறகு, ஸுரதனின் வேண்டுகோளுக்கு இணங்கி முனிவர் தேவியின் அவதாரத்தை விளக்கி, அவள் எங்ஙனம் அசுரர்களை வதைத்து உலகை ரக்ஷித்தாள் என்றும் விளக்கினர்.

முதலில் சோம்பல், அகத்தழுக்கு, புறத்தழுக்கு என்பவற்றின் ரூபமாயிருந்துகொண்டு, பிரம்மாவை சிருஷ்டிப்பதினின்றும் தடுத்த மதுகைடபர்கள் என்ற அசுரர்களை வதைப்பதற்கு மஹாவிஷ்ணுவுக்கு எங்ஙனம் தேவி உதவி புரிந்தாள் என்பதைத் தெரிவித்து, பிறகு மதம் அல்லது கர்வத்தின் உருவாகிய மஹிஷாஸுரனைப் பராசக்தி கொன்ற வரலாற்றையும் வர்ணித்தார். பணச் செருக்கோ வேறு எத்தகைய செருக்கோ உள்ளவர்கள் மஹிஷம் (எருமை) போல் நடப்பதைப் பார்க்கலாம். பார்வையை மேனோக்கி, எருமையைப்போல் சதைப் பிண்டமாக உத்தண்டமாகவே அவர்கள் நடப்பார்கள்.

பிறகு சும்பன், நிசும்பன் என்ற சகோதரர்கள் தேவியையே மணக்க ஆசைகொண்டனர், காமமும்

லோபமும் எந்த அளவுக்கு மாந்தரின் அறிவை மயக்கிவிடும் என்பதை இதிலிருந்து தெரிகிறது. இவர்களுக்கும் தேவிக்கும் போர் நிகழ்ந்தது. முதலில் பராசக்தி தனது அம்சசக்தியான பத்ரகாளியின் மூலம் சண்ட முண்டர்களை (சும்ப நிசும்பர்களின் சேனாதிபதிகள்) கொல்வித்து, பத்ர காளிக்குச் 'சாமுண்டி' என்ற பெயரை அளித்தாள்.

சும்ப நிசும்பர்களின் உடன் பிறப்பான குரோதவதி என்பவளின் பிள்ளையாகிய ரக்தபீஜன் தேவியுடன் போர் புரிந்தான். இவன் உடலிலிருந்து பூமியில் விழும் ரக்தத் துளிகளிலிருந்து ஒவ்வொரு துளிக்கு ஒவ்வொரு ரக்தபீஜன் உண்டாவானாம். கோபத்தின் இயல்பு இதுவே. ஒவ்வொரு கோப மொழிக்கும் அடுக்கடுக்காய்க் கோபச் சொற்கள் உண்டாகும். பராசக்தி பத்ரகாளியை, வாயைத் திறந்து கொண்டு ரக்தபீஜன் காயத்தினின்று கிளம்பும் ரக்தத்தை ஒரு துளிகூட பூமியில் விழாவண்ணம் அருந்தும்படி கட்டளை யிட்டு ரக்தபீஜனைக் கொன்றாள். கடைசியில் சும்பநிசும்பர் களும் உயிர் நீத்தார்கள்.

இவ்விதம் முனிவர், ஸுரதனுக்கும் ஸமாதிக்கும் தேவியின் மாஹாத்மியத்தை உபதேசித்து அவர்களைத் தவஞ்செய்யும்படி கட்டளையிட்டார். அவர்கள் அவ்வண்ணமே ஓர் நதியின் கரையில் தவம்புரிந்து தேவியின் வரங்களைப் பெற்றுக்கொண்டனர். ஸுரதன் இழந்த ராஜ்யத்தை மீண்டும் அடைந்து மறு பிறப்பில் சூரியன் பிள்ளையாய் ஸாவர்ணி என்ற பெயருடன் பிறந்து மன்வந்தரத்தின் அதிபதியானான். ஸமாதி ஆத்ம ஞானத்தை அடைந்து முக்தியைப்பெற்றான். பராசக்தியின் உபாஸனை முதன்முதலில், காமம், குரோதம், சோம்பல், மதம், லோபம் முதலிய கெட்டவாஸனைகளை அழித்துவிடும்; ஸத்வகுணத்தை வளரும்படி செய்யும்.

௨௬. பராசக்தியைத் திரிசதீ மூலம் தொழுபவர்கள் சிற்சில யோக்யதைகளைக் கையாளவேண்டும்.

வரை மனோ, வாக், காயத்தினின்றும், தமோகுணத்தை அகற்றவேண்டும். பிரமாதம் (தன்நிலை பெயர்தல்) ஆலஸ்யம் (சோம்பல்) அதி நித்திரை இவை தமோகுணத்தின் பயன்களென்று கீதையில் கூறப்படுகிறது.

ஸ்ரீமத் பாகவதத்தில் (1-17-சு. 38-41) பின்வருமாறு கூறப்பட்டிருக்கிறது:—"பரீக்ஷித் மஹாராஜன் பாபியாகிய கலியைக்கொல்ல ஆரம்பித்தார். அப்பொழுது கலி உயிர்ப் பிச்சையை யாசித்து, தான் வசிப்பதற்குச் சில-குறிப்பிட்ட இடங்களைத் தந்தால் போதுமென்றும், அவ்விடங்களினின்றும் அதிக்கிரமிப்பதில்லையென்றும் வாக்குக்கொடுத்தான். பரீக்ஷித் அவன் வேண்டுகோளுக்கு இணங்கியதால் கலிக்கு (1) சூதாட்டம் (2) மத்யபானம் (3) விலைமாதர் (4) பிராணி வதம் என்ற நான்கு இடங்களும் அவன் குடியிருக்க அளிக்கப்பட்டன. மறுபடியும் கலி புருஷன் "இன்னும் எதனின்று பிறக்குமோ, அதையும் நான் குடியிருக்கத் தாருங்கள்" என்று யாசிக்க, பரீக்ஷித் ஸ்வர்ணத்தையும் ஐந்தாவது வாஸஸ்தலமாகக் கலிக்குக் கொடுத்தார். ஏனெனில் செல்வச்செருக்கிலிருந்தே பொய் உருவமாயிருக்கும் சூதாட்டமும், மதியை மயக்கும் மத்யபானமும், காமவெறியின் பயனாகிய விலைமாதர் நட்பும், குரூரவடிவமாகிய பிராணிவதையும் பிறப்பதுடன், பொன்னினின்று த்வேஷமும் பிறக்கிறது. ஆகையால் இவற்றை முற்றும் ஒழிக்கவேண்டும்."

ஆங்கிலக்கவியாகிய மில்டன் ஸுவர்ணமலை நரகத்தில் தான் இருக்கிறதென்றும் அதற்குத்தகுந்த இடம் நரகமே யென்றும் கூறுகிறார்.

"Let none admire
That riches grow in Hell; that soil may best
Deserve the precious bane'

(Paradise Lost Book I)

(admire=be surprised)

அதாவது ஸ்வர்ணத்தில் அத்யாக்ரஹம் கூடாது.

26. உலக வாழ்க்கையின் பொருட்டுப் பிரயத்தினம் செய்யவேண்டியிருக்கிறது. இப்பிரயத்தினங்கள் ரஜோ குணத்தின் விலாஸங்களாவன. ஆயினும் அவற்றில் சில ஸத்வ குணங்கூடிய ரஜோ குணம் பொருந்தியனவை என்றும், மற்றவை தமோகுணங்கூடிய ரஜோ குணம் பொருந்தியனவை என்றும் பாகுபடுத்தலாம் முன்னவைகளையே செய்தல்வேண்டும். ஓய்வு நேரங்களில் ஸத்வ குணமார்க்கங்களில் ஈடுபடவேண்டும்.

27. தவிற, நித்தியகர்மாக்களைச் சரிவர நடத்திய பின்னரே, திரிசதீ உபாஸனையைச் செய்யவேண்டும். புருஷர்கள் காயத்ரீயையும், ஸ்திரீகள் பஞ்சாக்ஷரத்தையும் ஜபித்தபின்னரே ஸ்ரீ வித்யையை உபாஸிக்கவேண்டும். காயத்ரீயையும், பஞ்சாக்ஷரத்தையும் விட்டு விட்டு ஸ்ரீ வித்யையை உபாஸிப்பது தாயைப் பட்டினிபோட்டு விட்டு ஊருக்கு அன்னதானம் அளிப்பது போலாகும்.

தவிற பராசக்தியை இன்ன இன்ன வேண்டுமென்று யாசிப்பது அநாவசியம். நமக்கு எது நன்மையென்பது நமக்குத் தெரியாது. யாசிக்கவேண்டுவது எதுவெனின் அவள்மீது பக்தியென்ற ஒன்றுமட்டுமே. தாயார் எப்படிச் சேய்க்கு எது நன்மையென அறிகிறாளோ, அதைப்போல் உலகிற்கு அன்னையாகிய பராசக்தி நமது நன்மையை நன்கு அறிவாள். இவ்வித நியாஸ பாவனையுடன் பராசக்தியைப் போற்றிவந்தால் நாம் அஞ்ஞானத்தினாலேயோ, வேறு காரணங்களினாலேயோ, அபராதம் ஏதேனும் செய்தாலுங் கூட அவள் அதைப் பொருட்படுத்தாமல் அளவற்ற நன்மையையே அளிப்பாள். கீதையில் பகவான் கூறுகிறார்:-

नहि कल्याणकृत्कश्चित् दुर्गतिं तात गच्छति ।

"குழந்தாய் (அர்ஜுனா!) மங்கள காரியத்தை எவன் செய்கிறானோ, அவனுக்கு கஷ்டதசை ஒருக்காலும் உண்டாகாது." (6—40)

சிலர் அற்பக்குறைவுகளைப் பெரியதாக்கி, கொடிய நரக வேதனைகள் சாஸ்திரங்களிலும் புராணங்களிலும் விதித்திருப்பதாக எடுத்துக்காட்டுகிறார்கள். பகவானுடைய கீதாரூபமான உறுதிமொழியிருக்கும்பொழுது இத்தகைய கூற்றுக்களைச் சங்கையின்றி நிராகரித்துவிடலாம். நியாய ஸ்தலங்களிலுங்கூடக் குற்றத்திற்குத் தண்டனை விதிக்கு முன் கெட்ட எண்ணம் (mala fides) இருந்திருக்கிறதாவென்று கவனிக்கிறார்கள்.

28. 'புருஷார்த்தங்கள்' என்ற பதம் அடிக்கடி பாஷ்யங்களில் காணப்படுகிறதாதலால் அது சுருக்கமாக விளக்கப்படுகிறது.

தர்மம், அர்த்தம், காமம் மோக்ஷம், என்ற நான்கும் புருஷார்த்தங்கள் எனப்படுவன. தர்மமென்பதை ஸ்ரீமத் சங்கர பகவத் பாதர்கள் "प्राणिनां साक्षादभ्युदयनिःश्रेयसहेतुः यः सः धर्मः" என்று கீதா பாஷ்யத்தில் வரையறுத்திருக்கிறார்கள். பிராணிகளுக்கு இவ்வுலக பரலோக ஸுகத்தையும், முக்தியென்ற அளவற்ற லாபத்தையும் அளிப்பதற்கு நேரிடையான காரணம் எதுவோ அது தர்மம் எனப்படும். ஸத்யம், சௌசம், அத்யயனம் (ஓதுதல்), ஸந்தியோபாஸனம் முதலிய நித்யகர்மாக்களை வழுவாது செய்தல், இந்திரியக்கட்டுப்பாடு, பிரம்மசர்யம் முதலியவை அவனவன் (ஆத்ம) நன்மைக்கு அவனவன் செய்யவேண்டிய தர்மங்களாவன. ஏனையோருடைய பசி தாகத்தைத் தீர்த்தல், அவர்களைக் கற்பித்தல், அவர்களுடைய வியாதியைக் குணப்படுத்தல் முதலியவை ஜீவ வர்க்கங்களுக்குச் செய்யும் தர்மங்களாவன. பித்ருக்கள், ரிஷிகள், தேவர்கள் இவர்களைக் குறித்துச் செய்யப்படும் யக்ஞங்கள் அவர்பால் செய்யவேண்டிய தர்மங்களாவன. இத்தகைய பலவாறுயுள்ள தர்மங்களை நிறைவேற்றப் பொருளுதவி வேண்டும். ஆகவே பொருளை (அர்த்தம்) ஈட்டல் வேண்டும். தர்மம் செய்தல் அவசியம் என்று அறிந்து

அதைச் செய்வதிலும், அதற்கு வேண்டிய பொருளை (அர்த்தத்தை) ஈட்டுவதிலும் அவா வேண்டும். இந்த அவாவே காமமென்பதாகும். ஆகவே தர்மமும், அதை அடிப்படையாகக் கொண்ட அர்த்த, காமங்களும் புருஷார்த்தங்கள் எனப்படும். இவற்றைக்கடைப்பிடித்து வந்தால் தமோகுணமும், ரஜோகுணமும் அகன்று ஸத்வ குண மிகுதி உண்டாகும். ஸத்வகுணம் அதிகரிக்கவே சித்தம் நிர்மலமாகும். அதன்மூலம் ஆத்மதத்வம் விளங்கும். மோக்ஷத்திற்கு அஸ்திவாரம் போட்டதுபோலாகும்.

29. ஆத்ம தத்வத்தை அறிதலே முக்தி என்பது பகவத்பாதர்களுடைய உபதேசம். இந்த ஞானம் ஸ்வதஸ்ஸித்தமாக ஒருவன் மனதில் பதிந்துவிட்டால், தர்மகாரியங்கள் உட்பட எல்லாக்கர்மாக்களும் விலகிவிடும். அப்பொழுது நான்காவது புருஷார்த்தமாகிய மோக்ஷத்திற்கு யோக்கியதை உண்டாகும். அந்நிலையை அடைந்தவனைப்பற்றி, 'धर्मार्थकामेभ्यः मोक्ष एव मोक्षः' (தர்மம், அர்த்தம், காமம் இவற்றினின்றும் விடுதலையடைவதே மோக்ஷமாகும்) என்று சொல்வது பொருத்தமாகும்.

30. சிலருக்கு முக்தியென்பது அவசியமாக அடைய வேண்டிய ஸாம்ராஜ்யமாகத் தோன்றும். அநேக ஜீவர்களுக்கு ஸுகமோ, துக்கமோ எவ்விதமிருந்தாலும் உலக வாழ்க்கையே சிரேஷ்டமாகத்தோன்றும். இதன் காரணமென்னவெனின், இரு வகுப்பாருக்குமுள்ள அதிகாரபேதம் எனலாம். ஒரு நதியில் தெள்ளிய நீர் எங்கே இருக்கிறதோ அங்கேயே மனிதர்கள் நீராடச்செல்லுகின்றனர். பன்றியைப் போலுள்ள பிராணிகள் சேற்றில் புரளுவதில் சுகத்தைப் பெறுகின்றன. அதைப்போல் மாந்தருக்குள்ளும் மோக்ஷமென்பதைக் குறித்து அதிகாரபேதம் இருக்கிறது.

31. பராசக்தி ஆத்மஞானத்தைத் தரும் பிரம்ம வித்யா ரூபிணியாக விளங்குகிறாள். பிரம்மத்தின் ஸ்வரூப லக்ஷணங்கள் ஸத், சித், ஆனந்தம் எனப்படுபவை.

திரிசதியில் பராசக்திக்கு 'ஸச்சிதானந்தா' (227) 'ஏகானந்த சித்ராக்ருதி:' (25) என்ற நாமாக்கள் இருக்கின்றன. ஜீவாத்மாக்களும் உண்மையில் ஸச்சிதானந்த ஸ்வரூபிகளே. ஆனால் இந்த உண்மை அக்ஞானத்தினால் மறைக்கப்பட்டுத் துலங்குவதில்லை. சிற்சில அனுமானங்களினால் இந்த உண்மையை அறியலாம்.

உயிருடன் இருக்கும் பொழுது ஒருவனைப்பார்த்து 'நீ ஏன் உயிருடன் இருக்கிறாய்?' என்று ஒருவனும் கேட்பதில்லை. இறந்துவிட்டால் 'ஏன் இறந்துவிட்டான்?' என்று வினவுகிறார்கள். இருத்தல் என்பது ஒவ்வொருவனுடைய ஸ்வபாவம். ஆகையாலேதான் ஒவ்வொருவனும் 'நான் இருக்கிறேன், நான் இருக்கிறேன்' என்கிறான். 'நான் இறந்துவிட்டேன்' என்று ஒருவனாலும் சொல்லமுடியாது. ஏனெனில் உடல் நீத்தபின் முன்னிலையில் நின்று சொல்லுவதற்கு ஆசாமியில்லை. ஆகையால் 'இருத்தல்' என்ற 'ஸத்' பாவமே ஜீவர்களின் இயல்பு.

அதைப்போல் ஒருவனுக்கு அறிவு கலங்கிவிட்டால் 'ஏன் பைத்தியம் பிடித்துவிட்டது?' என்கிறோம். நல்ல அறிவுடன் இருக்கும்பொழுது 'ஏன் பைத்தியம் பிடிக்கவில்லை' என்று ஒருவனும் வினவுவதில்லை. ஆகையால் அறிவு என்ற 'சித்' சக்தி ஜீவர்களின் இயல்பு.

அதைப்போலவே ஒருவன் அழுதுகொண்டிருந்தால் 'ஏன் அழுகிறான்?' என்கிறோம். சாந்தமாயிருக்கும்பொழுது 'ஏன் சாந்தமாயிருக்கிறான்? ஏன் அழவில்லை' என்று ஒருவனும் வினவுவதில்லை. ஏனெனில் ஜீவர்களின் உண்மை இயல்பு சாந்தமென்ற ஆனந்தம்.

32. மாயைக்கு உட்பட்ட ஜீவன் தனது உண்மை இயல்பாகிய ஸச்சிதானந்தத் தன்மையை உணருவது எப்படி? அந்த உணர்ச்சியிலிருந்து நழுவாது இருப்பது எப்படி? இதற்கு உபாயங்களாகக் கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்ற மூவகை யோகங்கள் குறிப்

பிடப்படுகின்றன. இவற்றில் 'ஸத்' என்ற ஸ்வரூபத்தைச் சார்ந்திருப்பது கர்மயோகம். ஒரு வீட்டைக் கட்டினாலும், கோட்டை கொத்தளங்களை அமைத்தாலும், இவை எந்நாளும் நிலைத்திருக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் செய்கிறோம். நமது 'ஸத்' என்ற தன்மை நாம் செய்வதனைத்திலும் பிரதிபலிக்கிறது. பெயரும் வடிவமும் பொருந்திய எதுவும் அப்பெயரையும் வடிவத்தையும் சாசுவதமாக வைத்துக்கொண்டிருக்காது என்பதை மறந்து விடுகிறோம். இந்த உண்மையை உணர்ந்து, செய்வன அனைத்தையும் பகவல்லீலையாக எண்ணி அவன்பால் அர்ப்பணம் செய்துவிடவேண்டும். கர்த்தா (செய்பவன்), கர்மா (செயல்), காரியம் (செயப்படுபொருள்) என்ற மூன்றும் ஒன்றுபடல்வேண்டும் இது எப்பொழுது உண்டாகுமென்றால் செய்பவன் பரமாத்மாவின் சக்தி அம்சமென்றும், கர்மாவானது அச்சக்தியின் விலாசமென்றும், காரியம் அதே சக்தியின் அம்சமென்றும் உணருவதால் உண்டாகும். இதுவே கர்மயோகம் எனப்படும்.

ஞானயோகம் பரமாத்மாவின் 'சித்' ஸ்வரூபத்தைச் சார்ந்தது. நான்குபேர் பேசிக்கொண்டிருக்கும்பொழுது ஒருவன் சொல்லுவதை மற்றவர்கள் அறிந்துகொள்ள உதவுவது எது? அவர்களுடைய உடல் இந்திரியங்கள் மனம் இவை ஒன்றும் உதவுவதில்லை. ஒருவன் பேசிக் கொண்டிருக்கும்பொழுது கேட்பவன் மனது வேறொன்றை நினைத்துக்கொண்டிருந்தால் சொல்லுபவன் பேச்சையறிய முடியாமல் போய்விடும். ஆகவே மனதிற்கும் அப்பால் அதிநுட்பமான அறிவு ஒன்று, ஒரே தன்மையதாய், கூடியிருப்போர் அனைவரிலும் விளங்கிக்கொண்டிருக்கிறது. அதையே "அறிவினுக்கு அறிவாகி எங்கும் நிறைகின்ற பொருளே" என்கிறார். இதற்கே 'சித்' என்று பெயர் ஒருவனுடைய சித்தம் 'சித்' ரூபியாகிய பரமாத்மாவில் ஒருங்குபடும்பொழுது ஞானயோகம் உண்டாகிறது. ஞானயோகம் பரமாத்மாவின் சித்ரூபத்தைச்சார்ந்திருக்கிறது.

பக்தியோகத்தில், பக்தன் தன்னை மறந்து பரமானந்தத்தில் ஆழ்ந்து விடுகிறான். இது பரமாத்மாவின் ஆனந்த ரூபத்தைச்சார்ந்தது.

பராசக்தியைத் திரிசதீமூலம் உபாஸிப்பது மூன்றுவித யோகத்தையும் ஒழுங்குபடுத்தி அமைந்ததுவேயாகும். பராசக்தியின் நாமாக்களின் அர்த்தத்தை அறிந்துகொண்டு அர்ச்சனை செய்வதால், இன்ன இன்ன நற்பயன்கள் உண்டாகுமென்பதை எடுத்துக்கூற முடியாது.

33. ஸ்ரீவித்யா உபாஸகர்கள் பராசக்தியை ஸ்ரீசக்கரத்தின் அதிஷ்டான தேவதையாகத் தியானித்து ஸ்ரீசக்கரத்தை பூஜாவிதிகளுக்கு இணங்கப் பூஜிக்கிறார்கள். ஸ்ரீசக்கரத்தின் ஸ்வரூபம் பலசுருதியில் ஹயக்ரீவரால் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. சுருக்கமாகக் கீழ்கண்ட சுலோகம் அதை விவரிக்கிறது:—

बिन्दुत्रिकोणवसुकोणदशारयुग्ममन्वश्रनागदलषोडशपत्रयुक्तम् ।
वृत्तत्रयं च धरणीसदनत्रयं च श्रीचक्रराज उदितं परदेवतायाः ॥

“பிந்து, ஒரு திரிகோணம், அஷ்டகோணம், உள் பத்து கோணங்கள், வெளிப்பத்து கோணங்கள், பதினான்கு கோணங்கள், எட்டுத் தளமுள்ள பத்மம், பதினாறு தளங்களுள்ள பத்மம், மூன்று வட்டங்கள், மூன்று சதுரங்கள் இவைகள் கூடியிருப்பதற்கு ஸ்ரீசக்ர ராஜம் என்று பெயர். அது பரதேவதையினுடையதென்று சொல்லப்படுகிறது.”

குறிப்பு:— ‘வஸுக்கள் எட்டு. ஆகையால் ‘வஸு கோணம்’ என்றால் எட்டுக்கோணம். பதினான்கு மனுக்கள் இருப்பதால், ‘மன்வச்ரம்’ என்பதற்குப்பதினான்கு கோணமென்று பொருள். நாகங்கள் (திக்கஜங்கள்) எட்டாகையால், ‘நாகதளம்’ என்பதற்கு எட்டுத்தளங்கள் என்று பொருள். ‘தரணீஸதனம்’ என்றால் பூபுரம்; அதாவது பூ: புவ: ஸுவ: என்ற மூன்று வியாஹ்ருதி

களினால் குறிக்கப்படுகின்றன. 'கோணம்' என்ருல் 'திரிகோணம்' (triangle) என்று பொருள். இந்த அமைப்பை இதிலுள்ள ஸ்ரீசக்கர யந்திரப்படத்தைப் பார்த்துத்தெரிந்துகொள்ளலாம்.

கோணங்களின் மொத்த எண் 1+8+10+10+14=43. பிந்து நடுத்திரிகோணத்தில் புள்ளியாக விளங்குகிறது. அது பரமானந்த மயம். அதுவே பராசக்தி. நாற்பத்தி மூன்று கோணங்களில் சக்தி தேவதைகள் தத்தம் இடத்தில் இருந்துகொண்டு பராசக்தியின் அம்சங்களாக விளங்கிக் கொண்டு அவள் கட்டளையை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிருர்கள். அஷ்டதளங்கள் ஜகத்திலுள்ள அஷ்டைசுவரியங்களையும், பதினாறு தளங்கள் பதினாறு கலைகளையும் குறிக்கின்றன. மூன்று வட்டங்கள் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களைக்குறிக்கின்றன.

ஸௌந்தரிய லஹரியில் ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் ஸ்ரீ சக்கரத்தைக் கீழ்க்கண்ட (11-வது) சுலோகத்தினால் வர்ணித்திருக்கிருர்கள் :—

चतुर्भिः श्रीकण्ठैः शिवयुवतिभिः पञ्चभिरपि
प्रभिन्नाभिः शम्भोर्नवभिरपि मूलप्रकृतिभिः ।
त्रयश्चत्वारिंशद्वसुदलकलाब्जत्रिवलय-
त्रिरेखाभिः सार्धं तव भवनकोणाः परिणताः ॥

"அம்ப! நீ வசிக்கும் அரண்மனை திரிகோண ரூபமாக இவ்விதம் அமைந்துள்ளது. அதாவது நான்கு ஸ்ரீகண்டங்களும், ஐந்து சிவயுவதிகளும் ஒன்றுகொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. இவை பரமாத்மாவின் ஒன்பது மூல பிரகிருதிகளைக் குறிக்கின்றன. இவற்றினின்றும் 43 கோணங்கள் கிடைக்கின்றன. இவற்றைச்சுற்றி அஷ்டவஸுக்களைக் குறிக்கும் எட்டுதள பத்மமும், பதினாறு கலைகளைக் குறிக்கும் பதினாறுதள பத்மமும் உள்ளன. இவற்றைச்சுற்றி மூன்று

வட்டங்களும் மூன்று சதுரங்களும் உள்ளன." 'ஸ்ரீகண்ட' மென்பது பாதத்தைக் கீழேயும், சிகரத்தை உயரேயும் வைத்துள்ள முக்கோணம். 'சிவயுவதி' என்பது பாதத்தை உயரேயும் சிகரத்தைக் கீழேயும் வைத்துள்ள முக்கோணம். ஐந்து சிவயுவதிகள், பிருதிவி, அப், தேஜஸ், வாயு, ஆகாசம் என்ற ஐந்து தன் மாத்திரைகளையும், நான்கு ஸ்ரீகண்டங்கள் மனம், புத்தி, அகங்காரம், மஹத் என்ற நான்கையும் குறிக்கின்றன. இவைகள் பரமாத்மாவின் மூலப்பிரகிருதிகள். பிருதிவி முதலிய ஐந்தும் ஸ்தூலமானவைகளாகையால் சிகரம் கீழே பொருந்தித் தலைகீழாயுள்ள முக்கோணங்கள். மனம் முதலிய நான்கும் ஸூக்ஷ்மமானவைகளாகையால் சிகரத்தை உயரே கொண்டனவாய் மேல் நோக்கியவை. இவைகளின் இணைப்பு ஸ்ரீ சக்கரயந்திரத்தின் படத்தினின்றும் விளங்கும். இவ்வித இணைப்பின் கருத்து, 'பல சுருதி'யில் விளக்கப்பட்டிருக்கிறது. 'ஜகத்' என்பது ஒன்பது மூலப்பிரகிருதிகள், அஷ்டவஸுக்கள், பதினாறு கலைகள், 'பூர்புவஸ்ஸுவ:' என்ற மூன்று மூன்று குணங்கள், வியாஹ்ருதிகள் இவைகளின் தொகுதியேயாதலால், ஸ்ரீ சக்கரம் ஜகத்தைக் குறிக்கிறது என்பதும் அதன் நடுவிலுள்ள பிந்து வடிவமாகப் பராசக்தி ஜகத்தின் அதிஷ்டான தேவதையாக விளங்குகிறாள் என்ற தத்துவமும் விளங்குகின்றன.

ஸ்ரீ சக்கரத்தின் மூன்று சதுரங்களிலுள்ள நான்கு பக்கங்களிலும் பக்கத்திற்கு ஓர் இடைவெளியாக நான்கு இடைவெளிகள் இருக்கின்றன. இவைகள் முக்தி ஸாதனங்களாகிய நான்கு ஸாதனங்களையும் குறிக்கின்றன. அதாவது கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், ராஜயோகம் எனப்படுவன. ஜகத்தின் காரணமாகிய மாயையை இந்நான்கு வழிகளில் ஏதாவது ஒன்றைப் பின்பற்றி, அகற்றிவிட்டால் ஜகத்திற்கு அப்பாலுள்ள நித்ய நிரந்தர சைதன்யானந்தத்தில் ஜீவன் கலந்து விடலாம் என்று உணர்த்தப்படுகிறது.

34. ஸ்ரீ சக்கர யந்திரத்தைச் செய்து பராசக்தியை உபாஸிக்க இயலாதவர்கள் மஞ்சளில் அம்பிகையை அவ்வப் பொழுது ஆவாஹனம் செய்து, த்ரிசதீ மந்த்ரங்களால் அர்ச்சனை செய்வார்கள். சிரத்தைக்குத் தகுந்தவாறு பலப் பிராப்தி உண்டாகும். हरिद्राकुङ्कुमादिग्धा (116) என்ற நாமா பராசக்திக்கு அமைந்துள்ளது; 'மஞ்சள் குங்குமத்தைப் பூசிக்கொண்டிருப்பவள்' என்று அர்த்தம். எப்படித் தீபத்தை ஏற்றிப் 'பரஞ்ஜோதி' என்று தியானிக்கிறோமோ, அதைப்போல் மஞ்சளைப் பராசக்தியின் பிரதீகமாகத் தியானிக்கலாம். பராசக்திக்குக் 'கல்யாணீ' என்ற பெயரும் திரிசதீயில் இருக்கிறது. அதாவது, 'ஆனந்த மயமாயிருந்துகொண்டு சோபன பரம்பரையைத் தருபவள்.' சோபன கர்மாக்களை ஆரம்பிக்கும்பொழுது மஞ்சளையும், அக்ஷதையையும் எடுத்துக்கொண்டு ஆரம்பிக்கிறார்கள். ஆகையால் மஞ்சளில் ஆவாஹனம் செய்துகொண்டு பராசக்தியைப் பூஜை செய்யலாம்.

35. காதிவித்யையின் அமைப்பைக் கவனிப்போம். ஸௌந்தர்யலஹரியில் 'ஹாதி வித்யை' என்பதை முதலில் வர்ணித்து, 'காதி வித்யை' என்பதை 'ஹாதி வித்யை'யின் சிறிய மாறுபாடாக விளக்கப்பட்டிருக்கிறது. 'ஹாதி வித்யை'யைப் பற்றிச் சொல்லும் சுலோகம்:—

शिवः शक्तिः कामः क्षितिरथ रविः शीतकिरणः
स्मरो हंसः शक्रस्तदनु च परामारहरयः ।
अमी हृल्लेखाभिस्तिसृभिरवसानेषु घटिता
भजन्ते ते वर्णास्तव जननि नामावयवताम् ॥

"அம்ப! சிவம், சக்தி, காமன், பூமி என்ற நான்கும் முதல் தொகுதி. இவற்றின் இறுதியில் 'ஹ்ரீம்' என்ற பீஜம் வைக்கப்பட்டிருக்கிறது. சூரியன், சந்திரன், ஸ்மரன் (மன்மதன்) ஹம்ஸம், (பிராணன்) சக்ரன் (இந்திரன்) இவ்வைந்தும் இரண்டாவது தொகுதி. இதன் இறுதியில்

'ஹ்ரீம்' என்ற பீஜம் மறுபடியும் வைக்கப்பட்டிருக்கிறது. பரா, மாரன் (மன்மதன்), ஹரி (விஷ்ணு) இம்மூன்றும் மூன்ருவது தொகுதி. இதன் இறுதியில் 'ஹ்ரீம்' காரம் வைக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பதினைந்தும் உன் நாமாவளி என்ற சரீரத்தின் உறுப்புகள்."

'காதி வித்யை' என்பது பின்வரும் சுலோகத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.

> स्मरं योनिं लक्ष्मीं त्रितयमिदमाद्ये तव मनो-
> निधायैके नित्ये निरवधिमहाभोगरसिकाः ।
> जपन्ति त्वां चिन्तामणिगुणनिबद्धाक्षवलयाः
> शिवाग्नौ जुह्वन्तः सुरभिघृतधाराहुतिशतैः ॥ ३३ ॥

"அம்ப! அளவற்ற மஹாபோகங்களில் ருசியுள்ளவர்கள் காமதேனுவின் நெய்யைக் கொண்டு ஏகமாயும் நித்யமாயுமுள்ள சிவமென்ற அக்னியில் நூற்றுக்கணக்கான தாரா ஆஹுதிகளை இட்டுக்கொண்டு, உன்னிடம் லயப்பட்ட மனத்துடன், ஆதியில் 'ஸ்மர' 'யோனி' 'லக்ஷ்மி' என்ற மூன்றையும் வைத்துக்கொண்டு, ஸத்வம், ரஜஸ், தமஸ என்ற மூன்று குணங்களோடு கூடிய சிந்தாமணியைப் போன்ற பஞ்சதசாக்ஷரீ மூலம் உன்னை ஜபிக்கிருர்கள்"

'ஸ்மர' 'யோனி' 'லக்ஷ்மீ' என்ற சக்தியின் பீஜங்கள் 'க்லீம்' 'ஹ்ரீம்' 'ஸ்ரீம்' எனப்படுகின்றன. இவை 'ககாரம்,' 'ஏகாரம்,' 'ஈகாரம்' என்றும் சொல்லப்படுகின்றன. ஹாதி வித்யையிலுள்ள முதல் மூன்று அக்ஷரங்களுக்குப் பதில் 'ககாரம்' 'ஏகாரம்' 'ஈகாரம்' என்பவற்றை வைத்துக்கொள்ளுவதால் 'காதிவித்யை' கிடைக்கிறது. ஸ்ரீலலிதாதிரிசதீ நாமாவளிகள் 'காதி வித்யா' ரூபமாக இருக்கின்றன. 'ஹாதி வித்யை'யினுல் முக்தியும், 'காதி வித்யை'யினுல் ஐஹிகசுகங்களும் பிறகு முக்தியும் விளைவதாகச் சொல்லப்படுகிறது.

பஞ்சதசாக்ஷரியில் எந்த அக்ஷரங்கள் சிவ (காமேசுவர) பரமென்றும், எவை சக்தி (காமேசுவரி) பரமென்றும் எவை சிவசக்தி, அதாவது உபயபரமான அக்ஷரங்களென்றும் 'பலசுருதி'யில் விளக்கப்பட்டிருக்கிறது. 'ஷோடசாக்ஷரீ' என்பது பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தில் பதினாருவது அக்ஷரத்தைச் சேர்ப்பதால் கிடைக்கும். இந்த அக்ஷரத்தை குருமுகமாய்த் தெரிந்துகொள்ளவேண்டும்.

36. முக்கியமாகத் தெரிந்து கொள்ளவேண்டியது ஒன்று உண்டு. பிரஹ்மம், பரமாத்மா, பராசக்தி, பரதேவதை சிவன் சிவா சிவம் முதலியவை அனைத்தும் பரியாய பதங்கள் (synonyms). ஆகையால் இவை மாறி மாறி உபயோகப்படுத்தப்பட்டாலும் ஒரே ஸச்சிதானந்த வஸ்துவையே குறிக்கும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

37. வெளிப்படையாக ஸ்ரீ சக்கர யந்த்ரத்தில் பராசக்தியைத் தியானித்துப் பூஜை செய்தல் ஒருபுறம் இருக்க, நமது உள்ளிலும் மூலாதாரம் முதலிய ஆறு சக்கரங்களில் சிவனும் சக்தியும் தங்கள் விலாஸங்களுடன் இருக்கிறார்கள் என்பது ஸௌந்தர்யலஹரியைப் படிப்பவர்கள் தெரிந்து கொள்ளலாம். அந்தக்கிரந்தத்தில் சக்கரங்களை வர்ணிக்கும் சுலோகங்களைப் பார்க்கவும்.

38. ஸ்ரீ லலிதாத்திரிசதீயானது ஹயக்ரீவரால் அகஸ்திய முனிவருக்கும் அவர் பத்னி லோபா முத்ரைக்கும் உபதேசிக்கப்பட்ட மந்திரம். ஹயக்ரீவர் மஹாவிஷ்ணுவின் அவதாரம். இந்த மந்திரம் ஸ்ரீ பிரஹ்மாண்டபுராணம், உத்தரகண்டத்தில் லலிதோபாக்கியானத்தில் அடங்கியுள்ளது.

திரிசதீநாமாவளிகள் ஸ்தூலமாக சில அர்த்தங்களுடன் கூடியிருந்தாலும், வேதாந்த சாஸ்த்ரத்திற்குப் பொருந்திய லக்ஷ்மார்த்தங்கள் நிரம்பியுள்ளன. அவற்றை ஸ்ரீமத்

சங்கர பகவத் பாதர்கள் தமது பாஷ்யத்தில் விவரித்திருக்கிறார்கள். சுருதி ஸ்மிருதி வாக்கியங்களுடன் அனைத்தையும் ஊர்ஜிதப்படுத்தியிருக்கிறார்கள். அந்தக் கருத்துக்களையே அநேகமாய்ப் பின்பற்றி த்ரிசதீ மந்த்ரங்களுக்கு இந்த நூலில் தமிழில் அகல உரை எழுதப்பட்டிருக்கிறது.

விளக்கப்படும் வஸ்துவோ ஸூக்ஷ்மத்திலும் ஸூக்ஷ்மம் மஹத்தைவிட மஹத்து अणोरणीयान् महतो महीयान् விளக்கும் கருவியோ மாயா உபாதியுடன்கூடி, தேசகாலங்களினால் கட்டுப்படுத்தப்பட்ட மனம். ஆகையால் எவ்வளவு முயன்றாலும் சரிவர விளக்குதல் சாத்தியமில்லை. ஆகவே சுருதியும்கூட ' यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह ' என்று சொல்லிவிட்டது. பகவதவதார புருஷர்களான பகவத் பாதர்களினாலேதான் இதைச் செய்யமுடியும். கணிதத்தில் 0 (zero) என்பதற்கு ' பூஜ்யம் ' என்ற பெயர் வழக்கிலிருந்து வருகிறது. அதாவ்து தனது சொத்தாக (மதிப்பாக) ஒன்றையும் வைத்துக்கொள்ளாவிடினும் பிற எண்களுடைய மதிப்பைக் கணக்கிலடங்காத மடங்கு உயர்த்திவிடுகிறது. ' 1 ' என்பதன் பின்னால் இரண்டு பூஜ்யத்தைச் சேர்த்தால் ' 100 ' ஆகிவிடுகிறது. பூஜ்யர்களின் தன்மை இதுவே. அவர்களுடைய ஸங்கம் இருந்தால் போதும். அண்டுபவர்களின் கௌரவம், மேதையெல்லாம் கணக்கில் அடங்காத வண்ணம் அதிகரித்துவிடும். அதைப்போல் உலகத்தில் ஸாக்ஷிமாத்ரமாக விளங்கிக்கொண்டு பராசக்தி தத்வத்தை லலிதாத்ரிசதீ பாஷ்யரூபமாகப் பிரகாசப்படுத்திய ஸ்ரீமத் சங்கரபகவத் பாதர்களுடன் மானஸிக ஸங்கத்தினாலே இந்தத் தமிழ் அகலவுரை மேன்மையுடன் விளங்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

ओं तत् सत् ॥

ब्रह्मार्पणमस्तु ॥

V. ராமய்யர்



ஸ்ரீ சக்ரம்

|| श्रीः ||

# || श्रीललितात्रिशतीस्तोत्रम् ||

## || पूर्वभागः ||

# ஸ்ரீ லலிதா த்ரிசதீ ஸ்தோத்திரம்

## பூர்வபாகம்.

---

अगस्त्य उवाच —

हयग्रीव दयासिन्धो भगवन् शिष्यवत्सल ।
त्वत्तः श्रुतमशेषेण श्रोतव्यं यद्यदस्ति तत् ॥ १ ॥

**அகஸ்த்ய உவாச —**

ஹயக்ரீவ தயாஸிந்தோ பகவன் ஶிஷ்ய வத்ஸல ।
த்வத்த: ச்ருதமஶேஷேண ஶ்ரோதவ்யம் யத் யதஸ்தி தத் ॥

அகஸ்தியர் சொல்லலுற்றார் :—

" ஹயக்ரீவரே ! கருணைக்கடலே ! பகவன் ! சிஷ்யர்களிடம் அன்புமிக்கவரே ! தங்களிடமிருந்து அறிந்துகொள்ளவேண்டியது அனைத்தும் என்னால் கேட்கப்பட்டு அறிந்துகொள்ளப்பட்டது. 1

रहस्यनामसाहस्रमपि त्वत्तः श्रुतं मया ।
इतः परं मे नास्त्येव श्रोतव्यमिति निश्चयः ॥ २ ॥

ரஹஸ்ய நாம ஸாஹஸ்ரமபி த்வத்த: ச்ருதம் மயா ।
இத: பரம் மே நாஸ்த்யேவ ஶ்ரோதவ்யமிதி நிச்சய: ॥

(தேவியினுடைய) ஆயிரம் நாமாக்களும், மிகவும் ரஹஸ்ய மாயினும், தங்களிடமிருந்து நான் அறிந்துகொண்டேன். இதற்கு மேல் கேட்டு அறிந்துகொள்ளவேண்டியது ஒன்றுமில்லையென்பது தீர்மானம். 2

तथाऽपि मम चित्तस्य पर्याप्तिर्नैव जायते ।
कार्त्स्न्यार्थः प्राप्य इत्येव शोचयिष्याम्यहं प्रभो ॥ ३ ॥

ததாபி மம சித்தஸ்ய பர்யாப்திர்நைவ ஜாயதே ।
கார்த்ஸ்ந்யார்த்த: ப்ராப்ய இத்யேவ சோசயிஷ்யாம்யஹம் ப்ரபோ ॥

ஆயினும், பிரபோ ! பிரயோஜனம் அனைத்தையும் அடைந்தும் கூட, எனது சித்தத்தில் திருப்தி உண்டாகவில்லையே. இதனால் சாந்தியின்றித் துக்கம் மேலிடுகிறதே. 3

किमिदं कारणं ब्रूहि ज्ञातव्यांशोऽस्ति वा पुनः ।
अस्ति चेन्मम तद्ब्रूहि ब्रूहीत्युक्त्वा प्रणम्य तम् ॥ ४ ॥

सूत उवाच —

समालल्म्बे तत्पादयुगलं कलशोद्भवः ।

கிமிதம் காரணம் ப்ரூஹி ஞாதவ்யாம்சோஸ்தி வா புந: ।
அஸ்தி சேந்மம தத்ப்ரூஹி ப்ரூஹீத்யுக்த்வா ப்ரணம்ய தம் ॥

ஸூத உவாச —

ஸமாலலம்பே தத்பாதயுகளம் கலசோத்பவ: ।

இதன் காரணமென்ன ? தங்களிடம் நான் அறிந்து கொள்ள வேண்டியது ஏதாவது பாக்கியிருக்கிறதா? இருக்கிறதென்றால் அதையும் சொல்லுங்கள், சொல்லுங்கள் " (ஸூதபௌராணிகர் சொன்னார்) என்று மொழிந்து அவரை நமஸ்கரித்து, கலசத்திலிருந்து உண்டான அகஸ்திய முனிவர் ஹயக்ரீவருடைய இரண்டு பாதங்களையும் பிடித்துக்கொண்டார்.

हयाननो भीतभीतः किमिदं किमिदं त्विति ॥ ५ ॥
मुञ्च मुञ्चेति तं चोक्त्वा चिन्ताक्रान्तो बभूव सः ।

ஹயாநநோ பீதபீத: கிமிதம் கிமிதம் த்விதி ॥
முஞ்ச முஞ்சேதி தம் சோக்த்வா சிந்தாக்ராந்தோ பபூவ ஸ: ।

ஹயக்ரீவர் நடுநடுங்கி, 'இதென்ன காரியம், இதென்ன காரியம்? ' என்றும் " காலை விடுங்கள், காலை விடுங்கள் " என்றும் சொல்லிச் சிந்தையில் ஆழ்ந்துவிட்டார். 5

चिरं विचार्य निश्चिन्वन्वक्तव्यं न मयेत्यसौ ॥ ६ ॥
तूष्णीं स्थितः स्मरन्नाज्ञां ललिताम्बाकृतां पुरा ।

சிரம் விசார்ய நிச்சின்வன் வக்தவ்யம் ந மயேத்யஸௌ ॥
தூஷ்ணீம் ஸ்திதः ஸ்மரந்நாக்ஞாம் லலிதாம்பாக்ருதாம் புரா ।

வெகுநேரம் ஆலோசித்து, 'நான் சொல்லவேண்டியது இனி ஒன்றும் இல்லையே' என்று தீர்மானித்து, முன்னொரு காலத்தில் லலிதாம்பிகையால் இடப்பட்ட கட்டளையை நினைத்துக்கொண்டு மௌனமாக இருந்தார். 6½

प्रणम्य विप्रं स मुनिस्तत्पादावत्यजन्स्थितः ॥ ७ ॥
वर्षत्रयावधि तदा गुरुशिष्यौ तथा स्थितौ ।
तच्छृण्वन्तश्च पश्यन्तः सर्वे लोकाः सुविस्मिताः ॥ ८ ॥

ப்ரணம்ய விப்ரம் ஸ முநிஸ்தத்பாதாவத்யஜந் ஸ்திதः ॥
வர்ஷத்ரயாவதி ததா குருசிஷ்யௌ ததா ஸ்திதௌ ।
தச்ச்ருண்வந்தச்ச பச்யந்தः ஸர்வே லோகாः ஸுவிஸ்மிதாः ॥

அகஸ்திய முனிவரும் ஹயக்ரீவருடைய பாதங்களை விடாமல் அவரை வணங்கிக்கொண்டிருந்தார். 7

மூன்று வருஷ காலம் இவ்வண்ணமிருந்த குரு சிஷ்யர்களைப் பார்த்தும், அவர்களைப்பற்றிக் கேட்டும், மக்கள் அனைவரும் வியப்பை அடைந்தனர். 8

ततः श्रीललितादेवी कामेश्वरसमन्विता ।
प्रादुर्भूय हयग्रीवं रहस्येवमचोदयत् ॥ ९ ॥

ததः ஸ்ரீலலிதாதேவீ காமேச்வரஸமந்விதா ।
ப்ராதுர்பூய ஹயக்ரீவம் ரஹஸ்யேவமசோதயத் ॥

பிறகு, ஸ்ரீ லலிதாதேவி காமேசுவரருடன் ஹயக்ரீவர் முன் தோன்றி, ரஹஸ்யமாகக் கீழ்கண்டவாறு சொன்னாள். 9

श्रीदेव्युवाच —

अश्वाननावयोः प्रीतिः शास्त्रविश्वासिनि त्वयि ।
राज्यं देयं शिरो देयं न देया षोडशाक्षरी ॥ १० ॥

ஸ்ரீதேவ்யுவாச—

அச்வாநநாவயோ: ப்ரீதி: சாஸ்த்ரவிச்வாஸிநி த்வயி ।
ராஜ்யம் தேயம் சிரோ தேயம் ந தேயா ஷோடசாக்ஷரீ ॥

ஸ்ரீதேவீ சொல்லுவது :—

" குதிரை முகத்தோனே ! (ஹயக்ரீவனே !) உமக்கு சாஸ்திரங்களில் பக்தியும் நம்பிக்கையும் அதிகம். உம்மிடத்தில் எங்களுக்கு மிகுந்த அன்பு. ஆட்சியைக் கொடுக்கலாம். சிரஸ்ஸையும் கொடுக்கலாம். ஷோடசாக்ஷரீ (16 அக்ஷரங்கள் பொருந்திய) வித்யையை மட்டும் கொடுக்கலாகாது. 10

स्वमातृजारवद्गोप्या विद्यैषेत्यागमा जगुः ।
ततोऽतिगोपनीया मे सर्वपूर्तिकरी स्तुतिः ॥ ११ ॥

मया कामेश्वरेणापि कृता संगोपिता भृशम् ।

ஸ்வமாத்ரு ஜாரவத் கோப்யா வித்யைஷேத்யாகமா ஜகு: ।
ததோதிகோபநீயா மே ஸர்வபூர்த்திகரீ ஸ்துதி: ॥
மயா காமேச்வரேணாபி க்ருதா ஸங்கோபிதா ப்ருசம் ।

தன் தாயின் கற்புக்குத் (எதிர்பாராதவிதத்தில்) தீங்கு ஏற்பட்டுவிட்டால், அதை எவ்வளவு மறைவாக ஒருவன் வைத்துக்கொள்ளுவானோ அவ்வளவு மறைவாக இந்த (ஷோடசாக்ஷரீ) வித்யையை வைத்துக்கொள்ளவேண்டுமென்று வேதங்கள் கூறுகின்றன.

என்னாலும் காமேச்வரராலும் இயற்றப்பட்டு ரஹஸ்யமாக வைத்துக்கொண்டிருக்கிற, எல்லா அபீஷ்டங்களையும் நிறைவேற்றிக் கொடுக்கும் என் ஸ்தோத்திரத்தை அதைக் காட்டிலும் மிகவும் ரஹஸ்யமாக வைத்துக்கொள்ளவேண்டும், 11½

मदाज्ञया वचोदेव्यश्चक्रुर्नामसहस्रकम् ॥ १२ ॥

आवाभ्यां कथिता मुख्या सर्वपूर्तिकरी स्तुतिः ।
सर्वक्रियाणां वैकल्यपूर्तिर्यज्जपतो भवेत् ॥ १३ ॥

सर्वपूर्तिकरं तस्मादिदं नाम कृतं मया ।
तद्ब्रूहि त्वमगस्त्याय पात्रमेव न संशयः ॥ १४ ॥

மதாக்ஞயா வசோதேவ்யச்சக்ருர்நாம ஸஹஸ்ரகம் ॥

ஆவாப்யாம் கதிதா முக்யா ஸர்வபூர்த்திகரீ ஸ்துதி: ।
ஸர்வக்ரியாணாம் வைகல்யபூர்த்திர்யஜ்ஜபதோ பவேத் ॥

ஸர்வபூர்த்திகரம் தஸ்மாதிதம் நாம க்ருதம் மயா ।
தத்ப்ரூஹி த்வமகஸ்த்யாய பாத்ரமேவ ந ஸம்ஶய: ॥

எங்கள் கட்டளைக்கு இணங்கி வாக் தேவதைகள் (எனது) ஸஹஸ்ரநாமங்களைச் செய்தார்கள். ஆனால் முக்கியமாக விளங்கும் இந்த 'ஸர்வபூர்த்திகரீ' என்ற ஸ்துதியானது எங்களால் இயற்றப் பட்டது. 12½

எந்தக்கர்மாவைச் செய்தாலும், அதில் (அறிந்தோ அறியாமலோ) ஏற்படும் குற்றங்குறைகள் அனைத்தும் இந்த ஸ்தோத்திரத்தை ஜபம் செய்த மாத்திரத்தில் நீங்கிவிடும். கர்மாவும் பூர்த்தியடையும். இந்தக் காரணத்தால் இந்த ஸ்துதிக்கு 'ஸர்வபூர்த்திகரம்' என்ற பெயர் என்னால் கொடுக்கப்பட்டது. இதைப் பெறுவதற்கு அகஸ்தியர் தகுதி யுள்ளவர். ஆகையால் இந்த ஸ்தோத்திரத்தை நீர் அகஸ்தியருக்குச் சொல்லும். 14

पत्न्यस्य लोपामुद्राख्या मामुपास्तेऽतिभक्तितः ।
अयं च नितरां भक्तस्तस्मादस्य वदस्व तत् ॥ १५ ॥

பத்ந்யஸ்ய லோபாமுத்ராக்யா மாமுபாஸ்தேऽதிபக்தித: ।
அயம் ச நிதராம் பக்தஸ்தஸ்மாதஸ்ய வதஸ்வ தத் ॥

இவருடைய மனைவியாகிய லோபாமுத்ரை என்னிடம் வியக்கத் தக்க பக்தியுடன் கூடி, என்னை உபாஸிக்கிறாள். இந்த அகஸ்தியரும்

என்னிடம் மிகுந்த பக்தி கொண்டவர். ஆகையால் இவருக்கு இந்த ஸ்தோத்திரத்தை நீர் சொல்லவேண்டும். 15

अमुञ्चमानस्त्वत्पादौ वर्षत्रयमसौ स्थितः ।
एतज्ज्ञातुमतो भक्त्या हीदमेव निदर्शनम् ॥ १६ ॥

அமுஞ்சமாநஸ்த்வத்பாதௌ வர்ஷத்ரயமஸௌ ஸ்தித: ।
ஏதத் ஜ்ஞாதுமதோ பக்த்யா ஹீதமேவ நிதர்ஶநம் ॥

இந்த வித்யையைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று மூன்று ஆண்டுகளாக உமது பாதங்களை விடாமல் பிடித்துக் கொண்டிருக்கிறான்றே! இதுவே இவர் பக்திக்கு அத்தாட்சி. 16

चित्तपर्याप्तिरेतस्य नान्यथा संभविष्यति ।
सर्वपूर्तिकरं तस्मादनुज्ञातो मया वद ॥ १७ ॥

சித்த பர்யாப்திரேதஸ்ய நாந்யதா ஸம்பவிஷ்யதி ।
ஸர்வபூர்த்திகரம் தஸ்மாதநுஜ்ஞாதோ மயா வத ॥

வேறு எவ்விதத்திலும் இந்த அகஸ்தியருக்கு மனச்சாந்தி உண்டாகாது. ஆகையால் ஸர்வபூர்த்திகரீ வித்யையை இவருக்கு உபதேசிப்பாயாக. அதற்கு நான் அனுமதி கொடுக்கிறேன்". 17

सूत उवाच —

इत्युक्त्वाऽन्तरधादम्बा कामेश्वरसमन्विता ।
अथोत्थाप्य हयग्रीवः पाणिभ्यां कुम्भसंभवम् ॥ १८ ॥

संस्थाप्य निकटे वाचमुवाच भृशविस्मितः ।

ஸூத உவாச—

இத்யுக்த்வாऽந்தரதாதம்பா காமேச்வர ஸமந்விதா ।
அதோத்தாப்ய ஹயக்ரீவ: பாணிப்யாம் கும்பஸம்பவம் ॥
ஸம்ஸ்தாப்ய நிகடே வாசமுவாச ப்ருஶவிஸ்மித: ।

ஸூதபௌராணிகர் சொல்லுவது :—

இவ்வண்ணம் உரைத்த பின்னர் காமேசுவருடன் அம்பிகை மறைந்துவிட்டாள். பின்பு ஹயக்ரீவர் அகஸ்தியரைக் கையினால் தூக்கி

அண்டையில் அமர்த்தி அளவிலா வியப்புடன் பின்வருமாறு சொல்லலுற்றார். 18½

हयग्रीव उवाच—

**कृतार्थोऽसि कृतार्थोऽसि कृतार्थोऽसि घटोद्भव ॥ १९ ॥**

**ஹயக்ரீவ உவாச —**

க்ருதார்த்தோஸி க்ருதார்த்தோஸி க்ருதார்த்தோஸி கடோத்பவ ॥

ஹயக்ரீவர் சொன்னது:—

"கும்ப முனிவரே! நீர் கிருதார்த்தர் ஆகிவிட்டீர். வாழ்க்கைப் பயனை அடைந்துவிட்டீர். இம்மூன்று ஆண்டுகளில் செய்த தவத்தின் நற்பயனை எய்திவிட்டீர். 19

**त्वत्समो ललिताभक्तो नास्ति नास्ति जगत्त्रये ।**
**येनागस्त्य स्वयं देवी तव वक्तव्यमन्वशात् ॥ २० ॥**

த்வத்ஸமோ லலிதாபக்தோ நாஸ்தி நாஸ்தி ஜகத்த்ரயே ।
யேநாகஸ்த்ய ஸ்வயம் தேவீ தவ வக்தவ்யமந்வஶாத் ॥

அகஸ்திய முனிவரே! மூவுலகிலும் உமக்கு இணையான (லலிதா தேவியின்) பக்தர் இல்லை, இல்லை. ஏனென்றால், தேவியே நேரில் தோன்றி உமக்கு உபதேசிக்க வேண்டியதை உபதேசிக்கும்படி ஆணையிட்டிருக்கிறாள். 20

**सच्छिष्येण त्वया चाहं दृष्टवानस्मि तां शिवाम् ।**
**यतन्ते दर्शनार्थाय ब्रह्मविष्ण्वीशपूर्वकाः ॥ २१ ॥**

ஸச்சிஷ்யேண த்வயா சாஹம் த்ருஷ்டவானஸ்மி தாம் ஶிவாம் ।
யதந்தே தர்ஶனார்த்தாய ப்ரஹ்மவிஷ்ண்வீஶபூர்வகா: ॥

எந்த தேவியை நேரில் காண, மும்மூர்த்திகள் முதலியோர் முயலுகின்றனரோ அந்த மங்களமூர்த்தியாகிய தேவியை உத்தம சிஷ்யராகிய உம் மூலம் நானும் தரிசனம் செய்தேன். 21

**अतः परं ते वक्ष्यामि सर्वपूर्तिकरं स्तवम् ।**
**यस्य स्मरणमात्रेण पर्याप्तिस्ते भवेद्धृदि ॥ २२ ॥**

அத: பரம் தே வக்ஷ்யாமி ஸர்வபூர்த்திகரம் ஸ்தவம் ।
யஸ்ய ஸ்மரண மாத்ரேண பர்யாப்திஸ்தே பவேத் ஹ்ருதி ॥

இனிமேல் ஸர்வபூர்த்திகரீ ஸ்துதியை உமக்கு உபதேசிக்கிறேன். இதை நினைத்த மாத்திரத்தில் உமது இருதயத்தில் திருப்தியும் சாந்தியும் நிலவும். 22

रहस्यनामसाहस्रादपि गुह्यतमं मुने ।
आवश्यकं ततोऽप्येतल्ललितां समुपासितुम् ॥ २३ ॥
तदहं संप्रवक्ष्यामि ललिताम्बानुशासनात् ।

ரஹஸ்ய நாம ஸாஹஸ்ராதபி குஹ்யதமம் முநே ।
ஆவச்யகம் ததோப்யேதத் லலிதாம் ஸமுபாஸிதும் ॥
ததஹம் ஸம்ப்ரவக்ஷ்யாமி லலிதாம்பாநுஶாஸநாத் ।

முனிவரே! தேவீ ஸஹஸ்ரநாமத்தைக் காட்டிலும் இது ரகஸ்யமானது. ஆகையால் லலிதா தேவியை உபாஸிக்க இது ஸஹஸ்ர நாமத்தைக் காட்டிலும் முக்கியத்வம் வாய்ந்தது. 23

இந்த வித்யையை லலிதாம்பாளுடைய கட்டளைக்கு இணங்கித் தெளிவாக உரைக்கிறேன். 23½

श्रीमत्पञ्चदशाक्षर्याः कादिवर्णक्रमान्मुने ॥ २४ ॥
पृथग्विंशतिनामानि कथितानि घटोद्भव ।
आहृत्य नाम्नां त्रिशती सर्वसंपूर्तिकारिणी ॥ २५ ॥

ஸ்ரீமத்பஞ்சதஶாக்ஷர்யா: காதிவர்ண க்ரமான் முநே ॥
ப்ருதக் விம்சதி நாமாநி கதிதாநி கடோத்பவ ।
ஆஹ்ருத்ய நாம்நாம் த்ரிஶதீ ஸர்வ ஸம்பூர்த்தி காரிணீ ॥

ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ மந்திரத்திலுள்ள 'க' முதலான 15 அக்ஷரங்களில் வரிசையாக ஒவ்வொரு அக்ஷரத்தையும் முதன்மையாகக் கொண்டது 20 நாமாக்கள். இவ்வாறு 15 அக்ஷரங்களுக்கும் (20×15) 300 நாமாக்கள் இந்த ஸர்வஸம்பூர்த்திகர ஸ்தோத்ரத்தில் கூறப்பட்டு இருக்கின்றன.

रहस्यातिरहस्यैषा गोपनीया प्रयत्नतः ।
तां शृणुष्व महाभाग सावधानेन चेतसा ॥ २६ ॥

ரஹஸ்யாதிரஹஸ்யைஷா கோபநீயா ப்ரயத்நத: ।
தாம் ச்ருணுஷ்வ மஹாபாக ஸாவதாநேந சேதஸா ॥

இந்த வித்யை மிக மிக ரஹஸ்யமானது. கண்ணுங்கருத்துமாகக் காக்கப்படவேண்டும். சிறந்த பாக்கியம் பொருந்தியவரே! சித்தத்தைக் குவித்து இந்த வித்யையைக் கேளும். (26)

केवलं नामबुद्धिस्ते न कार्या तेषु कुम्भज ।
मन्त्रात्मकत्वमेतेषां नाम्नां नामात्मताऽपि च ॥ २७ ॥

கேவலம் நாமபுத்திஸ்தே ந கார்யா தேஷு கும்பஜ ।
மந்த்ராத்மகத்வமேதேஷாம் நாம்நாம் நாமாத்மதாபி ச ॥

இந்த (முன்னூறு) நாமாக்களும் கேவலம் பெயர்கள் போன்றவையல்ல. அவ்விதம் அவற்றை நினைக்கலாகாது. அகஸ்திய முனிவரே! இவைகள் நாமாக்களாயிருந்தாலும் எல்லாம் மந்திரங்கள். (27)

तस्मादेकाग्रमनसा श्रोतव्यं च त्वया सदा ।

தஸ்மாதேகாக்ரமநஸா ச்ரோதவ்யம் ச த்வயா ஸதா ।

ஆகையால் மனத்தை ஒரே நிலையில் நிறுத்திக் கொண்டு இம் மந்திரங்களை நீர் கேட்கவேண்டும். (27½)

सूत उवाच—

इत्युक्त्वा तं हयग्रीवः प्रोचे नामशतत्रयम् ॥ २८ ॥

ஸூத உவாச—

இத்யுக்த்வா தம் ஹயக்ரீவ: ப்ரோசே நாமசதத்ரயம் ॥

ஸூதபௌராணிகர் சொல்வது:—

"இப்படி உரைத்தபின் ஹயக்ரீவர் தேவியின் முன்னூறு நாமங்களாகிய மந்திரங்களை அகஸ்தியருக்கு உபதேசித்தார்". (28)

## ॥ स्तोत्रभागः ॥

**ककाररूपा कल्याणी कल्याणगुणशालिनी ।**
**कल्याणशैलनिलया कमनीया कलावती ॥ १ ॥**

## ஸ்தோத்திர பாகம்.

ககாரரூபா கல்யாணீ கல்யாண குணஶாலிநீ ।
கல்யாண ஶைல நிலயா கமநீயா கலாவதீ ॥

**ककाररूपा ।**

***ககாரரூபா*** **(1)**

**அர்த்தம் 1.** 'க' என்ற எழுத்தின் வடிவம் யாரை ஞாபகப் படுத்துகிறதோ அந்தப் பராசக்தி.

விவரணம்:—வடமொழியிலும் தென்மொழியிலும் (क) 'க' என்பது முதல் மெய்யெழுத்து. 'க்' என்ற மெய்யுருபுடன் 'அ' என்ற உயிரைச் சேர்ப்பதால் 'க' என்ற சப்தம் கிடைக்கிறது. இந்த 'க' என்ற எழுத்து பதங்களிலும், வாக்கியங்களிலும் தொகுக்கப் பட்டுக கருத்தை வெளியிட உபயோகப்படுகிறது. உடல் (மெய்) என்ற உருவத்துடன் உயிர் இணைந்து இருப்பதால் சிருஷ்டியில் தோன்றும் எல்லாப் பொருள்களின் அசைவும் செயல்களும் உண்டா கின்றன. பராசக்தி உடலாகவும், உயிராகவும் இருந்து அனைத்தையும் இயங்குமாறு செய்கிருள். இந்த உண்மையை விளக்கும் 'க' என்ற வடிவமாய அவள் விளங்குகிருள்.

**அர்த்தம் 2.** "காதிவித்யா" ரூபமாக இருப்பவள்.

விவரணம்:—"காதிவித்யா" என்பதைப்பற்றி முன்னுரையில் பார்க்கவும். அந்த மந்திரமே அம்பிகையின் சரீரம்.

**அர்த்தம் 3.** 'ஹிரண்ய கர்ப்ப' ரூபமாயிருக்கும் பராசக்தி.

விவரணம்:—உலகங்கள் தோன்றுவதற்கு முன் அவைகள் 'ஹிரண்ய கர்ப்ப' உருவத்தில் அமைந்திருந்தன வென்றும், அந்த நிலையில் பராசக்தி ஹிரண்ய கர்ப்ப உருவத்துடன் அண்டங்களைத் தோற்றுவித்து அவைகளைக் காத்தனள் என்றும் சொல்லப்படுகிறது.

**அர்த்தம் 4.** 'ஜல' உருவமாக நிற்பவள்.

விவரணம் :— பஞ்சபூதங்களில் ஜலமானது உலகங்கள் ஜீவிப்ப தற்கு முக்ய ஆதாரமாய் இருப்பதால், ஜல வடிவமாய்ப் பராசக்தி இருக்கிருள் என்று பொருள்.

**அர்த்தம் 5.** 'சிரஸ்' என்ற அங்கமாய் இருப்பவள்.

விவரணம் :— சிரஸ்ஸில் அமிருதம் இருப்பதாகவும், குண்டலினீ சக்தியை மூலாதாரத்திலிருந்து எழுப்பி 'ஸ்வாதிஷ்டானம்' 'மணிபூரகம்' முதலிய சக்ரங்களின் வழியாக, சிரஸ்ஸில் இருக்கும் 'ஸஹஸ்ராரம்' என்று சொல்லப்படும் ஆயிரம் தளங்களுள்ள சக்ரத்தில் சேர்த்தால், ஜீவன் ஈச்வரன் போலாகிவிடுகிருன் என்றும் யோக சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. அதுபோல் 'க' என்ற எழுத்து, காதிவித்யா மந்த்ரத்தில் முதல் எழுத்தாக நின்று கொண்டு தலைமை வகித்து உபாஸகனுக்குச் சிவபாவத்தைக் கொடுக்கிறது.

**அர்த்தம் 6.** ஸுகரூபமாக விளங்குபவள்.

விவரணம் :— தஹராகாசத்தில் விளங்கும் ஆனந்த ரூபமான ப்ரஹ்மத்தில் எல்லோருக்கும் இயற்கையாகவே ப்ரீதி ஏற்படுவதுபோல், யாவரும் பிரியப்படும் காதிவித்யையில் முதல் எழுத்தாயிருப்பதால் ககாரமும் உயர்ந்தது. அந்த ககாரரூபமாக அம்பாள் விளங்குகிருள்.

'ககாரரூபா' என்பது 'க' என்ற அக்ஷரத்தின் பொருளாக நிற்பவள் என்பதை குறிக்கிறது. ககாரத்திற்கு கோசத்தில் ஹிரண்ய கர்ப்பர், ஜலம், சிரஸ், ஸுகம் முதலான பொருள்கள் கூறப்பட்டிருக் கின்றன. ஆகையால் அவைகளின் உருவாக இருப்பவளென்று கிடைக்கிறது.

**ॐ ककाररूपायै नमः ।**

ஓம் ககார ரூபாயை நம: 1

**कल्याणी ।**

***கல்யாணீ*** **(2)**

ஆனந்தரூபியாக விளங்குபவள்.

விவரணம் :- தைத்திரீய உபநிஷத்தில், 'பிரம்மானந்தவல்லி' யில் யௌவனம், வித்யை, காயபலம், மனோபலம், இந்திரியக் கட்டுப்பாடு,

இவை அனைத்தும் பொருந்திய ஏக சக்ராதிபதியினுடைய ஆனந்தத்தை மனுஷ்யானந்தம் என்று கூறி, அதிலிருந்து ஆரம்பித்து மனுஷ்ய கந்தர்வர், தேவ கந்தர்வர், பித்ருக்கள், ஆஜாந தேவர், கர்மதேவர், தேவர், இந்திரன், பிருஹஸ்பதி, பிரஜாபதி இவர்களுடைய ஆனந்தம் படிப்படியாக நூறுமடங்கு அதிகரித்தது என்று உரைத்து பிரஹ்மானந்தமே ஆனந்தத்தின் உயர்ந்த எல்லை ( परा काष्ठा ) என்று கூறப்பட்டிருக்கிறது. இந்த ஆனந்தம் ஜீவர்களிடம் அஞ்ஞான உபாதியினால் மறைக்கப்பட்டு ஆங்காங்கு சிறிது காணப்படுகிறது. ப்ரஹ்மானந்தக் கடலின் ஒரு திவலைதான் உலகிலுள்ள ஆனந்தமெல்லாம். பராசக்தியின் ஸ்வரூபம் பிரம்மானந்தமே. [1] 'विज्ञानमानन्दं ब्रह्म' என்று உபநிஷத் கூறுகிறது.

ॐ कल्याण्यै नमः ।

ஓம் கல்யாண்யை நம:- 2

कल्याणगुणशालिनी ।

***கல்யாணகுணசாலிநீ*** **(3)**

**(i)** ஸுகத்தை உண்டுபண்ணும் குணங்கள் யாருடைய உடைமையினின்று சோபிக்கின்றனவோ அவள்.

விவரணம் :— கல்யாண குணங்கள் என்பன ஸுகத்தை உண்டு பண்ணும் குணங்கள். அவையாவன:— இச்சாசக்தி, க்ரியாசக்தி, ஞானசக்தி, அனைத்தையும் அடக்கியாளும் தன்மை (ஸர்வேச்வரத்வம்), ஒப்பற்ற அழகு முதலியன. இவைகள் பராசக்தியின் உடைமையில் இருப்பதால்தான் சோபிக்கின்றன என்பது கருத்து.

**(ii)** கல்யாண குணங்கள் யாரைப் பிரகாசப்படுத்துகின்றனவோ அவள்.

விவரணம் :—பராசக்தி சுத்த சைதன்ய வடிவமாயிருப்பினும், முற்கூறிய கல்யாண குணங்களினால் நமது அறிவுக்கு விளங்குகிறாள் என்று பொருள்.

ॐ कल्याणगुणशालिन्यै नमः ।

ஓம் கல்யாண குணசாலின்யை நம: 3

कल्याणशैलनिलया ।

***கல்யாணசைலநிலயா*** **(4)**

---

1. பிருஹதாரண்யக உபநிஷத் 3-9-28

(i) மலைபோல் ஆனந்தமே கனமாக (கெட்டியாக) உள்ள ஸ்வஸ்வரூபத்தில் வஸிப்பவள்.

விவரணம்:—பராசக்தி ஆனந்தஸ்வரூபிணி, அவளைத் தாங்கும் பொருள் வேறு கிடையாது. ஆனந்த ஸ்வரூபமான தன்னில் தானே இருப்பவளாகக் கருதப்படுகிருள்.

[1] स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वे महिम्नि ॥

'பரமாத்மாவிற்கு ஆதாரம் எது? — தானே தான் தனக்கு ஆதாரம்".

(ii) ஆனந்தமயகோசத்தை இருப்பிடமாக உடையவள்.

விவரணம்:—கல்யாணம் என்ருல் ஆனந்தம். இது மலைபோல் கெட்டியாயிருப்பது ஆனந்தமயகோசம். ஒவ்வொரு ஜீவனிடத்திலும் அன்னமயம், ப்ராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்று ஐந்து கோசங்கள் இருக்கின்றன.

(iii) ஸுவர்ண மலையாகிய மேருபர்வதத்தின் மத்ய சிகரத்தில் வஸிப்பவள்.

ॐ कल्याणशैलनिलयायै नमः ।

ஓம் கல்யாண சைல நிலயாயை நம: 4

कमनीया ।

*கமநீயா* (5)

(i) பரமானந்த ஸ்வரூபிணியாயிருப்பதால் எல்லோராலும் பிரியப்படத்தக்கவள்.

விவரணம்:—[2] को ह्येवान्यात्कः प्राण्यात् यदेष आकाश आनन्दो न स्यात् । என்பது ச்ருதி வசனம். இதன் பொருள் 'பரமானந்தரூபி எங்கும் நிறைந்திருக்காவிடில், யாரால் ஜீவிக்கமுடியும்? யாரால் அசைய முடியும்?' என்பது. எல்லோரும் ஜீவிக்க ஆசைப்படுவதால் ஆனந்த ரூபிணியாகிய பராசக்தியினிடத்தில் யாவருக்கும் அளவற்ற பிரேமை ஏற்படுகிறது.

(ii) ஸுகத்தை விரும்புபவர்களுடைய மனத்தை இழுக்கிறவள்.

விவரணம்:—அனைவரும் ஸுகத்தையடைய ஆசைப்படுகின்றனர். மாயையில் கட்டுண்ட மாந்தர்கள் வாழ்க்கையில் ஸுகத்தையடைய

1. சாந்தோக்யம் 7–24
2. தைத்திரீய உபநிஷத் ஆநந்தவல்லி 4–6.

இஷ்டதேவதைகளை பக்தியுடனும் மிகுந்த பிரியத்துடனும் பூஜிக்கிறார்கள். இவர்களுக்குப் பலனைக்கொடுத்து ஆசையைப் பூர்த்தி செய்வது பராசக்தியே. ஆகையால் அவர்களின் மனத்தைத் தன்பால் இழுக்கும் சக்தியுடையவளாகக் கருதப்படுகிறாள்.

ஞானிகளுக்கோவெனில், அவர்கள் ஆசையனைத்தையும் துறந்த போதிலும், பராசக்தியைத் தியானிப்பதில், அவர்கள் பரமானந்தத்தை அடைவதால், அவர்களுடைய மனதையும் இழுக்கிறாள் என்றவாறு.

**ॐ कमनीयायै नमः ।**

ஓம் கமனீயாயை நம: 5

**कलावती ।**

***கலாவதீ*** (6)

**(i)** அறுபத்துநான்கு கலைகள் கொண்ட வித்யாரூபிணி.

**(ii)** (அடியவர்களுக்கருள்புரிய) சிரஸு, கை முதலிய அவயவங்களுடன் கூடியவள்.

**(iii)** சந்திரனுடைய 16 கலைகளின் உருவமாக இருப்பவள்.

விவரணம் :— மேற்கூறிய மூன்றும் பராசக்தியின் அளவற்ற மஹிமைகளின் அம்சங்கள். உபாஸகன் எளிதில் தியானிப்பதற்காக இந்த உருவங்களுடன் கூடியிருப்பதாய்ப் பராசக்தி சொல்லப்படுகிறாள்.

சந்திரகலைகள், சூக்ஷ்மத்திலிருந்து ஸ்தூலம் விளைவதையும், ஸ்தூலம் சூக்ஷ்மமாகும் தன்மையையும் குறிக்கின்றன.

**ॐ कलावत्यै नमः ।**

ஓம் கலாவத்யை நம: 6

**कमलाक्षी कल्मषघ्नी करुणामृतसागरा ।**

**कदम्बकाननावासा कदम्बकुसुमप्रिया ॥ २ ॥**

கமலாக்ஷீ கல்மஷக்னீ கருணாம்ருதஸாகரா ।

கதம்பகானனாவாஸா கதம்பகுஸுமப்ரியா ॥

**कमलाक्षी ।**

***கமலாக்ஷீ*** (7)

**(i)** தாமரை மலர்களுக்கொப்பான இரு கண்களுடன் கூடியவள்

(ii) கமலா என்ற சொல் லக்ஷ்மியைக் குறிக்கும். அக்ஷி என்ற பதம் கண்ணால் ஏற்படும் ஞானத்தைச் சொல்கிறது. ஆகவே லக்ஷ்மியைப் பற்றிய ஞானமுள்ளவள் என்று பொருள்.

(iii) ('கமலா' என்ற பதம் இவ்வுலகின் கண்ணும் மறு உலகின் கண்ணும் உள்ள ஐச்வர்யங்களைக் குறிப்பதாகப் பொருள் வைத்து) இருவித ஐச்வர்யங்களையும் தரும் தன்மை வாய்ந்த இரு கண்களுடன் கூடியவள். தன் பார்வையாலேயே எல்லா உயர்ந்த ஐசுவர்யங்களையும் தருபவள்.

**ओं कमलाक्ष्यै नमः ।**

ஓம் கமலாக்ஷ்யை நமః 7

**कल्मषघ्नी ।**

***கல்மஷக்னீ*** (8)

(i) பாபங்களை நாசம் செய்பவள்.

(ii) பிரஹ்ம வித்யை என்ற ஞானாக்னியில் எல்லாவிதமான கர்மங்களும் எரிக்கப்பட்டு அழிகின்றனவாதலால் அத்தகைய பிரஹ்ம வித்யாரூபிணியாக இருக்கிறவள்.

விவரணம் :— பிரஹ்ம வித்யை மஹா வாக்யங்களை விசாரணை செய்வதால் உண்டாகிறது. மஹா வாக்யங்களாவன :— [1] **तत्त्वमसि** (தத்வமஸி) [2] **अहम् ब्रह्मास्मि** (அஹம் பிரஹ்மாஸ்மி) [3] **अयं आत्मा ब्रह्म** (அயம் ஆத்மா ப்ரஹ்ம) [4] **प्रज्ञानं ब्रह्म** (ப்ரக்ஞானம் ப்ரஹ்ம).

**ओं कल्मषघ्न्यै नमः ।**

ஓம் கல்மஷக்ந்யை நமః 8

**करुणामृतसागरा ।**

***கருணாம்ருதஸாகரா*** (9)

(i) கருணையினால் உண்டாகும் மோக்ஷரூபமான அமிருதம் நிறைந்த ஸமுத்திரம்.

---

*1. ஸாமவேதம்; 2. யஜுர்வேதம்; 3. அதர்வணவேதம்; 4. ருக்வேதம்.*

விவரணம் :—அமிருத ஸமுத்திரம், தான் அமிருத ரூபமாய் இருப்பதுடன், தன்னினின்று கிளம்பும அமிருத மேகத்தினால் அமிருத மழையைப் பொழியும்படி செய்து, அதனால் உலகங்களனைத்தையும் உய்ப்பிக்கிறது. அதுபோல் பராசக்தி அமிருத ஸ்வரூபமாயிருந்து கொண்டு, எவ்வெவர், எந்த எந்தக் கர்மாவையோ உபாஸனையையோ செய்கிறார்களோ, அந்த அந்தக் கர்மா உபாஸனைகளுக்கு விதித்துள்ள பலன் கிடைக்கும்படி செய்கிறாள். கருணை என்றால் பக்தர்களை ரக்ஷிக்க வேண்டும் என்ற ஞானம், பராசக்தியின் கருணை எல்லோருக்கும் அமிருதம்போல் இருந்துகொண்டு வகுப்பு வேறுபாடின்றி, எல்லோராலும் நாடப்படுவதால் ஸமுத்திரத்திற்கு ஒப்பிடப்பட்டது.

(ii) (அழியாப் புகழுடன்) ப்ரஹ்ம லோகத்திற்கு ஸகர புத்திரர்கள் செல்வதற்கு காரணமாயுள்ள கருணை நிரம்பியவள்.

(iii) ஸமுத்திரத்திற்கு அழியாத்தன்மை கிடைத்தது, பாகீரதீ என்ற கங்கை அதனுடன் சேருவதாலேயே. பராசக்தியின் கருணை, இப்படிச்செய்த பாகீரதியின் உருவமாக இருந்தது என்று பொருள்.

ओं करुणामृतसागरायै नमः ।

ஓம் கருணாம்ருத ஸாகராயை நம: 9

**कदम्बकाननावासा ।**

***கதம்ப கானநாவாஸா*** (10)

"கதம்பம்" என்ற பெயர் பூண்ட கல்பவ்ருக்ஷம் நிறைந்த வனத்தில் வஸிப்பவள்.

ओं कदम्बकाननावासायै नमः ।

ஓம் கதம்பகானநாவாஸாயை நம: 10

**कदम्बकुसुमप्रिया ।**

***கதம்பகுஸுமப்ரியா*** (11)

கதம்ப விருக்ஷத்தின் புஷ்பங்களில் ப்ரீதியுடையவள்.

விவரணம் :—கதம்ப விருக்ஷம், மேகத்தின் இடிமுழக்கத்தைக் கேட்டதும், மொட்டுகளை விடும் என்று சொல்லப்படுகின்றது.

ॐ कदम्बकुसुमप्रियायै नमः ।

ஓம் கதம்பகுஸுமப்ரியாயை நம: (11)

कन्दर्पविद्या कन्दर्पजनकापाङ्गवीक्षणा ।
कर्पूरवीटिसौरभ्यकल्लोलितककुप्तटा ॥ ३ ॥

கந்தர்ப வித்யா கந்தர்ப ஜநகாபாங்க வீக்ஷணா ।
கர்பூரவீடி ஸௌரப்ய கல்லோலித ககுப்தடா ॥

कन्दर्पविद्या ।

*கந்தர்பவித்யா* 12

(i) மன்மதனிடம் விளங்கும் ஜீவப்ரஹ்மைக்யஞானமாக இருப்பவள்.

விவரணம்:—மன்மதன் தத்வஸாக்ஷாத்காரம் அடைந்தவன், ஞானி. சித்வடிவமான அம்பிகை அவனிடம் ஞானஸ்வரூபமாக விளங்குகிறாள்.

(ii) மன்மத வித்யையின் கருத்தாக விளங்குபவள்.

விவரணம்:—மன்மதனால் கண்டுபிடிக்கப்பட்ட ஸ்ரீ வித்யா மூல மந்திரத் தொகுதி ஞானத்தை உண்டுபண்ணுவதால் அதற்கு கந்தர்ப்ப வித்யை என்று பெயர். ஞானத்தைத் தருவதால் வேதவாக்யங்களையும் உபநிஷத் என்று கூறுகிறோம். அந்த ஸ்ரீவித்யைக்குப் பொருளாக விளங்குபவள் பராசக்தியே.

ॐ कन्दर्पविद्यायै नमः ।

ஓம் கந்தர்ப்பவித்யாயை நம: (12)

कन्दर्पजनकापाङ्गवीक्षणा ।

*கந்தர்ப்ப ஜனகாபாங்கவீக்ஷணா* 13

(i) மன்மதனுக்கு இணையான அழகைத் தரக்கூடிய, கடைக் கண் பார்வை அமைந்தவள்.

விவரணம் :— ஒருவன் எவ்வளவு கிழடனுகவும் குருபியாகவும் இருப்பினும், பராசக்தியின் கடாக்ஷம் ஒரு தடவை கொஞ்சம் அவன்மீது விழுமானுல் அவன் மன்மதனைப்போல அழகு, யௌவனம் ஸாமர்த்தியம், ஐச்வர்யம் எல்லாம் பெறுகிறுன் என்பது கருத்து. ஸௌந்தர்ய லஹரியில் பராசக்தியைக் குறித்துப் பின்வருமாறு சொல்லப்படுகிறது:—

नरं वर्षीयांसं नयनविरसं नर्मसु जडं
तवापाङ्गालोके पतितं अनुधावन्ति शतशः ।
गलद्वेणीबन्धाः कुचकलशविस्रस्तसिचयाः
हठात् त्रुट्यत्काञ्च्यो विगलितदुकूला युवतयः ॥ (१३)

"ஒருவன் கிழட்டுத்தனத்தை அடைந்து குருபியாகக் காமத்திற்கு முற்றும் பாத்திரனுக இல்லாவிடினும் ஹே! பராசக்தி! உனது கடைக் கண் பார்வையில் விழுவானுயின் நூற்றுக்கணக்கான யுவதிகள் அவிழ்ந்த கூந்தலையும், விழுந்த மேலாக்கையும், நெகிழ்ந்த உடையையும் தெறித்த ஒட்டியாணத்தையும் கவனியாதவர்களாய், அவன்பின் விழுந்தடித்து ஓடுவார்கள்."

பராசக்தியின் பார்வை இத்தகைய மாறுபாட்டைச் செய்யும் சக்தி வாய்ந்தது.

(ii) மன்மதனுடைய பிதாவான ஸ்ரீமந்நாராயணன் பராசக்தியின் கடைக்கண் பார்வையில் நிற்கிறுர். அதாவது அவளுடைய புருவங்கள் அசைந்ததும் அவள் ஆக்ஞையைச் சிரமேற் கொண்டு தனது கடமை யாகிய காக்கும் தொழிலைச் செய்கிறுர்.

(iii) மன்மதனின் தாயான மஹாலக்ஷ்மி பராசக்தியின் கடைக் கண் பார்வையில் நின்று அவளுடைய கட்டளைகளைச் செய்யக் காத்திருக்கிறுள்.

(iv) சிருங்கார பாவங்களை யுண்டுபண்ணும் புஷ்பம், சந்தனம் முதலிய போக்ய வஸ்துக்கள் யாருடைய கடைக்கண் பார்வையினுல் கிடைக்கின்றனவோ அந்த பராசக்தி.

(v) சந்திர ஸூர்யர்கள் பராசக்தியின் இரு நேத்ரங்கள் என்று சொல்லப்படுவதுண்டு அவற்றில் சந்த்ரன் இடது கண். ஆகவே

சந்திரனிடமிருந்து கிளம்பும் 'சந்திரிகா' வென்று நிலவு அம்பிகையின் கடைக்கண் பார்வையே. நிலவு சிருங்கார பாவத்தை வளர்க்கக் கூடியது.

(vi) "கந்தர்ப்ப ஜனகா" என்ற பதத்தினால் லக்ஷ்மியின் இருப்பிடமாகிய தாமரை குறிக்கப்படுகின்றது. யாருடைய கடைக்கண் தாமரையைப்போல் இருக்கிறதோ அவள்; அதாவது கமலாக்ஷி. பராசக்தியின் கடைக்கண்ணே உலகம் உய்த்திருப்பதற்குக் காரணம் என்றும் பொருள் கூறலாம்.

ओं कन्दर्पजनकापाङ्गवीक्षणायै नमः ।

ஓம் கந்தர்ப்ப ஜநகாபாங்க வீக்ஷணாயை நம: (13)

कर्पूरवीटिसौरभ्यकल्लोलितककुप्तटा ।

***கர்பூரவீடி ஸௌரப்ய கல்லோலித ககுப்தடா*** 14

எவளுடைய பச்சைக் கர்ப்பூரங்கலந்த தாம்பூலக் கவளங்களினுடைய நறுமணத்தினால் திசைகளெல்லாம் எப்பொழுதும் கமழ்ந்து கொண்டு இருக்கின்றனவோ அந்த பராசக்தி.

விவரணம் :— பராசக்தியினுடைய முகத்தினின்று எப்பொழுதும் நறுமணம் வீசிக்கொண்டேயிருக்கிறது. அதனால் ஜகத்தனைத்தும் கமழ்கிறது. ஆனந்த வெள்ளத்தில் பரவசமாகிறது.

பராசக்தி, மஹா ராஜபோகங்களெல்லாம் நிறைந்தவள். அவள் ஸ்வரூபம் இத்தகைய மேன்மை வாய்ந்தது என்று கருத்து. அவளது முக்கியப் பெயர் ராஜராஜேசுவரி என்பதை நினைவுபடுத்திக் கொள்ளவும். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம உத்தராங்கத்தில்

'वासनाद्वासुदेवस्य वासितं ते जगत्त्रयम्'

என்று கூறப்பட்டிருக்கிறது. (வாஸுதேவனுடைய உம்முடைய நறுமணத்தினால் மூவுலகும் கமழ்கின்றன.) மஹாவிஷ்ணுவின் சக்தியும், பராசக்தியின் சக்தியும் ஒன்றே.

ओं कर्पूरवीटिसौरभ्यकल्लोलितककुप्तटायै नमः ।

ஓம் கர்பூரவீடி ஸௌரப்ய கல்லோலித ககுப்தடாயை நம: (14)

**कलिदोषहरा कञ्जलोचना कम्रविग्रहा ।**
**कर्मादिसाक्षिणी कारयित्री कर्मफलप्रदा ॥ ४ ॥**

கலிதோஷ ஹரா கஞ்ஜ லோசனு கம்ர விக்ரஹா ।
கர்மாதி ஸாக்ஷிணீ காரயித்ரீ கர்மபல ப்ரதா ॥

**कलिदोषहरा ।**

***கலிதோஷஹரா*** 15

(i) கலியில் பிறப்பதால் மாத்திரமே உண்டாகும் பாபங்களைப் போக்க வல்லவள்.

விவரணம் :— கலியுகம் மிகவும் கெட்ட யுகம். அதில் பிறப்பதே பாபம். பராசக்தி, எவனெருவன் தன்னை ஐம்பொறிகளினுலும் போற்றி மனத்தில் தியானிக்கிருனே அவனுடைய, கலியில் பிறந்ததனுல் விளையும் பாபமனைத்தையும் அழித்துவிடுகிருள்.

(ii) கலஹத்தாலேற்படும் தோஷங்களைப் போக்குபவள்.

விவரணம் :— கலி என்ற பதத்திற்கு கலஹம் என்பது பொருள். கலஹத்தால் உண்டாகும் தோஷங்களை பராசக்தி போக்குகிருள். அதாவது : ஒவ்வொரு மதத்தாரும் தங்கள் தங்கள் மதத்திலுள்ள துராக்ரஹத்தால் தமது மதமே உயர்ந்ததென்று வாதிப்பர். அதன் மூலம் ஆஸ்திக்யம், நாஸ்திக்யம், ஆன்மா சரீராதிகளினின்றும் வேறுபட்டதா வேறுபடாததா, குணத்துடன் கூடியதா அன்று, வேத மொழிகளின் அர்த்தம் இப்படியா அப்படியா, என்ற பல விவாதங்கள் உண்டாகி, காமம், கோபம், கடுஞ்சொற்கள், பழித்தல் முதலிய எல்லா தோஷங்களும் உண்டாகும். அப்பொழுது "பிரஹ்மம் ஒன்றேதான். இந்த ஞானம் உண்டானல் முக்தியடையலாம்" என்று மாந்தருக்கு வழியைக்காட்டி, முக்தியைக் கொடுத்து பராசக்தி மேற்கூறிய தோஷங்களனைத்தையும் போக்கிவிடுகிருள் என்பது கருத்து.

**ॐ कलिदोषहरायै नमः ।**

ஓம் கலிதோஷஹராயை நம: (15)

**कञ्जलोचना ।**

***கஞ்சலோசநா*** 16

(i) தாமரைக்கொப்பான கண்களையுடையவள்.

விவரணம் :— 'கம்' என்றால் ஜலம். அதினின்றும் உண்டாகும் தாமரை, நீலோத்பலம் இவைகளை 'கஞ்ஜம்' என்ற சொல் குறிக்கும். பராசக்தி இவற்றுக்கு ஒப்பான கண்களையுடையவள்.

(ii) தனது கண் பார்வையாலேயே அநேக கோடி ப்ரஹ்மாண்டங்களை ஸிருஷ்டிப்பவள்.

விவரணம் :— 'கஞ்சம்' என்ற சொல் ஸிருஷ்டியின் ஆரம்பத்தில் ஜலத்திற்குப் பிறகு அந்த ஜலத்தில் உண்டாகும் பிரம்மாண்டங்களைக் குறிக்கும். வேறு முயற்சி ஒன்றுமில்லாமல் அம்பிகையின் பார்வையாலேயே எல்லா பிரஹ்மாண்டங்களும் உண்டாகின்றன. '**सेयं देवता ऐक्षत**' (6—3—2) என்று சாந்தோக்ய உபநிஷத் கூறுகிறது.

**ॐ कञ्जलोचनायै नमः ।**

ஓம் கஞ்சலோசநாயை நம: (16)

**कम्रविग्रहा ।**

***கம்ரவிக்ரஹா*** 17

(i) மனதைக் கவரும் சரீர அமைப்பு உள்ளவள்.

விவரணம் :— பராசக்தியின் வடிவம் காம்பீர்யம், தைரியம், மாதுர்யம் முதலிய பல உத்தமமான குணங்களுடன் பொருந்தியிருப்பதால், அது மனதைக்கவருகின்றது.

(ii) ஆனந்தஸ்வரூபிணியானதனால், பராசக்தி அதிமனோக்ஞமாக இருக்கிறாள். அவள் ரூபம் வெகு அழகு வாய்ந்தது என்பது கருத்து.

**ॐ कम्रविग्रहायै नमः ।**

ஓம் கம்ரவிக்ரஹாயை நம: (17)

कर्मादिसाक्षिणी ।

***கர்மாதிஸாக்ஷிணீ*** 18

(i) கர்மா முதலியவற்றைத் தான் ஒருவித ஸம்பந்தமுமின்றிப் பார்த்துக்கொண்டிருப்பவள்.

விவரணம் :— "கர்மா முதலிய" என்பதால், கர்மா, உபாஸனே, யோகம், சிரவணம், மனனம், நிதித்யாஸனம், என்பவையெல்லாம் குறிக்கப்பட்டன. ஜீவன் செய்யும் இவைகள் அனைத்தையும் பராசக்தி பார்த்துக்கொண்டிருக்கிருள். ஆனுல் அவற்றுடன் ஸம்பந்தம் ஒன்றும் அவளுக்குக் கிடையாது. நேரில் பார்த்துத் தெரிந்தும், அக்காரியத்தில் ஸம்பந்தப்படாதவனுக்குத்தான் "ஸாக்ஷி" என்று பெயர்.

(ii) கர்மா முதலியவை பராசக்தியிடம் ஸம்பந்தப்படாததால் ஸாக்ஷியாக இருக்கின்றன.

விவரணம் :— முற்கூறிய கர்மா முதலியவற்றில் புண்யம் பாபம் என்ற இரு பிரிவுள்ள கர்மாவானது பராசக்தி உலகைப்படைப்பதற்குக் காரணமாகின்றது. உபாஸனம் முதலியவைகள் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கு ஸாதனமாகின்றன. இவ்விதமிருந்தபோதிலும், இவைகளில் ஒன்றுவது பராசக்தியுடன் ஸம்பந்தப்படாததால் இவைகள் எல்லாம் பராசக்தி விஷயத்தில் ஸாக்ஷியாகத்தானிருக்கின்றன.

ॐ कर्मादिसाक्षिण्यै नमः ।

ஓம் கர்மாதிஸாக்ஷிண்யை நம: (18)

कारयित्री ।

***காரயித்ரீ*** 19

காரியத்தைச் செய்விக்கும் தன்மை வாய்ந்தவள்.

விவரணம் :— ஒரு செயலைச் செய் என்று கட்டளை இடுதலுக்கு "காரயித்ருத்வம்" என்று பெயர். ஒரு பயனையடைய அதற்குரிய செயலை ஏவும் வினைமுற்றுக்களை உபயோகிக்கவேண்டியிருக்கிறது. இந்த வினைமுற்றுக்கள் சப்தரூபமாக இருப்பதால் அசேதனமான இவைகள் தானுக ஏவ முடியாது. சைதன்யம் பொருந்திய ஜீவர்களினுலே

தான் ஏவ முடியும். ஆத்ம சைதன்ய ஸம்பந்தத்தால்தான் வேதமும் கட்டளையிடுகிறது. பராசக்தி ஆத்ம சைதன்ய வடிவமாயிருப்பதால் அவள்தான் எல்லாக் காரியங்களையும் செய்யும்படி தூண்டுகிறாள்.

முக்கியமாக வேதங்களில் "பிரதிதினமும் ஸந்தியோபாஸனம் செய்யவேண்டும்" "ஸத்யத்தைப் பேசு" என்பதுபோன்ற விதிகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. இவ்விதிகளை வழங்கும் வேதங்கள் அதிஷ்டான சைதன்யத்துடன் ஒன்றுபட்டு ஸ்வப்ரகாசமாக, தன் கருத்தை விளக்கி அனைவரையும் தான் விதிக்கும் கர்மாக்களில் ஈடுபடுத்துகிறது. பராசக்தி இவ்விதம் செய்யும் சைதன்ய ரூபமாக விளங்குகிறாள்.

"एष ह्येव साधु कर्म कारयति; एष ह्येवासाधु कर्म कारयति" என்பது உபநிஷத் வாக்யம்.

ओं कारयित्र्यै नमः ।

ஓம் காரயித்ர்யை நம: (19)

**कर्मफलप्रदा ।**

***கர்மபலப்ரதா*** 20

செய்யப்பட்ட கர்மாக்களுக்கு (தக்கவாறு) பலனைத்தருபவள்.

விவரணம்:— கர்மத்தினுடைய பலன், செய்தவுடன் கிடைத்து விடுமென்ற நியதி கிடையாது. ஒரு ஜன்மாவில் செய்த கர்மா பின் வரும் ஜன்மாக்களில் பலனைத் தரலாம். இவ்விதம் பலன் தருவதற்கு "அபூர்வம்" காரணம் என்பார்கள்.

கர்மாதோ பலனைத் தருகிறது? அல்லது பலனைத் தருபவர் வேறு யாராவது இருக்கிறார்களா? என்ற கேள்வி எழுகிறது. இந்த நாமாவளியிலிருந்து பலனைத் தருவது பராசக்தியே என்பது தெரிகிறது.

அநீச்வரவாதிகள் கர்மாவுக்கே பிற்காலத்தில் பலனை அளிக்கும் சக்தியுண்டு என்கிறார்கள். பலனைத் தருவதற்குச் சேதன சக்தியுள்ளவர்களால் முடியுமே தவிர, ஜடமாயிருக்கும் கர்மாவினால் முடியாது. செய்த கர்மாக்களிலிருந்து கட்டாயம் பலன் ஏற்பட்டுத் தீரவேண்டும்,

ஆகையால் அவ்வித பலனைக் கொடுப்பது பரதேவதையேயென்று முடிவு கிடைக்கிறது.

புண்ய கர்மாவைச் செய்தால் நன்மை கிடைக்கும். பாபம் செய்தால் கஷ்டத்தை அநுபவிப்பான். மஹிஷாஸுர வதத்திற்குப் பின் தேவர்கள் பராசக்தியைத் துதிபண்ணுங்கால் சொல்லுவது:—

[1] या श्रीः स्वयं सुकृतिनां भवनेष्वलक्ष्मीः
पापात्मनां कृतधियां हृदयेषु बुद्धिः ।
श्रद्धा सतां कुलजनप्रभवस्य लज्जा
तां त्वां नताः स्म परिपालय देवि विश्वम् ॥

"பராசக்தி புண்ணியம் செய்பவர் வீடுகளில் லக்ஷ்மியாகவும், பாபம் செய்பவர் வீடுகளில் அலக்ஷ்மியாகவும் தானுகவே வசிக்கிருள். மனத்தையடக்கிப் பயிற்சிசெய்பவர்கள் ஹ்ருதயத்தில் புத்திபலத்துடன் சோபிக்கிருள். ஸாதுக்களிடத்தில் சிரத்தையாக விளங்குகிருள். நற்குலத்தில் பிறந்த புமான்களிடம் விநயரூபமாகவும், பெண்களிடம் லஜ்ஜைரூபமாகவும் இருக்கிருள். இத்தகைய பராசக்தியாகிய உன்னை வணங்குகிரோம். நீ ஜகத்தைக் காத்தருளவேணும்."

பெண்களுக்கு நாணமும், புருஷர்களுக்கு விநயமும் அணிகலன்களென்பதை மறந்துவிடக்கூடாது.

**ओं कर्मफलप्रदायै नमः ।**

ஓம் கர்மபலப்ரதாயை நம: **(20)**

**एकाररूपा चैकाक्षर्येकानेकाक्षराकृतिः ।**
**एतत्तदित्यनिर्देश्या चैकानन्दचिदाकृतिः ॥ ५ ॥**

ஏகார ரூபா சைகாக்ஷர்யேகாநேகாக்ஷராக்ருதி: ।
ஏதத் ததித்யநிர்தேச்யா சைகாநந்த சிதாக்ருதி: ॥

**एकाररूपा ।**

***ஏகாரரூபா*** **21**

1. துர்க்கா ஸப்தசதி அ. 4—ச். 5.

பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தில் இரண்டாவது அவயவமாக இருக்கும் 'ஏ' (ए) என்ற அக்ஷரம் யாருடைய ரூபமோ அந்தப் பராசக்தியென்று பொருள்.

ओं एकाररूपायै नमः ।

ஓம் ஏகாரரூபாயை நம: (21)

**एकाक्षरी ।**

***ஏகாக்ஷரீ*** **22**

(i) ஈச்வரனுடைய மாயா ரூபமாக விளங்குபவள்.

விவரணம் :— நிர்க்குணமான பரமாத்மா மாயாசக்தியுடன் சேரும் பொழுது ஈச்வரனென்று சொல்லப்படுகிறான். இந்தச் சக்தியினுல் ஜகத் உண்டாகிறது. ஆகையால் இந்தச் சக்தி 'ஏகம்' அதாவது 'முக்கியம்' என்று கூறப்படுகிறது. 'அக்ஷரம்' என்ருல் 'நாசமற்றது' என்று பொருள். மாயையானது ஆத்மஞானத்தினுலன்றி வேறு ஒருவிதத்திலும் நாசமடையாததால் 'அக்ஷரம்' என்று கூறப்படுகிறது. பராசக்தியானவள் முக்யமான அழிவற்ற மாயாசக்தி ரூபமாயிருந்துகொண்டு இம்மாயையில் பிரதிபிம்பிக்கும் சைதன்யமான ஈசுவரனுக்கு ஸர்வக்ஞத்வம் (எல்லாம் அறியும் தன்மை) முதலான சக்திகளைக்கொடுக்கிருள்.

(ii) 'ஓம்' என்ற ஒரே எழுத்தான பிரணவ ரூபமாக விளங்குபவள்.

விவரணம் :— கீதையில் 'ஓமித்யேகாக்ஷரம் பிரஹ்ம' (8–13) என்று கூறப்பட்டிருக்கிறது. 'ஓம்' என்பது நிர்குணமான பரப்பிரம்மத்தையும் ஸகுணமான பரமாத்மாவையும் குறிக்கும். அது மிகவும் புதிது புதிதாக இருப்பதால் அதற்கு (प्रकर्षेण नवं) பிரணவம் என்று பெயர்.

[1] "आश्चर्यवत्पश्यति कश्चिदेनमाश्चर्यवद्वदति तथैव चान्यः ।
आश्चर्यवच्चैनमन्यः शृणोति श्रुत्वाप्येनं वेद न चैव कश्चित् ॥

"இந்தப் பரமாத்மாவை யாரோ ஒருவன் இதற்குமுன் பார்க்காத அதிசயப்பொருளைப் பார்ப்பதுபோல் பார்க்கிருன், இவ்வாறே யாரோ

1. *கீதை 2-29*





ஒருவன் இதைப்பற்றிப் பேசுகிறுன். இவ்விதமே யாரோ ஒருவன் கேட்கிறுன். ஆனுல் பரமாத்மாவை உண்மையாக அறிந்தவன் ஒருவனும் இல்லை."

அவனவனுடைய மனத்தின் பக்குவத்திற்குத் தக்கவாறு பரமாத்மா விளங்குகிறுன். புத்தியின் பக்குவம் அதிகரிக்க அதிகரிக்க, பரமாத்மா புதிது புதிதாகத் தோன்றுகிறுன். அந்தப் பரமாத்மாவைக் குறிக்கும் 'ओं' என்ற அக்ஷரத்திற்குப் 'பிரணவம்' என்று பெயர். பரப்பிரம்மத்தை, 'ஓம்' என்ற அக்ஷரத்தின் லக்ஷ்யார்த்தம் என்று கூறுவார்கள்.

பரமாத்மாவின் ஒன்பது வகையான பிரகிருதிகளின் சேர்க்கையினுல் ஜகத் உண்டாகிறதென்று "முன்னுரை"யில் விளக்கப்பட்டிருக்கிறது. ஜகத்தைப் பரமாத்மாவினுடைய "ப்ரதீகம்" (உருவம் அல்லது விக்ரஹம்) என்று நினைப்பது பொருந்தும். विश्वस्मै नमः" என்ற விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தின் முதல் நாமாவைக் கவனிக்கலாம். ஜகத்து தோன்றி, சிறிது காலம் நிலைத்து பின்பு மறைந்துபோகும் தன்மை வாய்ந்தது. "ஓம்" என்ற சப்தமும் கண்டத்திற்குக் கீழ் உதயமாகி, உதடுகளைத் திறந்தவண்ணமாய் வாயின் வழியாகச் சென்று, இரண்டு உதடுகளையும் மூடிக்கொண்டு மூக்கின் இணைப்புடன் முடிந்துவிடுகிறது. ஆகையால் இந்த 'ஓம்' காரம், ஜகத்தின் தன்மையை ஒரு வகையில் குறிப்பதாக ஆகும். மேலும் ஜகத்தின் தோற்றம் ஒரேவகைப்பட்டதன்று. புதிது புதிதாகத் தோன்றக்கூடியது. ஆகையால் "ஜகத்து எப்படிப் பரமாத்மாவின் உருவமோ அதைப்போல் 'ஓம்' என்ற பிரணவ சப்தமும் பரமாதமாவின் விககிரஹமாக அமைந்திருக்கிறது. ஜகத்தைப் பரமாத்மாவின் அபா (தாழ்ந்த) ப்ரக்ருதி என்று சொல்வார்கள். 'ஓம்' என்ற சப்தத்தைப் பரமாதமாவின் சப்த உருவமாகவும், இவ்வுருவத்தின் தன்மை வாய்ந்த ஜகத்தாகவும் தியானிப்பது 'அபரப்பிரம்ம' தியானமாகும். எந்தவிதமாய்ப் பார்த்தாலும் 'ஓம்' என்ற ஏகாக்ஷரம் பராசக்தியை விளக்கும் தன்மை வாய்நதது என்பது கருத்து.

**(iii)** பிரிக்க முடியாத ஒரே சைதன்ய ரூபமான, அழிவற்ற பரமேசுவரன் யாருடைய சரீரத்தில் பாதியைக் கலந்து இருக்கிறுனே அந்தப் பராசக்தி என்பது வேருெரு பொருள். பராசக்தியே பாதி

சிவமாயும் பாதி சக்தியாயும் விளங்குகிறுள். (முன்னுரையில் வேது பகுதியைப் பார்க்கவும்).

(iv) (தன்னை உபாஸிப்பதற்கு ஆதாரமாகவுள்ள) மாயாபீஜம் (ஹ்ரீம்) முதலான முக்கிய அக்ஷரங்களையுடையவள்.

விவரணம் :— மாயாபீஜம் முதலான அக்ஷரங்கள், மந்திரங்கள், இவை பராசக்தியின் சரீரம். இவைகளைக்கொண்டு அம்பிகையை உபாஸித்தால் எல்லாப் பயன்களையும் அடையலாம்.

(v) அழிவற்ற ஒரே வஸ்துவான ப்ரஹ்ம சைதன்யத்தைத் தன்னுள்கொண்ட பரவித்யா ரூபமாயிருப்பவள்.

விவரணம் :— 'अथ परा यया तदक्षरमधिगम्यते' (1-1-5) என்று முண்டக உபநிஷத் கூறுகிறது. அக்ஷரரூபமான (அழிவற்ற) ப்ரஹ்மசைதன்யம் எதனுல் அறியப்படுகிறதோ அதுதான் பரவித்யை என்பது இதன் பொருள். இதைத்தான் ப்ரஹ்மஞானம், சைதன்ய ப்ரதிபிம்பத்துடன் கூடிய அகண்டாகார விருத்தி என்று கூறுவார்கள். இந்த பரவித்யா ரூபமாக பராசக்தி விளங்குகிறுள். 'ப்ரஹ்மவித்யாஸ்வ ரூபிணீ' என்று அம்பாளைச் சொல்வது வழக்கம்.

குறிப்பு :— एकाररूपा चैकाक्षरी என்பதில் एकाररूपा என்ற பெயரும் एकाक्षरी என்ற பெயரும் 'च' என்ற பதத்தினுல் இணைக்கப்பட்டிருக்கின்றன. இதேமாதிரி திரிசதியில் பல இடங்களில் 'च' என்பது அமைந்திருக்கிறது. 'च' என்பதன் பொருள் 'உம்' என்பது. இந்தப்பதத்தை உபயோகிப்பதால் பராசக்திக்குப் பல்வகைக் குணங்களும் இருப்பதாக அர்த்தம் கிடைக்கிறது. உண்மையில் பராசக்தி நிர்குண ப்ரஹ்ம ரூபியாயிருந்தபோதிலுங்கூட, பலவகைப்பட்ட உபாதிகளின் சேர்க்கையால் பலவித உருவங்களும் குணங்களும் ஏற்பட்டு ஸகுணரூபியாகவும் விளங்குகிறுள். உபாதியின் குணங்களைக் கொண்டு ஸகுண ஸ்வரூபமாக வர்ணிப்பதில் விரோதமில்லை. இது போலவே பராசக்தி மூன்று லிங்கங்களாலும் குறிப்பிடப்படுகிறுள். உதாஹரணமாக शिवः (ஆண்பால்), शिवा (பெண்பால்) शिवं (நபும்ஸகலிங்கம்) என்ற மூன்றும் பராசக்தியைக் குறிக்கின்றன. உண்மையில் லிங்கபேதமற்றுப்பராசக்தி விளங்குகிறுள்.

## ॐ एकाक्षर्यै नमः ।

ஓம் ஏகாக்ஷர்யை நம: (22)

## एकानेकाक्षराकृतिः ।

***ஏகாநேகாக்ஷராக்ருதி :*** 23

**(i)** ஒன்றாகவும் பலவாகவுமுள்ள அக்ஷரத்தில் பிரதிபிம்பிக்கும் சைதன்ய வடிவமாயிருப்பவள்.

விவரணம்:— 'அக்ஷரம்' என்னும் பதத்திற்கு 'மாயை' 'அஜ்ஞானம்' என்பது பொருள். அக்ஷரத்தில் ஸத்வம், ரஜஸ், தமஸ் என மூன்று குணங்களிருக்கின்றன, இதில் சுத்தமான ஸத்வகுணத்தை ப்ரதானமாகக்கொண்டது மாயை எனப்படும். இது ஒன்றே. இதில் ஏற்படும் ப்ரஹ்மசைதன்யத்தின் ப்ரதிபிம்பம் ஈசுவரன் எனப்படும். உபாதி ஒன்றாயிருப்பதால் ஈசுவரனும் ஒன்றே ஸத்வகுணம் மறைந்து ரஜஸ்தமோகுணங்கள் வெளிப்பட்டுள்ள மாயையின் அம்சங்கள் அஜ்ஞானமெனப்படும். இவை பலவாக இருப்பதால் இவற்றில் பிரதி பிம்பித்துள்ள ஜீவசைதன்யமும் பலவாக இருக்கிறது, ஆகவே பராசக்தியின் சைதன்யம் ஒன்றான மாயையில் பிரதிபிம்பித்து ஈசுவரன் என்ற பெயரையும் பலவான அஜ்ஞானங்களில் பிரதிபிம்பித்து ஜீவன் என்ற பெயரையும் அடைகிறது.

**(ii)** ஒன்றாயும் அநேகமாயும் உள்ள வர்ணங்களை உருவமாகக் கொண்டவள்.

விவரணம் :— 'ஓம்' என்பது ஒரே வர்ணமான பீஜாக்ஷரம். அகாரம் முதல் க்ஷகாரம் வரையிலுள்ள வர்ணங்கள் பலவான அக்ஷரங்கள். இவையே மாத்ருகாக்ஷரமென்று கூறப்படும். இந்த பீஜாக்ஷரங்களெல்லாம் பராசக்தியின் ஸ்வரூபம். அதாவது அவளை அறிவுறுத்துவன என்று கருத்து.

**(iii)** (ए) 'ஏ' காரமும் (क) 'க' காரமும் மற்றுமுள்ள அநேக அக்ஷரங்களும் ஒன்றுகூடி, த்ரிசதியின் அடிப்படையாகிய பஞ்சதசாக்ஷரீ (பதினைந்து அக்ஷரங்கள்) வித்யையாக மாறுகின்றன. பராசக்தியின் ரூபமே பஞ்சதசாக்ஷரீயாகையால் 'ஏ' காரம் 'க' காரம் மற்றும் அநேக அக்ஷரங்கள் ரூபமாக பராசக்தி இருக்கிறாள்.

**(iv)** அக்ஞானம் பலவாருகப் பிரிந்துள்ளபோதிலும் அவைக ளெல்லாவற்றிலும் ஸாக்ஷியாக ஜீவன் ஈசுவரன் என்ற பிரிவு நீங்கிய சுத்த சைதன்ய ஸ்வரூபமாக இருப்பவள்.

ओं एकानेकाक्षराकृतये नमः ।

ஓம் ஏகாநேகாக்ஷராக்ருதயே நம: (23)

एतत्तदित्यनिर्देश्या ।

*ஏதத்ததித்யநிர்தேச்யா* 24

**(i)** இந்த ரூபகுணங்களோடு பொருந்தியவளென்ருே, அல்லது மனத்தினுலோ புலன்களினுலோ நிச்சயிக்க இயலாத மறைபொருள் என்ருே வரையறுக்கமுடியாதவள்.

விவரணம்:— 'ஏதத்' என்ருல் இந்தக் காலத்திலே இவ்விதமுள்ள வஸ்து என்று நேரில் பார்த்து கூறப்படும் பொருள். 'தத்' என்ருல் நிச்சயிக்கமுடியாமல் மறைந்து நிற்கும் வஸ்து. பராசக்தியை இவ்விரு விதத்திலும் வரையறுக்கமுடியாது என்று பொருள்.

**(ii)** கார்யமென்ருே, காரணமென்ருே, குறிப்பிடமுடியாதவள்.

விவரணம்:— காரணத்திலிருந்து காரியம் உண்டாகிறது. நேரில் பார்க்கும் கார்யத்தை 'ஏதத்' என்ற பதமும் மறைந்து நிற்கும் காரணத்தை 'தத்' என்ற பதமும் குறிக்கின்றன. பராசக்தி சுத்த சைதன்யமாய் எக்காலத்திலும், எங்கும் நிறைந்திருப்பதால், அவளைக் காரணமென்ருே, காரியமென்ருே சொல்லுவது தகாது. ஆகையால் 'ஏதத்' 'தத்' என்ற இரு பதங்களாலும் குறிக்கப்படாதவள் என்பது மற்ருெரு பொருள்.

**(iii)** 'ஏதத்' என்பது 'நான், நான்' என்று எல்லோரும் சொல்லும் பிரத்யக்ஷமாய் விளங்கும் ஜீவாத்மா. 'தத்' என்பது மறைந்திருக்கும் ஈச்வர சைதன்யம் அல்லது பரமாத்மா. 'இதி' என்ற பதம் 'அதுவே' என்ற பொருளில் வரும். பராசக்தியை ஜீவ சைதன்யமே தான் என்ருே அல்லது ஈச்வர சைதன்யமே தான் என்ருே சொல்லமுடியாது என்பது கருத்து.

ஸாங்கிய மதப்படி 1. பிரகிருதியே ஜகத்தின் காரணம், 2. ஜீவர்கள் பற்பலர்களாக இருந்துகொண்டு ஜகத்தை அநுபவிக்கின்றனர். 3. ஆகவே ஈச்வரன் என்று ஒருவன் கிடையாது. ஜீவ சைதன்யமே பரம்பொருள்.

பாகவத மதப்படி 1. என்றும் இருக்கும் பரமேசுவரன் என்ற விஷ்ணுவிடமிருந்து ஜீவர்கள் தோன்றுகிறார்கள். 2. ஜீவர்கள் அழியும் தன்மை வாய்ந்தவர்கள். 3. விஷ்ணுவே ஒருவராயிருந்துகொண்டு பிரதானாக விளங்குகிறார். ஈசுவரனே பரம்பொருள்.

உபநிஷத் ஸித்தாந்த பிரகாரம் ஜீவாத்ம பரமாத்ம அபேதம் அங்கீகரிக்கப்பட்டதால் இவ்விரண்டு கொள்கைகளும் நிராகரிக்கப் பட்டுள்ளன. பராசக்தி ஸாங்கிய மதத்தினாலோ, பாகவத மதத்தினாலோ வரையறுக்கப்படாதவளாக இருக்கிறாள். இது மூன்றாவது அர்த்தம்.

(iv) நியாயவாதிகளும் வைசேஷிகவாதிகளும் நமக்குப் பிரத்யக்ஷமாகத் தோன்றும் ஜகத்தினின்றுமட்டுமே தத்வத்தை நிர்ணயிக்க வேண்டுமென்கின்றனர். ஒரு பொருளின் விளக்கத்தை அதனின்று வேறுபட்ட வேறொரு பொருளின் விளக்கத்தின் மூலம் ஊகிக்கும் பொழுது அவ்வேறுபட்ட பொருள் முதலில் கூறிய பொருளின் தடஸ்த லக்ஷணமெனப்படும். 'ஜகத்' அநித்யம். உபாதிகளுக்கு உட்பட்டது. பரமாத்மாவோ நித்திய, சுத்த, புத்தமானது. இரண்டும் முற்றும் வேறுபட்டிருப்பினும், 'ஜகத்' தோன்றுவதற்குக் காரணமாயிருக்கும் பொருளை பிரஹ்மமென்று சொல்லும்பொழுது 'ஜகத்' பிரஹ்மத்தின் தடஸ்த லக்ஷணமெனப்படும். இவ்வித ஆராய்ச்சியினின்றும் வேற்றுமை அல்லது பேதம் நிலைக்குமே தவிர அபேதம் ஸித்திக்காது. ஆனால் பராசக்தி அபேதமான உண்மைப் பொருளாதலால் நையாயிக, வைசேஷிக மதங்களினால் தீர்மானிக்க முடியாதவளாயிருக்கிறாளென்பது நான்காவது பொருள்.

ॐ एतत्तदित्यनिर्देश्यायै नमः ।

ஓம் ஏதத்ததித்யநிர்தேச்யாயை நம: (24)

एकानन्दचिदाकृतिः ।

*ஏகாநந்தசிதாக்ருதி:* **25**

**(i)** ஸச்சிதானந்த பிரஹ்ம ஸ்வரூபமாயிருப்பவள்.

விவரணம்:— 1. 'ஏகாநந்தம்' என்றால் எல்லாவற்றிலும் முக்கியமான, அல்லது எல்லாவற்றையும்விட உயர்ந்த ப்ரஹ்மானந்தம், அதாவது மோக்ஷமென்பது. 'சித்' என்பது அறிவினுக்கறிவு, அதாவது பிரகாசஞானம். யார் இவ்விரண்டுங்கூடிய வடிவம் வாய்ந்திருக்கிறாளோ அந்தப் பராசக்தியென்று பொருள்.

**(2)** ஜீவன் முக்தர்கள் ஆத்மஞானப் பிரகாசத்தையடைந்தவர்களாதலால் அவர்கள் நேரில பார்த்து அநுபவிக்கும் பிரகாச ஆனந்த வடிவமாயிருப்பவள்.

[1] **विज्ञानमानन्दं ब्रह्म** (விக்ஞானம் ஆனந்தம் என்பவை ப்ரஹ்மத்தின் ஸ்வரூப லக்ஷணம்.)

[2] **आनन्दो ब्रह्मेति व्यजानात् ।** (வருணனின் பிள்ளையாகிய ப்ருகு தவஞ்செய்து பிரஹ்மம் ஆனந்தமேயென்று அறிந்தார்.)

[3] **आनन्दादयः प्रधानस्य ।** (இது பிரம்மஸூத்ரங்களில் ஒன்று. எங்கெங்கு ஆனந்தமென்பது குறிக்கப்பட்டிருக்கிறதோ அதெல்லாம் பிரஹ்மத்தைக் குறிக்கிறதென்று பொருள். இங்கே ஆனந்தமென்பது குறைவு, விருத்தியென்பவையற்ற ஆனந்தம். இந்திரிய அநுபவங்கள் அல்ல.)

**(ii)** யோகாநுபவத்தை அடைந்தவர்களுக்குச் சிறிதளவும் மறைக்கப்படாத ஆனந்தவடிவமாய் அகக்கண்முன் தோன்றுபவள்.

**(iii)** 'ஆனந்தம்' என்றால் சக்தி. 'சித்' என்றால் பரமேசுவரன். சக்தியும் சிவனும் வேற்றுமையின்றி 'ஆனந்தசித்' என்ற ஒரே வடிவமாய் விளங்குகிறார்கள்.

---

1. *பிருஹதாரண்யகம் 3-9-28*
2. *தைத்திரீய உபநிஷத் பிருகுவல்லி*
3. *பிரஹ்மஸூத்திரம் 3-3-11*

ओं एकानन्दचिदाकृतये नमः ।

ஓம் ஏகானந்த சிதாக்ருதயே நம: (25)

एवमित्यागमाबोध्या चैकभक्तिमदर्चिता ।
एकाग्रचित्तनिर्ध्याता चैषणारहिताद्दता ॥ ६ ॥

ஏவமித்யாகமாபோத்யா சைக பக்திமதர்சிதா ।
ஏகாக்ர சித்த நிர்த்யாதா சைஷணாரஹிதாத்ருதா ॥

एवमित्यागमाबोध्या ।

*ஏவமித்யாகமாபோத்யா* 26

இந்தப் பிரகாரமாயிருப்பவளென்று வேதங்களினல் அறிவிக்க முடியாதவள்.

விவரணம்:— ஒரு பொருளுக்குக் குணங்கள் அமைந்திருப்பின் அந்தக் குணங்களை வர்ணிப்பதால், அந்தப்பொருள் வர்ணிக்கப்பட்டதாகும். பராசக்திக்குக் குணவிசேஷங்கள் இல்லையாதலின் அங்ஙனம் அவளை வர்ணிக்கமுடியாது. அதற்காக வேதங்கள் மற்ருேர் வழியைப் பின்பற்றிப் பராசக்தியின தத்வத்தை உபதேசிக்கின்றன. அதாவது [1] नेति नेति 'இப்படியில்லை, இப்படியில்லை' என்று சொல்லி பராசக்தியின் தத்வத்தை வர்ணிக்கிறது வேதம். பகவத்கீதையிலும் [2] अच्छेद्योऽयं, अदाह्योऽयं (துண்டுபோட முடியாதவன், நெருப்பினல் எரிக்கப்படாதவன்) என்று இல்லை என்ற பதங்களினல் பரமாத்மா வர்ணிக்கப்படுகிருன்.

மூந்தின மந்த்ரத்தில் 'ஆனந்தசித்' என்று வர்ணித்தபோதிலும், இந்த மந்த்ரத்தில் வர்ணிக்கமுடியாதவள் என்று சொல்வது விரோதமன்று. ஏனெனில் 'ஆனந்தமே பரமாத்மா, சுத்தசைதன்யமே பரமாத்மா' என்று சொல்லும்பொழுது 'ஆனந்தம்' 'சித்' என்ற பதங்கள் அடைமொழிகள் ஆகமாட்டா. பரமாத்மாவின் ஸ்வரூபமே அவை என்பதைக் கூறுவன.

பராசக்தியை "இப்படியில்லை, இப்படியில்லை" ("नेति नेति") என்ற பதங்களினல் வர்ணிக்கும்பொழுது, குண விசேஷங்கள்

1. *பிருஹதாரண்யகம் 2-3-6* 2. *கீதை 2-24*

பொருந்திய வஸ்துக்கள் அனைத்திலும் மித்யாபாவம் கூடியிருப்பதால், இத்தகைய மித்யா பாவத்தினுல் பாதிக்கப்படாதவள் என்று மட்டுமே அர்த்தங்கொள்ளல் வேண்டும். அதாவது 'ஸத்' ஆத்மகமாய் விளங்குபவள்.

பரமாத்மாவைக் குறிக்க [1]तत्त्वमसि என்ற மஹாவாக்கியம் சுருதிகளில் காணப்படுகிறது. "நீயே அது" என்பது அதன் பொருள். 'நீ' 'அது' என்ற இருபதங்களும் விசேஷணங்கள் பொருந்தியவையாயிற்றே, எப்படிப்பரமாத்மாவைக் குறிக்கும் என்ருல் அப்பதங்களைப்பின்வருமாறு பரிசீலனை செய்யவேண்டும். 'நீ' என்ற பதம் அல்ப அறிவுள்ள எதிரிலிருக்கும் ஜீவனைக் குறிக்கிறது. 'அது' என்பது ஸர்வக்ஞுனை எங்குமுள்ள ஈசுவரனைக் குறிக்கிறது. "நீயே அது" என்பதற்கு இரண்டு வஸ்துக்களுக்கும் வேற்றுமையேயில்லை என்று பொருள். இந்தப்பொருள் ஸித்திக்கவேண்டுமென்ருல், இரண்டு வஸ்துக்களுக்குமுள்ள குண வேற்றுமைகள் அனைத்தையும் அகற்றி, 'நீ' என்பதில் எஞ்சி நிற்பதும், 'அது' என்பதில் எஞ்சி நிற்பதும் ஒன்றேயாகுமென்ற அர்த்தத்தைக்கொள்ளல் வேண்டும். வேற்றுமைகளைத்தியாகம் பண்ணவேண்டும். இப்படிச்செய்தபின் எஞ்சி நிற்பதே பரமாத்மா. ஆகையால் பரமாத்மாவுக்குக் குண விசேஷங்கள் கிடையாது. ஆகையால் அது இந்தப்பிரகாரமாக இருக்கிறது என்று வேதங்களாலும் சொல்ல இயலாது என்பது கருத்து.

**ओं एवमित्यागमाबोध्यायै नमः ।**

ஓம் ஏவமித்யாகமாபோத்யாயை நம: (26)

**एकभक्तिमदर्चिता ।**

***ஏகபக்திமதர்சிதா*** **27**

(i) ஜீவ ப்ரஹ்ம ஐக்யத்தை அறிய ஆவல் கொண்டவர்களினுல் சிரத்தையுடன் பூஜிக்கப்படுபவள்.

விவரணம் :—**जीवो ब्रह्मैव नापरः ।** 'ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே, வேறல்ல' இது அத்வைதிகளின் கொள்கை. இப்படி ஒன்ருயிருக்கும் ஆத்மாவை அறிய விரும்புபவர்கள் பராசக்தியின்

1. சாந்தோக்யம் 6-8-7

பூஜை, துதி, நமஸ்காரம் தியானம் இவைகளைச்செய்கின்றனர். அதாவது கர்மேந்திரியம், ஞானேந்திரியம், மனம் எல்லாவற்றையும் பராசக்தியினிடத்தில் ஈடுபடுத்துகின்றனர்.

(ii) ஸம்ஸார மண்டலத்தில் கட்டுண்டவர்களில் சிலர்தான் ஸம்ஸாரத்தின் தன்மையை நன்கு அறிந்துகொண்டு அதனின்று விடுபடுவதற்குப் பராசக்தியை ஸகுண ப்ரஹ்மமாக உபாஸிக்கின்றனர். இத்தகைய பக்தி அநேக பாவனைகளுடன் செய்யப்படுகிறது. 1. இஷ்ட தேவதையை விக்ரஹ ரூபமாய் ஆராதிப்பது ஒன்று. 2. இதினும் மேம்பட்டது மனச்சாந்தியுடன் பராசக்தியை மாதாவாகக் கருதி தியானிப்பது. அழுதுகொண்டிருக்கும் குழந்தையை தாயார் எடுத்துக்கொண்டவுடன் அக்குழந்தை அழுகையை நிறுத்திச் சாந்தமாகி விடுவதுபோல் இவ்வித பக்தி செய்வதால் மனம் அமைதியை அடைகிறது. 3. பிறகு தான் பராசக்தியின் தாஸன் (भृत्यः) என்ற பாவனை செய்துகொள்ளல். ஹனுமான், ராமதாஸ் முதலியவர்கள் ராமனிடத்தில் வைத்த பக்தி இத்தகையது. (4) பிறகு பகவானைத் தன்து குழந்தையாகக் கருதிச் செய்யப்படும் பக்தி. இதற்கு 'வாத்ஸல்யம்' என்று பெயர்; உதாஹரணம்: யசோதை கிருஷ்ணனிடம் வைத்த பக்தி. 5. பகவானைத் தோழனாகக் கருதுவதை 'ஸக்யம்' (सख्यं) என்பார்கள்; உதாஹரணம்: அர்ஜுனன் கிருஷ்ணனிடம் வைத்த பக்தி. 6. எல்லாவித பக்தி பாவனைகளிலும் உயர்ந்தது 'மதுரம்' (मधुरं) என்னப்படும். கோபிகைகள் கிருஷ்ணனிடம் வைத்த பக்தி இத்தகையதே.

பகவானிடத்தில் பகைமை பாராட்டி முக்தியடைந்தவரும் இருக்கின்றனர். இத்தகைய மன நிலையைக்குறித்து நாரதமுனிவர் தர்ம புத்திரருக்குச் சொல்லுகிறார்:—

[1] यथा वैरानुबन्धेन मर्त्यस्तन्मयतामियात् ।
न तथा भक्तियोगेन इति मे निश्चिता मतिः ॥

"பகவானிடத்தில் பகைமை பாராட்டுபவர்கள் (உதாஹரணம்: ஹிரண்யகசிபு, கம்ஸன் முதலியவர்கள்) எவ்வளவு தீவிரமாகப்

1. பாகவதம் 7-1-26

பகவானிடம் தமது மனத்தை ஈடுபடுத்துவார்களோ, அந்த அளவுக்குப் பக்தியோகத்திலுல் ஈடுபடுத்த முடியாது என்பது எனது தீர்மானம்" ஆயினும் பகவத் பக்திக்கு எதிரிடையான பகவத் துவேஷம் கைக் கொள்ளத் தக்கதல்ல. வைகுண்டத்தின் துவாரபாலகர்களாக இருந்த ஜயவிஜயர்களே ஹிரண்யாக்ஷன், ஹிரண்யகசிபு என்பவர்களாக மறு பிறப்பில் ஜனித்தார்கள். அவர்கள் பகவானிடத்தில் வைத்திருந்த மூடபக்தியினுல் உத்தமபுருஷர்களான ஸனகாதிகளைப் பகவத் தரிசனத்தினின்றும் தடுத்தார்கள். மூடபக்தி (fanaticism) போற்றத்தக்கதன்று என்பது இவர்களடைந்த சாபத்தினின்றும் விளங்கும்.

இவ்விதமாகப் பற்பல பாவனைகளுடன் உடல் பொருள் ஆவி அனைத்திலுலும் பராசக்தியே ஸகுண பிரஹ்மரூபமாய் ஆராதிக்கப் படுகிருள்.

**ओं एकभक्तिमदर्चितायै नमः ।**

ஓம் ஏகபக்திமதர்ச்சிதாயை நம: (27)

**एकाग्रचित्तनिर्ध्याता ।**

*ஏகாக்ரசித்தநிர்த்யாதா* 28

அந்தக்கரண விருத்திகளையடக்கி அறிவை ஒருமுகப்படுத்திப் பராசக்தியினிடம் நிலைநிறுத்தும் ஸமாதிநிலையில் (தியானிக்கப்படும் பராசக்தி தனித்துத்தோன்ருமல் சித்தத்துடன் ஒன்ருகிவிடுவதால்) தியானிக்கப்படாதவள்.

விவரணம்:—ஸமாதியென்ற நிலையில் சித்தம் முற்றிலும் கட்டுப் பட்டுவிடுகிறது. இந்த நிலையை ஒருவன் அப்பியாஸத்தினுல் அடைய முடியும். இந்த அப்பியாஸம் எட்டுப்படிகள் கொண்டதென்று பாதஞ்ஜலயோக ஸூத்ரங்களில் சொல்லப்பட்டுள்ளது. அவை முறையே யமம், நியமம், ஆஸனம், பிராணுயாமம், பிரத்யாஹாரம், தாரணம், தியானம், ஸமாதி என்பவை. ஸமாதியில் இரண்டுவகையுண்டு, வியவஹார சக்தியை உபயோகித்துப் புத்தி பூர்வமாகத் தத்வத்தை யுணர்ந்து, அந்தத் தத்வ உணர்ச்சி மேம்பட்டு அதனின்று விளையும்

ஸமாதியை "ஸம்பிரக்ஞாத ஸமாதி" என்பர். புத்தி வியவஹாரங்களின் அலைகள் முற்றும் நசிந்து, சித்தம் தன்னிலேயே ஒடுங்கி நிற்பதற்கு 'அஸம்பிரக்ஞாத ஸமாதி' என்று பெயர். இவ்விரண்டாவதான ஸமாதி அவஸ்தையில் சித்தம் வேறு, பிரம்மம் வேறு என்று இல்லாமல், சித்தமே பிரஹ்மமாக விளங்குகிறது. ஞாதா (அறிபவன்), ஞானம் (அறிவு), ஞேயம் (அறியப்படும் பொருள்) என்ற வேற்றுமை அறவே ஒழிந்து, மூன்றும் ஒன்றுபடுகின்றன. ஆகையால் இந்த அஸம்பிரக்ஞாத ஸமாதி நிலையில் 'தியானிக்கப்படுகிறாள்' என்று சொல்ல முடியாது. பராசக்தி இத்தன்மை வாய்ந்தவள் என்று பொருள்.

**ॐ एकाग्रचित्तनिर्ध्यातायै नमः ।**

ஓம் ஏகாக்ரசித்தநிர்த்யாதாயை நம: (28)

**एषणारहितादृता ।**

**ஏஷணாரஹிதாத்ருதா** 29

ஆசைகளை முற்றும் விடுத்த ஸந்யாஸிகளினால் மிகுந்த அன்புடன் ஆதரிக்கப்பட்டவள்.

விவரணம் :— 'ஏஷணா' என்பது ஆசை. இது மூவகைப்படும். 1. இவ்வுலகை ஜயிக்கப் புத்திரன் வேண்டுமென்ற ஆசை. புத்திரன் இல்லாவிடில் இவ்வுலக வாழ்க்கையில் ஆனந்தமில்லை. 2. பித்ரு லோகத்தையடைவதற்கு பொருள் வேண்டுமென்ற ஆசை. யாகம் முதலிய வைதிக கர்மாக்களைச் செய்து பித்ருலோகத்தை அடைய வேண்டும். கர்மாக்களைச் செய்ய பொருள் வேண்டும். ஆதலால் தனத்தைச் சேர்க்க ஆசை உண்டாகிறது. 3. தேவலோகத்தை அடையவேண்டுமென்ற ஆசைக்கு 'லோகைஷணா' என்று பெயர். ஸந்யாஸிகள் இந்த மூன்று ஆசைகளையும் துறந்தவர்கள். தன் ஆத்மாவே பராசக்தியென்று அறிந்து ஸாக்ஷாத்காரமடைவதால், முக்தி கிடைக்கிறது. ஆகையால் பராசக்தியிடம் அளவற்ற பிரேமையைப் பாலிக்கின்றனர் என்று கருத்து.

**ॐ एषणारहितादृतायै नमः ।**

ஓம் ஏஷணாரஹிதாத்ருதாயை நம: (29)

**एलासुगन्धिचिकुरा चैनःकूटविनाशिनी ।**
**एकभोगा चैकरसा चैकैश्वर्यप्रदायिनी ॥ ७ ॥**

ஏலாஸுகந்திசிகுரா சைநஃகூடவிநாசிநீ ।
ஏகபோகா சைகரஸா சைகைச்வர்யப்ரதாயிநீ ॥

**एलासुगन्धिचिकुरा ।**

***ஏலாஸுகந்திசிகுரா*** **30**

(i) ஏலக்காயைப்போல நறுமணம் கமழும் கூந்தலுள்ளவள்.

விவரணம் :— வாஸனையுள்ளது என்பதற்குத்தான் ஏலக்காய் திருஷ்டாந்தம்; அதன் தன்மையையோ அளவையோ திருஷ்டாந்தத்தைக்கொண்டு தீர்மானிக்கக்கூடாது. பராசக்தியின் கூந்தல் இயற்கையான திவ்ய நறுமணம் வாய்ந்தது. இங்கு கூந்தல் என்னும் பதம் மற்ற எல்லா அவயவங்களையும் குறிக்கும். ஆனதால் பராசக்தியின் சரீரம் முழுவதும் எல்லா அவயவங்களும் இயற்கையான திவ்ய நறுமணத்துடன் கமழ்கின்றன என்று கிடைக்கிறது.

(ii) 'கந்தம்' என்ற பதத்தினால் முகரும் இந்திரியத்திற்கு விஷயமான 'நறுமணம்' என்பதை மட்டும் கொள்ளாமல், 'சக்தி' என்ற அர்த்தத்தையும் எடுத்துக்கொள்ளலாம். உதாஹரணமாக **सुरभि नो मुखाकरत्** என்ற வேத மந்திரத்தின் வெளிப்படையான பொருள் "(எனது) இந்திரியங்களை வாஸனை பொருந்தியவைகளாகச் செய்யட்டும்" என்பது. ஆனால் கண், செவி, மனம் முதலிய இந்திரியங்களுக்கும், வாஸனைக்கும் ஸம்பந்தமில்லாமையினால், 'வாஸனை' என்ற பதத்திற்கு, 'சக்தி' என்று அர்த்தம் பண்ணினால் தான் பொருந்துகிறது. அதைப்போல, பராசக்தியின் கூந்தல் கமழுவது போல, அவளுடைய வடிவின்ஏனைய அங்கங்களுக்கும் 'கமழுதல்' என்ற பதத்தினால், 'வல்லமை பொருந்தியிருத்தல்' என்று அர்த்தம் கொள்ளவேண்டும். ஆகையால் இந்த மந்த்ரத்திற்கு 'ஸர்வசக்தி வாய்ந்தவள்' என்றும் அர்த்தங்கொள்ளலாம்.

**ओं एलासुगन्धिचिकुरायै नमः ।**

ஓம் ஏலாஸுகந்தி சிகுராயை நம: (30)

एनःकूटविनाशिनी ।

*ஏந:கூடவிநாசினீ* 31

(i) பாபத் தொகுதியை நாசஞ்செய்பவள்.

விவரணம் :—'பாபம்' என்பதால் புண்ணிய கர்மாக்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டியது. பாபகர்மாவோ, புண்ணிய கர்மாவோ அதன் பலன் இந்த ஜன்மத்திலோ, ஜன்மாந்தரத்திலோ, அநுபவிக்கப் படாமல் அந்தக் கர்மா நாசத்தையடையாது. ஆனால் ஒருவனுக்கு ஆத்ம தத்வ ஞானம் உண்டாகிவிட்டால் அவனைக் கர்மா ஒருகாலும் பாதிக்காது கர்ம பந்தம் அவனை விட்டு நழுவிவிடும். தாயுமானவர் எழுதியபடி "காகமானது கோடி கூடி நின்றாலும் ஒரு கல்லின் முன்னெதிர் நிற்குமோ? கருமமானது கோடி முன்னே செய்தாலும் நின்கருணைப் பிரவாஹ அருளைத் தாகமாய் நாடினரை வாதிக்க வல்லவோ?"

கர்மமென்பது 'ஸஞ்சிதம்', 'பிராரப்தம்', 'ஆகாமி' என மூவகைப்படும். இவற்றில் 'ஸஞ்சிதம்' என்பது சேர்த்துவைக்கப் பட்டுத் தொகுதியாய் நின்று இனிமேல் அனுபவிக்கவேண்டிய கர்மம். 'பிராரப்தம்' என்பது இப்பொழுது எடுத்திருக்கும் பிறவியில் அனுபவித்துக்கொண்டிருக்கப்படும் கர்மம். 'ஆகாமி' என்பது வருங்காலத்தில் ஒருவன் ஈட்டப்போகும் கர்மம். ஆத்ம தத்வத்தை உணர்ந்தவனை ஸஞ்சிதம் பாதிக்காது. அவனுக்கு 'ஆகாமி' உண்டாகாது. உண்டானாலும் பாதிக்காது. ஆனால் பிராரப்தத்தை அநுபவிக்க இப்பிறவி எடுக்கப்பட்டிருக்கிறது. எப்படி வில்லினின்று விடுத்த அம்பைத் திரும்பும்படி செய்ய முடியாதோ, அதைப்போல் பிராரப்தத்தை நம்மால் அழிக்கமுடியாது. இதை யாவரும் அநுபவித்தே தீரவேண்டும். ஆயினும் ஞானி, தாமரை இலையில் எப்படி நீர்த்துளி ஒட்டிக்கொள்ளாதோ, அதைப்போல் உலகப்பற்றின்றி இப்பிராரப்த கர்மாவைக் கழித்துவிடுவான். இவனை ஜீவதசையிலேயே முக்தி அடைந்தவன், 'ஜீவன்முக்தன்' என்பார்கள்.

பராசக்தி பிரஹ்ம தத்வத்தை யுணர்த்தி ஊழ்வினை அனைத்தையும் நாசம் செய்கிறாள் என்பது கருத்து.

(ii) பாபச்செயல்களுக்குக் காரணமாகிய வஞ்சகமான மாயை என்ற அஞ்ஞானத்தைப் போக்கடிப்பவளாகப் பராசக்தி விளங்குகிருளென்ற அர்த்தமும் பொருந்தும்.

ओं एनःकूटविनाशिन्यै नमः ।

ஓம் ஏந: கூடவிநாசிந்யை நம: (31)

एकभोगा ।

*ஏகபோகா* 32

(i) காமேசுவரரோடு, தம் ஸ்வரூப ஆனந்த அநுபவத்துடன் கூடியவள்.

(ii) காரணம், காரியம் என்று இருவிதமாகப் பிரிந்துள்ள ஒன்ருன மாயைக்கு ஸத்தையைக் கொடுத்து பரிபாலிக்கும் சைதன்யமாக இருப்பவள். அதாவது மாயாசக்தியுடன் கூடிச் சைதன்ய ரூபமாக நின்றுகொண்டு, பராசக்தி ஜகத்தில் தோற்றம், இருப்பு, அழிவு என்ற விகாரங்களைச் செய்கிருள்.

(iii) உலக ரீதியாகப் பார்க்கும்பொழுது பதி, பத்னீ என்ற பேதத்தையொட்டி ஸ்திரீபுமான்களுடைய போகம் சார்ந்திருப்பினும், உண்மையில் ஒரே சைதன்யம் அவ்விருவர்களிலும் விளங்காநின்று போகாநுபவத்தைப் பெறுகிறது. இச்சைதன்ய வடிவமாகப் பராசக்தி விளங்குகிருள் என்பது கருத்து.

ओं एकभोगायै नमः ।

ஓம் ஏகபோகாயை நம: (32)

एकरसा ।

*ஏகரஸா* 33

(i) "எனது கொள்கையே உண்மை" என்று மாந்தர்களால் சொல்லப்படும் முரண்பாடான கொள்கைகளுக்கிடையே, ஒரே உண்மையாக விளங்குபவள். இந்த உண்மையே முரண்பாடுகளைத் தீர்த்து ஸமரஸத்தை உண்டுபண்ணுமாதலால் பராசக்தி அத்தன்மை வாய்ந்தவளென்பது கருத்து.

[1] रसं ह्येवायं लब्ध्वा आनन्दी भवति ।

"இவன் (புருஷன்) இந்த ரஸத்தை (உண்மையை) அடைந்தபின் ஆனந்தமடைகிறான் அன்றோ."

**(ii)** வீரம், ஹாஸ்யம் முதலிய ஒன்பது ரஸங்களிலும், முக்கியமான சிருங்கார ரஸமாக விளங்குபவள்.

'ஜகத்' என்பது பரமாத்மாவின் லீலானுபவத்திற்குக் களம் என்ற கருத்து முன்னுரையில் 18 ஆவது பகுதியில் விளக்கப்பட்டிருக்கிறது. லீலைகளுக்கு மிகவும் பொருத்தமான ரஸம் சிருங்காரமே. அந்தச் சிருங்கார ரஸமாகப் பராசக்தி விளங்குகிறாள்.

**(iii)** ஒரே பரமேசுவரன் யார்பால் அதிசயிக்கத்தக்க அன்பு வைத்திருக்கிறாரோ, அந்தப் பராசக்தி என்பது மூன்றாவது அர்த்தம்.

**(iv)** தன் பர்த்தாவாகிய பரமாத்மா ஒருவனிடம் மட்டுமே அதிசயிக்கத்தக்க பிரேமையுடன் கூடியவள் என்பது நான்காவது பொருள்.

**(v)** தின்பண்டங்களின் சுவை, 'இனிப்பு', 'துவர்ப்பு' 'உப்பு' முதலிய ஆறு வகைப்படும். அவற்றுள் 'இனிப்பு' என்ற 'மதுர'ச் சுவையாக விளங்குபவள் என்பது ஐந்தாவது பொருள்.

கீதையில் உணவுகளை ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று பகவான் பிரித்திருக்கிறார். ஸத்வ உணவின் தன்மை, **रस्याः स्निग्धाः स्थिरा हृद्या: आहाराः सात्त्विकप्रियाः** என்று சொல்லப் பட்டிருக்கிறது. "ரஸத்துடன் கூடியதும் (உலர்ந்து போகாததும்) எண்ணைப்பசையுள்ளதும், போஷணை சக்தியுடன் கூடியதும, ருசியுள்ளதுமான உணவு ஸாத்விகர்களுக்குப் பிரியமானது." (கீதை 17-8)

**ओं एकरसायै नमः ।**

ஓம் ஏகரஸாயை நம: (33)

**ऐकैश्वर्यप्रदायिनी ।**

***ஏகைச்வர்யப்ரதாயிநீ*** **34**

---

1. தைத்திரீய உபநிஷத் ஆனந்தவல்லி அநு. 7

(i) (ஜீவனுக்கு) தானும் ஈசுவரனும் ஒன்று என்ற பாவனையை உண்டுபண்ணுபவள்.

விவரணம் :— எல்லாப் பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாக விளங்கிக்கொண்டு பிரேரணை பண்ணிக்கொண்டிருப்பவன் ஈசுவரன். அஞ்ஞானத்திற்கட்பட்டு விழிப்பு, ஸ்வப்னம், நித்திரை என்ற அவஸ்தைகளை அநுபவித்துக்கொண்டிருக்கும் மனிதனுக்கு பிரஹ்மஞானம் உண்டாகும்பொழுது தானே பிரஹ்மம், தானே பரமாத்மரூபமாய் விளங்கும தத்வப்பொருள், தானே ஈசுவரன் என்ற அநுபவம் பிறக்கிறது. இந்த அநுபவத்தைப் பராசக்தி கொடுக்கிறாள் என்பது கருத்து.

(ii) கற்றவர்களோ, பணக்காரர்களோ பலர் சேர்ந்திருக்குமிடத்தில், அவர்களில் ஒருவனைப்பற்றிமட்டும் 'இவன்படித்தவன்' 'இவன் பணக்காரன்' என்று கூறினால் 'மற்றவர்களைவிட இவன் அதிகம் படித்தவன்' 'அதிகப் பணக்காரன்' என்பது தானாகக் கிடைக்கிறது. அதுபோல ஒரே ஐசுவர்யம் (**एकैश्वर्य**) என்பதற்கு எல்லையற்ற உயர்ந்த அணிமா முதலான ஐசுவர்யம், முக்தி என்பது பொருள். அதைக் கொடுப்பவள் பராசக்தி.

(iii) ஆணை செலுத்துதல் என்பது உலகின்கண் நடக்கக்கூடிய நல்வினைப்பயன்களில் மிகவும் பெரியது. இந்தப் பதவியையும் பராசக்தி கொடுக்கிறாள்.

'यः सर्वेषु भूतेषु तिष्ठन् यः सर्वाणि भूतान्यन्तरो यमयति'

'எந்தப் பரமாத்மா எல்லாப் பூதராசிகளிலும் இருந்துகொண்டு அவற்றின் சேஷ்டைகளுக்கு ஆதாரமாயிருக்கிறானோ' (பிருஹதாரண்யக உபநிஷத் 3-3-6)

**तत्त्वमसि** (நீயே அந்த பரமாத்மா.)

1 **एकमेवाद्वितीयम्** | (பரமாத்மா ஒன்றே, இரண்டன்று.)

**ओं एकैश्वर्यप्रदायिन्यै नमः ।**

ஓம் ஏகைச்வர்யப்ரதாயிந்யை நம: **(34)**

---

1. சாந்தோக்யம் 6-2-4.

एकातपत्रसाम्राज्यप्रदा चैकान्तपूजिता ।
एधमानप्रभा चैजदनेकजगदीश्वरी ॥ ८ ॥

ஏகாதபத்ர ஸாம்ராஜ்யப்ரதா சைகாந்த பூஜிதா ।
ஏதமாந ப்ரபா சைஜதநேக ஜகதீச்வரீ ॥

एकातपत्रसाम्राज्यप्रदा ।

***ஏகாதபத்ர ஸாம்ராஜ்ய ப்ரதா*** 35

(i) ப்ரஹ்ம ஞானத்திலிருந்து உண்டாகும் மோக்ஷத்தைக் கொடுப்பவள்.

விவரணம் :— ‘ஆதபம்’ என்றால் சரீரம், தேவதை, பூதம் என்ற மூன்று காரணங்களினின்று விளையும் ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதி பௌதிகம் என்ற மூன்றுவித துன்பங்களென்று பொருள். இவற்றினின்றும் ரக்ஷிப்பது ‘ஆதபத்ரம்’ எனப்படும். இத்துன்பங்கள் ‘பிறவி’ அல்லது ‘ஸம்ஸாரம்’ என்பதைச் சார்ந்துள்ளவை. பிறவியை அகற்றுவது ஆத்ம தத்வஞானம்; அதாவது தன்னின்று பிரியாது ஏகரூபமாய் விளங்கும் பிரம்மதத்தைப்பற்றிய ஞானமே. பிரம்ம ஞானத்தையடைந்துவிட்டால் அனைத்தையும்விடச் சிறந்து விளங்கும் தன்மையை அடைந்துவிடலாம். இதுவே ‘ஸாம்ராஜ்யம்’. இதைப் பராசக்தி கொடுக்கிறாள் என்பது கருத்து.

यज्ज्ञात्वा न पुनः मोहमेवं यास्यसि पाण्डव

“எதையறிந்ததால் மறுபடி அஞ்ஞானம் உன்னைப் பாதிக்காதோ, அர்ஜுனா!” (கீதை 4–35)

(ii) ‘ஏகாதபத்ர ஸாம்ராஜ்யம்’ என்பதற்குச் ‘சக்கரவர்த்திப் பதவி’ யென்பதும் பொருள். இதையும் பராசக்தி கொடுக்கிறாள்.

ओं एकातपत्रसाम्राज्यप्रदायै नमः ।

ஓம் ஏகாதபத்ர ஸாம்ராஜ்ய ப்ரதாயை நம: (35)

एकान्तपूजिता ।

***ஏகாந்தபூஜிதா*** 36

(i) தனது ஹ்ருதயத்தில் 'நான்' என்று பரிசுத்த ஆத்ம வஸ்துவாக நேரில் பார்க்கப்பட்டவள்.

விவரணம் :- 'தத்த்வமஸி' என்ற மஹா வாக்கியத்தைப் பரிசீலனை செய்து உபாதிகளைக்கற்றி ஒருமைப்பட்ட பிரஹ்மத்தைத் தனது ஹ்ருதயத்தில் விளங்குவதாகவும், 'अहम्' (நான்) என்ற பதம் குறிக்கும் பொருளாகவும், ஞானி நேர்முகமாக அறிகிறுன். பராசக்தியே அந்தப் பொருள் என்பது கருத்து. 'यत्साक्षादपरोक्षाद्ब्रह्म' "எது ஸாக்ஷாத்தாக அகக்கண்ணுக்கு நேரில் தோன்றுகிறதோ அது பிரஹ்மம் (பிருஹதாரண்யகம் 3-4-1)

(ii) 'உபநிஷத்' ரூபமாக விளங்குபவள், அல்லது 'உபநிஷத்' கிரந்தங்களினுல் பூஜிக்கப்படுபவள்.

விவரணம் :— 'ஏகாந்த' மென்பதற்கு 'வேதத்தின் அந்தம்' அதாவது உபநிஷத் என்று பொருள்கொள்ளலாம். உபநிஷத்துக்கள் பிரஹ்மத்தையுட் கருத்தாகக் கொண்டு அதையடையும் வழியைக்காட்டி, பிரஹ்மத்தில் முடிவையும் அடைகின்றன. பராசக்தி பிரஹ்மமேயாதலால், அவளை விளக்கும் உபநிஷத்கிரந்தங்களினுல் பூஜிக்கப்படுபவளாகச் சொல்லப்படுகிருள்.

(iii) ஏகாந்தமான (தனிமையான) இடத்தில் (யோகிகளினுல்) தியானிக்கப்படுபவள்.

(iv) ஸ்ருஷ்டிகாலத்தில் காமேசுவரரால் ஏகாந்தத்தில் பூஜிக்கப்படும் பராசக்தி.

விவரணம் :— பராசக்திவிலாசம் இல்லையாகில் பரமேசுவரரால் ஸ்ருஷ்டிக்க முடியாது. இக்கருத்தை விளக்கி ஸௌந்தரியலஹரியில் கூறப்படுவது :—

शिवश्शक्त्या युक्तो यदि भवति शक्तः प्रभवितुं
न चेदेवं देवो न खलु कुशलः स्पन्दितुमपि ।

"சக்தியுடன் கூடியதால் மட்டுமே சிவனுல் ஸ்ருஷ்டிக்க முடிகிறது, அவ்விதமில்லையாகில் விரலையசைக்கக்கூட சிவனுல் முடியாது."

(V) தனிமையில் வீற்று, இந்திரிய சேஷ்டைகளை ஒடுக்கி தியானஞ்செய்வதால் பராசக்தி நேரில் தோன்றுகிருள்; என்பது ஐந்தாவது அர்த்தம்.

[1]कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्षदावृत्तचक्षुरमृतत्वमिच्छन् ।

(தைரியம் வாய்ந்த ஒருவன் இந்திரியங்களை அடக்கி, மரணமின்மையை அடைய முயன்று தனது ஆத்ம பாவத்தை நேரில் காண்கிருன்.)

**ओं एकान्तपूजितायै नमः ।**

ஓம் ஏகாந்தபூஜிதாயை நம: **(36)**

**एधमानप्रभा ।**

***ஏதமாநப்ரபா*** **37**

எல்லாவற்றையும்விட மிகுந்த காந்தியுடன் கூடியவள்.

[2] तमेव भान्तं अनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ।

"ஸ்வயம்பிரகாசமாய் விளங்கும் பரமாத்மாவைச் சார்ந்தே அனைத்தும் பிரகாசிக்கிறது. அதன் காந்தியால் அனைத்தும் விளங்குகிறது."

**ओं एधमानप्रभायै नमः ।**

ஓம் ஏதமாநப்ரபாயை நம: **(37)**

**एजदनेकजगदीश्वरी ।**

***ஏஜதநேகஜகதீச்வரீ*** **38**

அசைவுள்ளனவையும், அசைவற்றனவையும் உள்ள பற்பல விகாரங்களோடுகூடிய எல்லாப் பொருள்களையும் தத்தம் செயல்களுக்குத் தூண்டுபவள்.

விவரணம் :—'ஏஜத்' என்ருல் 'அசைகின்ற' என்று பொருள். அசைகின்ற 'ஜகத்' என்பதால் ஜங்கம வஸ்துக்கள் குறிப்பிடப் படுவன. ஸ்தாவர வஸ்துக்கள் நீக்கப்பட்டனபோல் தோன்றும். ஆனல் அப்படியன்று. ஸ்தாவரம் ஜங்கமம் அனைத்தும் குறிப்பிடப்படவேண்டும்

---

1. கடவல்லி 4-1. 2. கடவல்லி 5-15.

[1] **सर्वेषु भूतेषु** (எல்லாப் பௌதிக வஸ்துக்களிலும்) என்ற சுருதியிருப்பதாலும், 'ஜகத்' என்பது பிரபஞ்சமனைத்தையும் குறிப்பதாலும், 'ஏஜத்' என்ற அடைமொழிக்கு 'அசைகின்ற' என்ற அர்த்தத்தை விடுத்து, 'பிரகாசிக்கின்ற' அல்லது 'தோன்றுகின்ற' என்ற அர்த்தத்தைக்கொள்ளுதல் நியாயமே. தவிர, பிரபஞ்சம் தோன்றும்பொழுது முதலில் 'ஹிரண்யகர்ப்பம்' என்ற வடிவமாயிருந்தது. ஸ்தாவர ஜங்கமங்கள் அனைத்தும் இதனின்றும் வெளிக்கிளம்பினவைகளாதலால், தூண்டப்படும் தன்மை அனைத்திற்கும் பொருத்தமுள்ளதே.

மேலும் ஸ்தாவரங்களாகிய மரம், கல் முதலியவையுங்கூடத் தங்களுக்கு வேண்டிய உஷ்ணம், காற்று, நீர் இவைகளை உட்கொள்ளக் கூடிய சக்தி வாய்ந்தன.

'**प्राणो विराट्**' என்ற சுருதிப்படி பிராணன் இல்லாத இடமே கிடையாது. ஆகையால் உலகிலுள்ள எல்லாப்பொருள்களையும் அடக்கியாளும் சக்தி வாய்ந்தவள் பராசக்தி என்பது இந்த நாமாவின் பொருள்.

**ओं एजदनेकजगदीश्वर्यै नमः ।**

ஓம் ஏஜதநேகஜகதீச்வர்யை நம: (38)

**एकवीरादिसंसेव्या चैकप्राभवशालिनी ।**
**ईकाररूपा चेशित्री चेप्सितार्थप्रदायिनी ॥ ९ ॥**

ஏக வீராதி ஸம்ஸேவ்யா சைக ப்ராபவஶாலினீ ।
ஈகார ரூபா சேஶித்ரீ சேப்ஸிதார்த்த ப்ரதாயினீ ॥

**एकवीरादिसंसेव्या ।**

***ஏகவீராதி ஸம்ஸேவ்யா*** 39

(i) அஸாதாரணமான தைரியம், காம்பீர்யம் முதலிய வீரத்தன்மை பொருந்தியவர்களால் உபாஸிக்கப்படுபவள்.

விவரணம் :- பராசக்தி, பக்தர்களுக்கு அநுக்கிரஹம் பண்ணுவதற்காகப் பற்பல சக்தி தேவதைகளாய் விளங்கிக்கொண்டு விக்கிரஹ

---

1. *பிருஹதாரண்யகம் 4-7-15.*

ஆராதனைக்கு இடங்கொடுத்துக்கொண்டிருக்கிறாள். இந்தச் சக்தி யம்சங்களை உபாஸித்துப் பக்தர்கள் வீரத்தன்மையைப் பெறுகிறார்கள் என்பது கருத்து.

(ii) 'ஏகவீரா' என்றால் 'ரேணுகா' தேவி, பரசுராமருடைய தாயார், பராசக்தியின் அம்சமான ஒரு தேவதை. ரேணுகை முதலிய சக்தி தேவதைகளினால் உபாசிக்கப்பட்டவளாய்ப் பராசக்தி விளங்குகிறாள் என்பது மற்றொரு கருத்து. அதாவது பராசக்தி பூர்ணசக்தியாய் இருக்கிறாள் என்பது.

ओं एकवीरादिसंसेव्यायै नमः।

ஓம் ஏகவீராதி ஸம்ஸேவ்யாயை நம: (39)

एकप्राभवशालिनी।

*ஏகப்ராபவஶாலிநீ* **40**

(i) எவரிடத்திலும் காணப்படாத வண்ணமாய்க் காப்பாற்றும் சக்தியுடன் பிரகாசிப்பவள்.

விவரணம் :— பிரபுவின் தன்மை 'ப்ராபவம்' எனப்படும். அதாவது அண்டியவனை காப்பாற்றும் சக்தி. ஒருவன் பிரபுவாயிருப்பின் பணத்தைக்கொடுத்து உதவுவான். ஆனால், ஆயுளையும், அறிவையும், ஆரோக்கியத்தையும், முக்தியையும் அவனால் கொடுக்கமுடியாது. பராசக்தியை 'நீயே சரணம்' என்று அண்டினால் அவள் ஸர்வ வல்லமை பொருந்தியவளாதலால், அனைத்தையும் தந்து காப்பாற்றுவாள்.

(ii) மறைந்து நிற்கும் சைதன்ய ரூபியாக இருப்பவள்.

விவரணம் :— ஆலமரத்தை உண்டுபண்ணும் சக்தி ஆலவிதையில் எப்படி மறைந்த வண்ணமாய் அமைந்திருக்கிறதோ, அதைப்போல் ஜகத்தைத்தோற்றுவிக்கும் பிராபவம் அல்லது மஹிமை மறைந்து நிற்கும் சைதன்ய வடிவமான பராசக்தியினிடம் பொருந்தியுள்ளது என்றும் பொருள் கூறலாம்.

(iii) ஈசுவரத் தன்மையுடன் கூடிய அகண்ட சைதன்யமாக விளங்குபவள்,

விவரணம் :— 'பிராபவம்' என்ற பதத்திற்கு ஈசுவரத்வமென்று அர்த்தம். 'ஜகத்' என்பது பராசக்தியின் ஈசுவரத்வமென்ற தன்மையினுல் உண்டாகிறது.

[1] 'पादोऽस्य सर्वा भूतानि' (எல்லாப் பூதங்களும் அகண்ட சைதன்யத்தின் கால் பாகம்). [2] 'एकांशेन स्थितो जगत्' (ஜகத் என்பது அகண்ட சைதன்யத்தின் ஓர் அம்சம் மட்டுமே.) சுத்த சைதன்யமென்ற பிரஹ்மம் ஒருமையாய், அநாதியாய் நிலைத்திருக்கிறது. பராசக்தி அந்த அகண்ட சைதன்யமே. ஈசுவரத்வம் பொருந்தி அவள் விளங்குகிருள் என்பது.

(iv) எல்லாவற்றிற்கும் மேலான முக்யமான ஈச்வரியாக இருப்பவள்.

விவரணம் :— உலகில் பிரபுவாக இருப்பவன் சிலவற்றிற்குத்தான் பிரபுவாயிருப்பான். அவனைவிட உயர்ந்த பிரபு வேருருவன் இருக்கலாம். இப்படி மேலே மேலே பார்த்துக்கொண்டுபோனுல் ப்ரபுதவத்தின் எல்லை யாரிடம் முடிவடைகிறதோ, யார் எல்லாவற்றிற்கும் பிரபுவோ யாரைவிட உயர்ந்த பிரபு இல்லையோ அவள்தான் பராசக்தி.

[3] एष सर्वेश्वर एष भूताधिपतिरेष भूतपालः'

(இவரே ஸர்வேசுவரன்; இவரே ஜகத்திற்கு அதிபதி; இவரே ஜகத்தை ரக்ஷிப்பவர்) என்று சுருதி கூறுகிறது. ஜகத் முழுவதிலும் அந்தர்யாமியாயிருந்து கொண்டு பிரேரணை செய்கிற ஜகத்காரண வஸ்துவான பரதேவதையின் ஸ்வரூபம் அகண்ட ஸச்சிதானந்தம். அவளைத் தன் ஆத்ம ஸ்வரூபமாக தியானம் செய்யவேண்டும்.

**ओं एकप्राभवशालिन्यै नमः ।**

ஓம் ஏகப்ராபவஶாலின்யை நம: (40)

**ईंकाररूपा ।**

***ஈகாரரூபா*** **41**

1. சாந்தோக்யம் 3-12-6. 2. கீதை 10-42.
3. பிருஹதாரண்யகம் 4-4-22.

பராசக்தியை விளக்கும் ' காதிவித்யா ' மந்த்ரத்தில் ஈகாரமென்ற அக்ஷரத்தின் வடிவை மூன்றுவது அவயவமாகக்கொண்டிருக்கும் பராசக்தி.

**ओं ईकाररूपायै नमः ।**

ஓம் ஈகாரரூபாயை நம: (41)

**ईशित्री ।**

***ஈசித்ரீ*** 42

அனைத்தையும் ப்ரேரணை செய்பவள்.

விவரணம் .— இச்சா சக்தி, க்ரியா சக்தி இரண்டும் பொருந்தியவள். ' அவனன்றி ஓரணுவும் அசையாது ' என்ற ஆப்தர் மொழி இங்கே கவனிக்கத்தக்கது.

**ओं ईशित्र्यै नमः ।**

ஓம் ஈசித்ர்யை நம: (42)

**ईप्सितार्थप्रदायिनी ।**

***ஈப்ஸிதார்த்தப்ரதாயிநீ*** 43

(i) விரும்பப்பட்ட பலன்கள் அனைத்தையும் கொடுக்கிறவள்.

விவரணம் :— புண்ணிய பாப கர்மாக்களுக்கு ஏற்றவாறு ஊழ் வினைப் பலன்கள் விளைகின்றன. கர்மாவே இந்தப் பலன்களை உண்டாக்குகிறதா, அல்லது கர்மாவுக்கு அந்நியமான சைதன்ய வஸ்து இங்ஙனம் செய்கிறதா என்ற கேள்வி உதிக்கிறது. கர்மாக்கள் மறு பிறப்பிலும் பயன் தருவதாக இருக்கலாம். இப்பிறவியிலே பயப்பதாக இருந்தாலுங்கூட அசேதனமான கர்மாக்கள் தாமே பலனை விளைவிக்கும் தன்மையுடன் கூடியனவன்று. பரமேசுவரனை [1] **कर्माध्यक्षः** ' கர்ம பலனுக்கு அதிகாரி ' என்று சுருதிகள் சொல்லுவதாலும், பரமேசுவரனே எல்லாவற்றையும் அறியும் தன்மை வாய்ந்து ஸர்வவல்லமை பொருந்தியவனுதலாலும் அவனே கர்ம பலனைக் கொடுப்பவன். புல்லறிவும், சக்திக்குறைவும்கூடிய ஜீவாத்மாவுக்குக் கர்ம பலனைத்தரும் ஆற்றல்

1. ஸ்வேதாச்வதரோபநிஷத் 6-11.

கிடையாது. ரமணமஹரிஷிகள் தமது 'உபதேசஸார'த்தில் கூறுவது—

कर्तुराज्ञया प्राप्यते फलं कर्म किं परं कर्म तज्जडम् ॥

"ஈசனது ஆணையால் பலன் அடையப்படுகிறது. கர்மம் பரமோ? அக்கர்மம் ஜடமாயிற்றே" பராசக்தி கர்ம பலன்களைக்கொடுத்து, பல காமனைகளைப் பூர்த்தி செய்கிறுளென்பது கருத்து.

(ii) வேதாந்தங்களால் விசாரிக்கப்பட்டவளாய் முக்ய புருஷார்த்த மான முக்தியைக் கொடுப்பவள்.

விவரணம்:— ஈப்ஸிதா என்ருல் உபநிஷத்துக்களால் விசாரிக்கப் பட்டவள் என்றும், அர்த்தம் என்பதற்கு மோக்ஷம் என்றும் பொருள். பிரஹ்ம ஞானத்தையடைய பரமாத்மாவை விளக்கும் வேதாந்த கிரந்தங் களைப் படித்து, சிந்தனை செய்து தமக்கு ஸ்வாதீனமாக்கவேண்டும். இவ்வாறு சிரவண மனனநிதித்யாஸனம் செய்தவர்களுக்கு எல்லோரும் விரும்பும் உயர்ந்த மோக்ஷமென்ற புருஷார்த்தத்தை பராசக்தி கொடுப்பாள் என்பது கருத்து.

ओं ईप्सितार्थप्रदायिन्यै नमः ।

ஓம் ஈப்ஸிதார்த்த ப்ரதாயின்யை நம: (43)

ईदृगित्यविनिर्देश्या चेश्वरत्वविधायिनी ।
ईशानादिब्रह्ममयी चेशित्वाद्यष्टसिद्धिदा ॥ १० ॥

ஈத்ருகித்யவிநிர்தேஶ்யா சேஶ்வரத்வ விதாயினீ ।
ஈஶாநாதி ப்ரஹ்மமயீ சேஶித்வாத்யஷ்ட ஸித்திதா ॥

ईदृगित्यविनिर्देश्या ।

***ஈத்ருகித்யவிநிர்தேச்யா*** 44

இவ்விதம் இருப்பவளென்று குறிப்பிட்டுக்காட்ட முடியாதவள்.

விவரணம்:—ईदृक् (ஈத்ருக்) என்ருல் இந்த லக்ஷணம், இந்தப் பரிமாணம், இந்த வடிவம், இத்தகைய தர்மம் பொருந்தியவள் என்பது. இவ்வனைத்தும் இந்திரியங்களினுல் பிரத்யக்ஷமாய் அறியக்கூடியவைகள். இவைகளை அறியமுடியுமாயின் இவைகள் யாரிடம் பொருந்தியுள்ளனவோ

அந்தப் பொருளைக்குறிப்பிடலாம். ஆனால் பிரம்மத்தை இந்திரியங்களால் அறியக்கூடாதாகையால் அதை இவ்விதம் இருக்குமென்று குறிப்பிட முடியாது. வேதாந்திகளின் கொள்கைப்படி உபநிஷத்துக்களே பிரம்மத்தையறிய பிரமாணம். பிரத்யக்ஷம், அனுமானம் முதலிய வேறு பிரமாணங்கள் தேவையில்லை. உபநிஷத்துக்கள் பிரம்மத்தைப்பற்றி 'இதுதான் பிரம்மம்' என்றோ, 'பிரம்மம் இவ்விதம் இருக்கிறது' என்றோ சொல்லுமாயின அவைகள் பிரத்யக்ஷாதிப் பிரமாணங்களைச் சார்ந்துவிடும். உபநிஷத்துக்களின் பூர்ண சப்தப்பிரமாணத்வத்திற்கு பங்கம் உண்டாகும். ஆகையால் பராசக்தி இத்தகையவள் என்று சொல்ல முடியாது.

यच्चक्षुषा न पश्यति, यन्मनसा न मनुते । "எதைக் கண்ணினால் பார்க்கமுடியாதோ, மனத்தினால் சிந்திக்கமுடியாதோ" (கேனோபநிஷத்)

शास्त्रयोनित्वात् "சுருதிகளே பிரஹ்மத்திற்குப் பிரமாணங்களாவன."

(ப்ரஹ்மஸூத்ரம் 1-1-3)

ओं ईदृगित्यविनिर्देश्यायै नमः ।

ஓம் ஈத்ருகித்யவிநிர்தேஶ்யாயை நம: (44)

ईश्वरत्वविधायिनी ।

ஈஶ்வரத்வவிதாயிநீ 45

(i) ஈசுவரனது தன்மையுடன் ஒன்றுபடுவதைச் செய்பவள்.

விவரணம் :— அஞ்ஞானத்தினால் உண்டாகும் ஆவரணம், விக்ஷேபம் என்ற காரணங்களினால், ஜீவன் தான் வேறு, ஈசுவரன் வேறு என்ற பேத புத்தியை மேற்கொள்ளுகிறான். அகண்டாகார சைதன்யமாய் விளங்கும் பராசக்தி இந்த அஞ்ஞானத்தையகற்றுகிறாள். ஜீவனே பிரம்மம் என்ற உண்மையை விளக்குகிறாள்.

स्वेन रूपेण अभिनिष्पद्यते । 'தன் ஸ்வரூபத்துடன் ஒன்றாக்கி விடுகிறாள்.'

(சாந்தோக்யம் 8-12)

(ii) ஈசுவரத்வம் என்பது உலகெங்கும் வித்யை, தனம் முதலியவற்றுடன் நிகரற்று விளங்கும் தன்மை. இதைப் பராசக்தி

அவனவன் நல்வினைக்குத் தக்கபடி கொடுக்கிருள் என்பது மற்ருெரு பொருள்.

ॐ ईश्वरत्वविधायिन्यै नमः ।

ஓம் ஈஶ்வரத்வவிதாயிந்யை நம: (45)

ईशानादिब्रह्ममयी ।

*ஈஶாநாதிப்ரஹ்மமயீ* 46

(i) ஈசானன் (ருத்ரன்) முதலிய அதிகாரி புருஷர்களுக்கும் அந்தர்யாமியாக ஸச்சிதானந்த ப்ரஹ்ம ஸ்வரூபமாக விளங்குபவள்.

விவரணம்:—பிரபஞ்சலீலை நடந்தேறுவதற்காக, பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், இந்திரன், வருணன் முதலிய பற்பல அதிகாரிகள் தத்தம் நாம ரூபங்களுடன் தத்தம் பொறுப்பை வகித்துக்கொண்டு கடமை புரிந்து ஆணை செலுத்தி வருகின்றனர். பராசக்தி எங்கும் அந்தர்யாமியாக இருப்பதால் இவர்களிடத்திலும் ஸச்சிதானந்த ரூபமாக விளங்கிக்கொண்டு அவர்களுக்குத் தத்தம் அலுவல்களைச் செய்யப் புத்தியையும் ஆர்வத்தையும் கொடுக்கிருள் என்பது கருத்து. பிரபஞ்சத்தின் போக்கிற்கு இந்த அதிகாரிகள் முக்கியமானவர்களாதலால் இவர்கள் குறிப்பிடப்பட்டார்கள்.

(ii) ஈசானன், தத்புருஷன், அகோரன், வாமதேவன், ஸத்யோ ஜாதன் என்று ஐந்து பிரம்மாக்கள் சுருதிகளில் சொல்லப்பட்டிருக் கிருர்கள். அவர்கள் யாருடைய ஸ்வரூபமோ அந்தப் பராசக்தியென்பது இரண்டாவது பொருள்.

விவரணம் :— தேவதத்தன் கிணற்றை வெட்டினனென்ருல் பரமாத்ம சக்தியைக்கொண்டு வெட்டினனென்றிருந்தபோதிலும், 'பரமாத்மா வெட்டினன்' என்று சொல்லாமல் 'தேவதத்தன் வெட்டினன்' என்றே சொல்லுகிருேம். அதைப்போல் குறிப்பிடப்படும் அந்த அந்தச் சக்தி அம்சங்களைச் சார்ந்து ஐந்து பிரம்மாக்கள் முதலிய பேதங்கள் அமைந்துள்ளன.

ॐ ईशानादिब्रह्ममय्यै नमः ।

ஓம் ஈஶாநாதிப்ரஹ்மமய்யை நம: (46)

## ईशित्वाद्यष्टसिद्धिदा ।

***ஈசித்வாத்யஷ்டஸித்திதா*** 47

ஈசித்வம் முதலிய எட்டு ஸித்திகளையும் (வல்லமைகளையும்) தருபவள்.

விவரணம் :— எட்டு ஸித்திகள் கீழ்க்கண்டவை ;—

1. அணிமா (**अणिमा**) நொடிப்பொழுதில் தேஹத்தைச் சிறுத்துக் கொள்ளுதல்.

2. மஹிமா (**महिमा**) உடலைப் பெரியதாக்கிக்கொள்ளுதல்.

3. லக்வீ (**लघ्वी**) பளுவைக் குறைத்துக்கொள்ளுதல்.

4. கரிமா (**गरिमा**) உடம்பைப் பளுவாக்கிக்கொள்ளுதல்.

5. ப்ராப்தி: (**प्राप्तिः**) நொடிப்பொழுதில் எங்கும் செல்லும் அல்லது வியாபிக்கும் தன்மை.

6. ஈசிதா (**ईशिता**) இந்திராதி தேவர்களையும் அடக்கியாள்வது.

7. ப்ராகாம்யம் (**प्राकाम्यम्**) விரும்பியதையெல்லாம் அடையும் சக்தி.

8. வசித்வம் (**वशित्वम्**) எல்லாப் பிராணிகளையும் வசப்படுத்தும் சக்தி.

ஒருவன் இவ்வெட்டையும் பெற்றுவிட்டால், ஆப்த காமனாகி விடுகிறான். மற்றும் அவன் விரும்பவேண்டுவதொன்றுமில்லை. ஆகையால், காமதேவதை இனி இவன் தன்னையண்டமாட்டானென்று தெரிந்துகொண்டு வேறு மனிதர்களிடம் சென்றுவிடுகிறாளாம், இக் கருத்தை வைத்துக் கீழ்க்கண்ட சுலோகம் விளங்குகிறது :—

अणिमा महिमा लघ्वी गरिमा प्राप्तिरीशिता ।
प्राकाम्यं च वशित्वं च यत्र कामाः परागताः ॥

காமனையை இரண்டு விதத்தில் வெல்லலாம். 'ஆப்த காமத்வம்' என்பது ஒரு வகை. அது முற்கூறியது. மற்றொரு முறையென்ன

வெனில் காமனையினுல் பாதிக்கப்படாமல் ஆசையனைத்தையும் அடக்கு வது. கீழ்கண்ட கீதா சுலோகத்திலிருந்து இந்த முறை விளங்கும்.

आपूर्यमाणं अचलप्रतिष्ठं समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।
तद्वत्कामाः यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न कामकामी ॥

(கங்கை, ஸிந்து முதலிய பல நதிகள் ஸமுத்திரத்தில் விழுகின்றன. ஆயினும் ஸமுத்திரத்தின் தன்மை இவற்றினுல் மாற்றம் அடைவதில்லை. நதிகளே நசித்து விடுகின்றன. அதைப்போல் காமனைகள் யாரைத் தாக்குவதால் அவன் தன்மையை அசைக்க முடியாமல், தாமே நாசமடை கின்றனவோ அவனே காமனையை வென்றவன். அவனுக்கே சாந்தி உண்டாகும். காமனைகளைப் பின்பற்றி ஓடுபவனுக்குச் சாந்தி உண்டாகாது.) (கீதை 2-70.)

ओं ईशित्वाद्यष्टसिद्धिदायै नमः ।

ஓம் ஈசித்வாத்யஷ்டஸித்திதாயை நம: (47)

ईक्षित्रीक्षणसृष्टाण्डकोटिरीश्वरवल्लभा ।
ईडिता चेश्वरार्धाङ्गशरीरेशाधिदेवता ॥ ११ ॥

ஈக்ஷித்ரீக்ஷண ஸ்ருஷ்டாண்ட கோடிரீஶ்வர வல்லபா ।
ஈடிதா சேஶ்வரார்த்தாங்க ஶரீரேஶாதிதேவதா ॥

ईक्षित्री ।

ஈக்ஷித்ரீ 48

ஸாக்ஷியாக மாத்திரம் இருந்துகொண்டு (பிரபஞ்ச லீலையை) பார்த்துக்கொண்டிருப்பவள்.

விவரணம்:—பிரபஞ்சத்தில் கணக்கற்ற ஜீவராசிகள் தோன்றுவதும் மறைவதுமாக இருக்கின்றன. கணக்கற்ற வஸ்துக்கள் நொடிக்கு நொடி மாறுபாடு அடைகின்றன. பராசக்தியின் சக்தியினுல் பிரபஞ்சம் உண்டானபோதிலும், பிரபஞ்ச விகாரங்களை அவள் உதாஸீனமாகப் பார்த்துக்கொண்டிருக்கிருள் என்று பொருள். காளிதாஸன் இக் கருத்தைக் கீழ்க்கண்டவாறு விளக்கியிருக்கிருர்:—

[1] अष्टामिर्यस्य कृत्स्नं जगदपि तनुभिर्बिभ्रतो नाभिमानः ।

"ஸமஸ்த ஜகத்தையும் தன்னுடைய (பஞ்சதன்மாத்ரைகள், மனம், அகங்காரம், மஹத் என்ற) எட்டுச் சரீரங்களினுல் தாங்கி நிற்பினும் ஒன்றிலும் பற்று இல்லாதவர்."

ओं ईक्षित्र्यै नमः ।

ஓம் ஈக்ஷித்ர்யை நம: (48)

ईक्षणसृष्टाण्डकोटिः ।

*ஈக்ஷணஸிருஷ்டாண்டகோடி:* *49*

பிரம்மாண்டகோடிகள் அனைத்தையும் தனது பரியாலோசனையினுல் உண்டாக்கியவள்.

விவரணம்:— 'கோடி' என்ருல் கணக்கில் அடங்காதன என்று பொருள். 'கோடி' என்ற பதம் இந்த மந்திரத்தில் 'கோடிகள்' என்ற பன்மைப் பொருளில் அமைந்துள்ளது. ஏனெனில் பிரம்மாண்டங்கள் தோன்றி மறைந்துகொண்டேயிருக்கின்றன. தற்காலத்தில் இருக்கும் பிரம்மாண்டங்களே முற்காலத்தில் இருந்தனவன்று. பிற்காலத்தில் இருக்கப்போவனவுமன்று. ஆகையால் 'கோடிகள்' என்ற பன்மைப் பெயர் பொருத்தமுள்ளதே. மேலும் பிரபஞ்சம் அநாதியானது. பரமாத்மாவின் ஸ்ருஷ்டி சக்தி அவருடன் கூட அநாதியாயிருந்து கொண்டிருப்பதுபோல் அச்சக்தியினின்று விளையும் ப்ரபஞ்சமும் அநாதியானது. இக்காரணம் பற்றியும் 'கோடிகள்' என்ற பதம் பொருத்தமே. ஈக்ஷணம் (ईक्षण) என்ருல் பரியாலோசனை. பரியாலோசனையால் மட்டும் ஜகத் தோன்றுமா வென்ற ஸந்தேகம் உதிக்கலாம். குயவன் பானையை உண்டாக்க அவனுக்கு அந்நியமான மண், ஜலம் முதலான பொருள்கள் வேண்டியிருக்கின்றன. பானைக்குக் குயவன் முதலியவற்றை நிமித்தகாரணமாகவும் மண்ணை உபாதான காரணமாகவும் சொல்லப்படும். பிரம்மாண்டங்களை உண்டுபண்ணுவதற்குப் பிரம்மம் நிமித்தகாரணமாக இருந்தாலும்,

1. புாளவிகாக்னி மித்ரம்.

உபாதானம் எவைகள் ? இக்கேள்விக்கு வேதாந்திகள் சொல்லும் பதில், 'பிரம்மமே நிமித்தமாகவும் உபாதானமாகவும் இருக்கிறது' என்பது. இயற்கையில் சிலந்திப்பூச்சி தனக்கு வெளியில் இருக்கும் ஒரு பொருளையும் தேடாமல் மெல்லிய நூலை விடுத்து சிலந்தி வலையைப் பின்னுகிறது. அதைப்போல் பிரம்மம் தானே நிமித்த, உபாதானகாரணங்களாக இருந்துகொண்டு பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கிறது.

तदैक्षत बहु स्यां प्रजायेय इति ।

"பரமாத்மா பலவற்றை உற்பத்திசெய்யவேண்டும் என்று ஆலோசித்தார்." (சாந்தோக்யம் 6–2–3)

स ईक्षांचक्रे । 'அவர் (பரமாத்மா) பரியாலோசனை செய்தார்.' (ப்ரச்னோபநிஷத் 6–3)

आत्मा वा इदमेक एवाग्र आसीत् नान्यत् किंचन मिषत् स ईक्षत लोकान्नु सृजा इति स इमाँल्लोकानसृजत ।

ஜகத் தோன்றுவதற்கு முன்பு ஆத்மா ஏகமாய்விளங்கிற்று. ஆத்மாவுக்கு வேறுபட்டதொன்றும் தோன்றவில்லை. ஆத்மா 'உலகங்களைத் தோன்றும்படி செய்யவேண்டும்' என்று யோசித்தார். அதன் பயனாகக் காணப்படும் உலகங்களைத்தோற்றுவித்தார்.' (ஐதரேயோபநிஷத்)

प्रकृतिश्च प्रतिज्ञा-दृष्टान्तानुपरोधात् । (ब्रह्मसूत्रं १-४-२३)

'பிரம்மமே ஜகத்திற்கு உபாதான காரணமுங்கூட ஏனெனில் இப்படிக் கருதுவது சுருதி வாக்கியங்களுக்கும், உதாஹரணங்களுக்கும், பொருந்தியிருக்கிறது.'

ओं ईक्षणसृष्टाण्डकोटये नमः ।

ஓம் ஈக்ஷணஸ்ருஷ்டாண்டகோடயே நம: (49)

ईश्वरवल्लभा ।

***ஈச்வரவல்லபா*** **50**

(1) காமேசுவரன் யாருடைய பதியோ அந்தப்பராசக்தி.

(ii) பிரஹ்ம விஷ்ணு ருத்ராதிகளிடம் உள்ள மஹிமையைவிட மிகச் சிறந்த மஹிமையுடன் கூடியிருப்பதால் அவர்களும் ப்ரீதியைக் காட்டி உபாஸிக்கும் பராசக்தி.

ओं ईश्वरवल्लभायै नमः ।

ஓம் ஈச்வரவல்லபாயை நம: (50)

ईडिता ।

*ஈடிதா* 51

(வேதாந்த சாஸ்திரங்களினால்) துதிக்கப்படுபவள்.

விவரணம்:— வேதாந்த சாஸ்திரங்கள் யாரை அறிய எண்ணங் கொண்டு பரிசீலனை செய்கின்றனவோ, அதுவாகப் பராசக்தி விளங்குகிறாள்.

ओं ईडितायै नमः ।

ஓம் ஈடிதாயை நம: (51)

ईश्वरार्धाङ्गशरीरा ।

*ஈச்வரார்த்தாங்கசரீரா* 52

(i) ஸச்சிதானந்தாத்மகமாக விளங்கும் சிவனுடைய ஸ்வரூபத்தில் பாதியான ஆனந்தத்தைத் தனது ஸ்வரூபமாக வைத்துக்கொண்டிருப்பவள்.

விவரணம் :— 'सच्चिन्मयः शिवः साक्षात् तस्य आनन्दमयी शिवा' என்பது ஸ்மிருதி வாக்கியம். 'ஸத்' ரூபமாகவும் 'சித்' ரூபமாகவும் பரமாத்மா இருக்கிறான். ஆனந்த ரூபமாகப் பராசக்தி இருக்கிறாள் என்பது பொருள். சிருஷ்டியனைத்தும் பரமாத்மாவின் லீலை. லீலையினின்று பெருகும் ரஸம் ஆனந்தம். லீலையை நடத்திவைப்பவள் பராசக்தி. ஆகையால் பராசக்தியே ஆனந்தவடிவமாகச் சொல்லப்படுகிறாள்.

(ii) பரமசிவனுடைய இடது பாகத்தைத் தனது சரீரமாகக் கொண்டிருக்கும் பராசக்தி.

விவரணம் :— ஓர் உடலை எப்படி இடதுபாதி, வலதுபாதியென்று பிரிக்கமுடியாதோ, அதைப்போல் பராசக்தியையும் பரமாத்மாவையும் பிரிக்கமுடியாது என்பது கருத்து.

தவிர, மனிதனுக்கு உயிர் நிலை ஹ்ருதயம் என்பது. அது சரீரத்தில் இடது பாதியிலேதான் இருக்கிறது. பராசக்தி பரமாத்மாவின் இடதுபாதியாக இருப்பதால் அவள் பரமாத்மாவின் உயிராக இருக்கிறாள் என்று கருதப்படும். ஸௌந்தர்யலஹரியில் பின்வருமாறு கூறப்பட்டு இருக்கிறது :—

[1]सुधामप्यास्वाद्य प्रतिभयजरामृत्युहरिणीं
विपद्यन्ते विश्वे विधिशतमखाद्या दिविषदः ।
करालं यत्क्ष्वेलं कबलितवतः कालकलना
न शंभोस्तन्मूलं तव जननि ताटङ्कमहिमा ॥

"அமிருதப்பிராசனம் செய்தால், சத்துருக்களாகிய முதுமை, இறப்பு என்ற இரண்டும் அணுகா என்பது உண்மையே. பிரஹ்மாவும், இந்திராதி தேவர்களும் அமிருதத்தைப் பானம் பண்ணியபோதிலும் (பிரளயகாலத்தில் அல்லது கல்பத்தின் முடிவில்) அழிந்துவிடுகின்றனர். ஹே! ஜகன்மாதா! உனது பர்த்தாவாகிய பரமசிவனோவெனின், பயங்கரமாகிய ஹாலாஹல விஷத்தை விழுங்கியபோதிலும் காலன் அவரை அணுகவில்லையே. என்ன ஆச்சரியம்! அதன் காரணம் என்னவெனின், தாயே! நீ அணிந்துகொண்டிருக்கும் தாடங்கங்களின் மஹிமையன்றோ!"

ஸ்திரீகள் தங்கள் கணவர்களது உயிரினுக்கு உயிர் என நடந்து கொண்டு பராசக்தியைப் போற்றி வந்தால், ஸௌமங்கலியத்துடன் ஆயுளைக் கழிக்கலாம் என்பது இதனின்று விளங்கும்.

(iii) பரமேசுவரனுடைய பீஜ மந்திரமாகிய 'ஹும்' என்பதில் பாதி பராசக்தியின் பீஜமந்திரமாக விளங்கிக்கொண்டிருப்பதால், பரமேசுவரனுடைய பாதி சரீரத்தைப் பராசக்திகொண்டிருக்கிறுளென்பது மூன்ருவது கருத்து.

1. சுலோகம் 28.

விவரணம் :— சொற்களுக்குச் சப்தம், அர்த்தம் என்ற இரண்டு அங்கங்கள் உள்ளன. சப்தம் இல்லாமல் அர்த்தம தொனிக்காது. அர்த்தம் தொனிக்காமல் சப்தத்தைச்சொல்லமுடியாது. பராசக்தியும, பரமேசுவரனும் 'வாக்கும்', 'அர்த்தமும்' போல இணைந்திருக்கின்றனரென்று காளிதாஸர் கூறுகிறுர். சப்தம் சக்திவடிவம். அர்த்தம் சிவவடிவம். அர்த்தம் தெரியாமல் இருந்தாலும் கூட, கான சப்தம் ஆனந்தத்தைத் தருகிறது. முன் கூறிய முதலாவது அர்த்தத்தில் பராசக்தி ஆனந்தவடிவமாகச் சொல்லப்பட்டாள். அதாவது 'ஹம்' என்ற பரமேசுவர பீஜாக்ஷரத்தில் சப்தவடிவமாகப் பராசக்தியிருக்கிருள். இந்த மூன்ருவது அர்த்தமும் இந்த மந்திரத்திற்குப் பொருத்தமானது.

## ॐ ईश्वरार्धाङ्गशरीरायै नमः ।

ஓம் ஈச்வரார்த்தாங்கசரீராயை நம: (52)

## ईशाधिदेवता ।

***ஈசாதிதேவதா*** **53**

**(i)** ஈசுவரனுக்கும் (ஜீவனுக்கும்) மேம்பட்ட தேவதையாக விளங்குபவள்.

விவரணம் :— 'ஈச' என்ற பதம் ஜீவன், ஈசன் இருவரையும் குறிக்கும். 'தத்வமஸி' என்ற மஹாவாக்யத்தில் 'தத்' பதத்தின் பொருள் ஈசுவரன், மாயையை உபாதியாகக்கொண்டவன். 'த்வம்' பதத்தின் பொருள் ஜீவன், அக்ஞானத்தை உபாதியாகக்கொண்டவன். இரு உபாதிகளையும் நீக்கிவிட்டால் மிஞ்சுவது கூடஸ்த சுத்த சைதன்யமே. அதுவே பராசக்தி. இவள் ஜீவன், ஈசுவரன் இருவர்களுக்கும் அதிதேவதையாக விளங்குகிருள்.

**(ii)** ஈசுவரனைக் 'காமேசுவரன்' என்றும் கூறலாம். ஏனெனில் ஜகத்தைத் தோற்றுவிக்கும் காமனை அவனிடம் பொருந்தியிருக்கிறது. प्रजाकामो वै प्रजापतिः என்பது சுருதி. "ப்ரஜாபதி ப்ரஜைகளையடைய வேண்டுமென்று இச்சித்தார்."

காமேசுவரன் யாருக்கு அதிதேவதையோ, (அதாவது யாரால் பூஜிக்கப்படுகிருனோ) அந்தப் பராசக்தி என்ற அர்த்தமும் இந்த மந்திரத்திற்குப் பொருந்தும்.

## ओं ईशाधिदेवतायै नमः

ஓம் ஈசாதிதேவதாயை நம: (53)

ईश्वरप्रेरणकरी चेशताण्डवसाक्षिणी ।
ईश्वरोत्सङ्गनिलया चेतिबाधाविनाशिनी ॥ १२ ॥

ஈச்வரப்ரேரணகரீ சேசதாண்டவ ஸாக்ஷிணீ ।
ஈச்வரோத்ஸங்க நிலயா சேதிபாதா விநாசிநீ ॥

### ईश्वरप्रेरणकरी ।

***ஈச்வரப்ரேரணகரீ*** **54**

(i) ஈசுவரனை (ஸ்ருஷ்டி காரியத்தில் ஈடுபடும்படி) பிரேரணை செய்பவள்.

விவரணம்:—இச்சாசக்தி, ஞானசக்தி, க்ரியாசக்தி யென்ற மூன்று சக்திகளுடன் பராசக்தியிருக்கிருள். தவிற விக்ஷேபம், ஆவரணம் என்ற மாயாசக்திகளும் அவள் வசமிருக்கின்றன. இச்சக்தியம்சங்களைக் கொண்டே பிரபஞ்சத்தின் நடைமுறை உண்டாவதால், பராசக்தியே 53-ம் மந்திரத்தில் கூறியபடி ஈசுவரனுக்கு அதிதேவதையாக இருந்து கொண்டு அவனை ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்களில் ஈடுபடுத்துகிருள்

ஸௌந்தர்யலஹரியில் இருக்கும் பின்வரும் சுலோகம் கவனிக்கத் தக்கது :—

जगत्सूते धाता हरिरवति रुद्रः क्षपयते
तिरस्कुर्वन्नेतत्स्वमपि वपुरीशस्तिरयति ।
सदापूर्वः सर्वं तदिदमनुगृह्णाति च शिवः
तवाज्ञामालम्ब्य क्षणचलितयोर्भ्रूलतिकयोः ॥

"பிரஹ்மா ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிருர். விஷ்ணு அதைக்காப்பாற்று கிருர். ருத்திரன் அதை அழிக்கிருர். (கல்பத்தின் முடிவில்) ஈசுவரன் அனைத்தையும் மறையும்படிசெய்து தன் ரூபத்தையும் தனக்குள் மறைத்துக்கொள்ளுகிருர். (பிறகு ஸதாசிவன் ஹே! அம்ப! உன் முகத்தைப்பார்க்கிருர்) உன் புருவங்களாகிய கொடிகள் பிரபஞ்ச

லீலையை ஆரம்பிக்கும்படி கட்டளையிடுவதாய் ஒருக்ஷணம் அசைகின்றன. இதைக்கவனித்து ஸதாசிவன் இவ்வனைத்தையும் அனுக்கிரஹஞ்செய்கிறார். (ஸ்ருஷ்டிக்கிறார் என்பது). ''

(ii) ஈசுவரனுடைய ஆக்ஞையை வழுவாது செய்பவள். அதாவது பராசக்தி உத்தம பதிவிரதை என்பது கருத்து.

விவரணம் :— இல்வாழ்க்கையைத் திகழும்படியும் கமழும்படியும் செய்வது பாதிவ்ரத்யம். இந்த அறத்தின் மேன்மையைப்பாரத தேசத்தில் மட்டுமன்று; உலகெங்கும் புகழ்ந்திருக்கிறார்கள். த்ரிசதீ உபாஸனையைப்பண்ணும் க்ருஹஸ்தர்கள் பதி-பத்னீ நெறிகளைக் குற்றங்குறைவின்றிக்கையாண்டு வரவேண்டுமென்பது தெளிவாகும்.

**ॐ ईश्वरप्रेरणकर्यै नमः ।**

ஓம் ஈச்வரப்ப்ரேரணகர்யை நம: (54)

**ईशताण्डवसाक्षिणी ।**

***ஈசதாண்டவஸாக்ஷிணீ*** **55**

(i) பரமேசுவரனுடைய தாண்டவமென்ற நடனத்தைப் பார்த்துக் கொண்டிருப்பவள்.

விவரணம்:—'ஜகத்' என்பது பரமேசுவரனுடைய லீலையென்பது முன்பு விவரிக்கப்பட்டது. லீலையைப்பார்ப்பவன் ஆனந்தமடைகிறான் என்பது உலக அநுபவம். பரமாத்மா தனது லீலையைப்பார்த்துக் கொண்டு தானே ஆனந்ததாண்டவமாடுகிறான். இந்த விலாஸத்துடன் பரமாத்மா விளங்கும்பொழுது அவரை நடராஜமூர்த்தியாக வழிபடுகிறோம். இந்த மூர்த்தியின் லக்ஷணங்கள் ஜகத்தின் தன்மைகளுக்கு மிகவும் ஒத்திருக்கின்றன.

நடராஜன் 'சித்' என்ற அரங்கத்தில் ஈசனாக விளங்கிக்கொண்டு 'சித்ஸபேசன்' என்ற பெயர் வகித்திருக்கிறார். 'ஜகத்' என்பது அகண்ட 'சித்' ஆகாரமாகிய வெட்டவெளியில் கணக்கற்ற அண்டங்களாக அமைந்துள்ளது.

'ஜகத்' என்பது முக்காலங்களால் பாதிக்கப்பட்டு சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற பிரிவினைக்கு உட்பட்டது. நடராஜனுக்கு

முன்முகம், பின்முகம் அமைந்துள்ளன. தான் நித்யரூபியாக இருந்து கொண்டு, பின் முகத்தினுல் சென்ற காலத்தையும் முன் முகத்தினுல் எதிர்காலத்தையும், நடனபாவனையினுல் நொடிக்கு நொடி மாறிக்கொண் டிருக்கும் ஜகத்தின் சலனத்தையும் விளக்கிக்கொண்டிருக்கிறுர்.

நடனமென்பது லயமல்லது தாளச்கிரமத்துடன் கூடி நடிகனுக்கும் பார்ப்பவர்களுக்கும் மகிழ்ச்சியை உண்டு பண்ணும் தன்மை வாய்ந்தது. ஜகத்தில் ஸூரியன், சந்திரன் முதலிய எல்லாக் கிரஹங்களும், நக்ஷத் திரங்கள் உட்பட அனைத்தும் எண்ணுதற்கரிய வேகத்துடன் வட்ட மிட்டுக்கொண்டிருப்பினும் குறித்த காலங்களில் குறிப்பிட்ட இடங்களை அடைகின்றன. வியாழன் 12 வருஷங்களுக்கு ஒருமுறை சூரியனைச் சுற்றுகிருன். சனி வட்டமிட 30 வருஷங்கள் ஆகின்றன. ஹாலீஸ் வால் நக்ஷத்திரம் **(Hally's Comet)** 75 வருஷங்களுக்கு ஒரு முறை பூமியை அணுகிறது. இவ்விதம் ஒவ்வொரு அண்டமும் லயக் கிரமத்துடன் செல்லுகிறது. லயக்கிரமமென்ற முக்கிய தர்மம் ஜகத்தின் அடிப்படையாக இருப்பதனுலேதான், ஒவ்வொருவனும் தனது அன்ருட வாழ்க்கையிலும் கால நியதியை அனுசரிக்க முயல்கிருன். தவிர, விவேகியின் திருஷ்டிக்கு 'ஜகத்' என்பது மஹத்தான லீலா விநோதமாகவே தென்படும்.

மற்றும் ஓர் தத்துவம் குறிப்பிடத்தக்கது. நடராஜமூர்த்தி அசுரனைக்காலால் மிதித்துக்கொண்டிருக்கிறுர். புண்ணிய பாபங்களுக்கு ஏற்றவாறே ஒவ்வொரு பிராணியினுடைய இன்பதுன்பங்கள் ஜகத்தில் உண்டாகும் என்ற கர்ம நியதியை இதனுல் விளக்குகிருர்.

நடராஜனின் சக்தியைச் சிவகாமஸுந்தரியென்கிருர்கள்; அதாவது பரமேசுவரனுடைய காமனை அல்லது இச்சா வடிவம். காமனை யில்லாவிடில் பிரபஞ்சத்தின் தோற்றம் உண்டாகாது. சிவகாமஸுந்தரி தன் பதியினுடைய தாண்டவத்தை ஆனந்தமாகப் பார்த்துக்கொண் டிருக்கிருள்.

நடராஜமூர்த்தி நெருப்பைக்கையிலேந்தியிருப்பதும், மதியைச் சூடியதும், மானைக் கையில் வைத்துக்கொண்டிருப்பதும் மற்றும் அவருடைய லக்ஷணங்கள் அனைத்திற்கும் பொருத்தமான கருத்துக்கள் உள்ளனவென்று சொல்லப்படுகிறது.

நடராஜன் தாண்டவத்தை நிறுத்தும்பொழுது 'ஜகத்' பரமாத்மாவிடம் லயித்துவிடும். மறுபடி துவக்கும்பொழுது 'ஜகத்' தோன்றும்.

(ii) பரமேசுவரனுடைய தாண்டவத்தினின்று 64 கலைகள் உண்டாகின்றன. அவற்றைப்பார்த்துக்கொண்டிருக்கும் பராசக்தி யென்பது மற்றொரு பொருள்.

விவரணம்:— பராசக்தி 64 கலைகளுடன் கூடியிருப்பதால் ஸரஸ்வதியென்ற பெயருடன் வித்யாரூபிணியாக உலகத்தில் பிரஸித்தியடைந்திருக்கிறாள்.

பரமேசுவரன் கையில் உடுக்கையை ஏந்தித் தாண்டவம் புரிகிறார். உடுக்கையிலிருந்து மாஹேசுவர ஸூத்ரங்கள் வெளிக்கிளம்பின. இவைகளே வியாகரணம், சந்தஸ் முதலியவைகளுக்கு அடிப்படை. ஜீவர்கள் பரமேசுவரனுடைய 'சித்' என்ற அறிவின் அம்சங்களுடன் கூடியிருப்பதால், ஜகத்திலுள்ள நாம ரூபங்களைப் பரிசீலனை செய்து, த்வனிகளின் உதவியைக்கொண்டும், தியான யோகம் முதலிய துறைகளில் பயின்றும் 64 கலைகளை உண்டுபண்ணினார்கள் என்பது கருத்து. இந்தக் கலைகள் பிரபஞ்ச தத்வங்களைப் போதிப்பவைகள். இவற்றைத் தெரிந்து கொள்ளுவதால் அரிய சக்திகளையும் ஸித்திகளையும பெறலாம். ஆனால் பிரஹ்மஞானத்தை அடைய இந்தக் கலைகளுக்கு அப்பாலுள்ள பராசக்தி தத்வமே உபயோகப்படும். இக்கருத்து அடங்கியுள்ள ஸௌந்தர்யலஹரீ சுலோகம் கீழே எழுதப்படுகிறது :—

चतुःषष्ट्या तन्त्रैः सकलमतिसंधाय भुवनं
स्थितस्तत्तत्सिद्धिप्रसवपरतन्त्रैः पशुपतिः ।
पुनस्त्वन्निर्बन्धात् अखिलपुरुषार्थैकघटना-
स्वतन्त्रं ते तन्त्रं क्षितितलमवातीतरदिदम् ॥ (श्लो. ३१)

"ஜகன்மாதா! பசுபதியாயிருக்கும் பரமேசுவரன் உலகத்திற்கு 64 தந்திரங்களை (கலைகளை)க் கொடுத்துவிட்டுச் சும்மாயிருந்துவிட்டார். இந்தக்கலைகள் தத்தம் இயல்புக்கு ஏற்றவாறு ஸித்திகளைக்கொடுக்கும் என்பது உண்மையே. ஆனால் இவ்வனைத்தும் பரதந்த்ரமானவை. ஆத்மாவுக்கு அன்னியமாயுள்ளவைகளைச் சார்ந்துள்ளன. இவை

மூன்றும் 'नहि नहि रक्षति डुकृञ् करणे' என்று பகவத்பாதர்கள் சொன்னதுபோல், உயர்ந்த புருஷார்த்தமாகிய மோக்ஷத்தைக்கொடா. இதை எண்ணியே நீ பரமேசுவரனை உன்னுடைய தந்த்ரத்தை உலகிற்கு அருளவேண்டுமென்று வற்புறுத்தினுய். பிறகு உன் தந்த்ரத்தை (ஆத்ம கலையை, ஆத்ம ஞானத்தை) உலகிற்கு (தக்ஷிணுமூர்த்தியாக அவதரித்து) ஈந்தார். உனது தந்த்ரம் எத்தகையது என்ருல் நான்கு புருஷார்த்தங்களையும் ஒருங்கே கொடுக்கக்கூடிய தன்மை பொருந்தியது".

இந்தத் தந்திரமே காதி வித்யை, ஹாதி வித்யை எனப்படுவன. லலிதாத்ரிசதீ 'காதி வித்யா' ரூபம். இந்த ஸ்வதந்த்ர வித்யை உலகத்தில் பரவியிருப்பதாலேதான், எல்லோரும் ஸ்வதந்த்ரத்தில் ஆசை கொள்ளுகிருர்கள். அரசியல் துறைகளிலும், தேசீயத் துறைகளிலும் கூட எல்லோரும் ஸ்வதந்த்ரத்திற்குப் பங்கம் வந்துவிடக்கூடாதென்று வாதாடுகிருர்கள்போலும். ஆனல் போலி ஸ்வதந்த்ரம் எது, உண்மையாக இருக்கும் ஆத்ம ஸ்வதந்த்ரமெது என்பதை ஞானிகளைத்தவிர ஒருவரும் அறிந்தவர்களன்று.

ओं ईशताण्डवसाक्षिण्यै नमः ।

ஓம் ஈசதாண்டவஸாக்ஷிண்யை நம: (55)

ईश्वरोत्सङ्गनिलया ।

***ஈச்வரோத்ஸங்கநிலயா*** 56

தன் பர்த்தாவாகிய ஈசுவரனுடைய தொடையைத் தனது வசிக்கும் இடமாக உடையவள்.

விவரணம் :— ராத்ரி ஸூக்தத்தில் பிரம்ம, விஷ்ணு, ருத்ராதிகளுடைய எந்த எந்த அங்கங்களில் பராசக்தி வசிக்கிருளென்பது சொல்லப்பட்டிருக்கிறது :—

पद्मयोनिमुखाब्जस्थां विष्णुवक्षःस्थले स्थिताम् ।
शिवाङ्कनिलयां गौरीं वन्दे मूर्तित्रयात्मिकाम् ॥

"பிரம்மாவினுடைய முகத்திலும், விஷ்ணுவினுடைய மார்பிலும், சிவனுடைய மடியிலும் கௌரீ வசிக்கிருள். இம்மும்மூர்த்திகளின் ஆத்மாவாக விளங்கும் கௌரியை (பராசக்தியை) வணங்குகிறேன்."

இந்த மந்திரத்தில் ஈசுவரனுடைய தொடையில் வசிக்கிருள் என்பதற்கு, உபலக்ஷணமாக மேற்கூறிய சுலோகத்தின் அர்த்தம் முழுவதையுமே கொள்ளவேண்டும். பிரம்ம, விஷ்ணு, ருத்ரர்கள் முறையே ஜகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரகர்த்தர்களாதலால் பராசக்தி இவர்களின் சக்தியாக இருந்துகொண்டு ஜகத்தின் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் மூன்றையும் செய்விக்கிருள் என்பது கருத்து.

ப்ரஹ்மாவின் முகத்தினின்றும் வேதங்கள் கிளம்பின. வேதங்களின் மூலமாகவே "ஜகத்" தோன்றியதால், பராசக்தி பிரம்மாவின் முகத்திலிருப்பதாகக் கருதப்படுகிறது.

ஒருவனைக் கார்க்கவேண்டுமென்ருல், மார்போடு அணைத்துக் கொள்ளுகிரேம். விஷ்ணு ஜகத்தைக் கார்க்கும் தொழிலைச் செய்வதால் பராசக்தி அவர் மார்பில் இருப்பதாகக் கருதப்படுகிறது.

சிவன் அல்லது ருத்ரன் ஜகத்தையழிக்கும் தெய்வமாதலால், கோபாக்கினி அவர் நெற்றிக்கண்ணிலிருநது பறக்கிறது. அப்பொழுது பராசக்தி அவர் மடியிலிருந்துகொண்டு அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டு கோபத்தைத் தணிக்கிருள். ஆகையால் ருத்ரனுடைய மடியிலிருப்பதாக வர்ணிக்கப்படுகிறது.

## ओं ईश्वरोत्सङ्गनिलयायै नमः ।

ஓம் ஈச்வரோத்ஸங்கநிலயாயை நம: (56)

## ईतिबाधाविनाशिनी ।

*ஈதிபாதாவிநாசிநீ* 57

(i) விதிவசத்தால் ஏற்படும் உபத்ரவங்களை நாசஞ்செய்பவள்.

(ii) க்ஷுத்ர ஜந்துக்களின் பீடையைப் போக்கடிப்பவள்.

விவரணம் :— 'விதி'யென்பது ஊழ்வினை. ஊழ்வினைப் பயனை அனுபவித்தேதீரவேண்டும் என்பது பொது விதியாக இருந்தாலும், பராசக்தி உபாஸகர்களுக்கு விலக்குவிதியமைந்துள்ளது. அவர்களை ஸஞ்சிதகர்மா பாதிக்கவே மாட்டாது. ப்ராரப்தத்தின் கொடுமையும் அவர்களின் மனப்பான்மையினுல் விலகிவிடும். மேலும் பராசக்தியிடம்

பக்தி செலுத்தினால் தமோகுணம் பொருந்திய க்ஷுத்ர தேவதைகள் அணுகவே மாட்டா. அல்ப ஜந்துக்களின் பீடையும் உண்டாகாது.

**ॐ ईतिबाधाविनाशिन्यै नमः ।**

ஓம் ஈதிபாதாவிநாசிந்யை நம: (57)

**ईहाविरहिता चेशशक्तिरीषत्स्मितानना ।**
**लकाररूपा ललिता लक्ष्मीवाणीनिषेविता ॥ १३ ॥**

ஈஹா விரஹிதா சேசசக்திரீஷத்ஸ்மிதாநநா ।
லகார ரூபா லலிதா லக்ஷ்மீ வாணீ நிஷேவிதா ॥

**ईहाविरहिता ।**

***ஈஹாவிரஹிதா*** 58

தன்னால் அடையப்பட வேண்டியதென்று ஒன்றும் இல்லாதவள்.

விவரணம் :— தன்னிடம் இல்லாத பொருளை அடையவேண்டுமென்ற அவாவுக்கு "ஈஹா" என்று பெயர். பராசக்திக்கு இந்த அவா ஒன்றுமில்லை; ஏனெனில் அவள் இச்சா, ஞான, க்ரியாசக்திகளுடன் கூடியவளாதலால் ஏதோ ஒன்று தன்னிடம் இல்லையென்ற எண்ணமே உதிக்கக் காரணமில்லை.

**ॐ ईहाविरहितायै नमः ।**

ஓம் ஈஹா விரஹிதாயை நம: (58)

**ईशशक्तिः ।**

***ஈசசக்தி:*** 59

பரமேசுவரனுடைய ஸர்வக்ஞத்வம் முதலிய பிரபாவங்களையுடையவள்.

விவரணம்:—'**देवात्मशक्तिं**' (1-3) என்று சுவேதாச்வதர உபநிஷத்தில் கூறியுள்ளபடி பரமேச்வரனுடைய ஆத்மாவாக தேவி இருப்பதால் அவரிடமுள்ள ஸாமர்த்யமெல்லாம் தேவியிடம் உள்ளன.

**ॐ ईशशक्तये नमः ।**

ஓம் ஈசசக்தயே நம: (59)

ईषत्स्मितानना ।

*ஈஷத்ஸ்மிதாநநா* 60

மந்தஹாஸம் பொருந்திய முகத்துடன் விளங்குபவள்.

விவரணம்:— காமனை யொன்றும் இல்லாததாலும், ஜகத்தைப் பற்றின்றி ஸாக்ஷியாக மட்டுமே பார்த்துக்கொண்டிருப்பதாலும் துக்க ஸம்பந்தத்திற்கு யாதொரு காரணமும் இல்லாததாலும், எப்பொழுதும் பரமானந்த ரூபியாய்ப் பிரஸன்ன முகத்துடன் பராசக்தி விளங்குகிருள்.

பிரஸன்ன முகமென்பது 'சாந்தம்' அல்லது அமைதியின் முகக்குறி.

"न प्रहृष्येत् प्रियं प्राप्य नोद्विजेत् प्राप्य चाप्रियम्"

"பிரியமானதையடைந்த பொழுது களிப்புறுமலும், அப்பிரியம் நேர்ந்தால் துக்கப்படாமலும்" என்று கீதையில் (5–20) கூறியதுபோல், மனம் விகாரமடையாமல் இருப்பதே சாந்தம். பிரஸன்ன முகம் இதன் அடையாளம். எல்லோரும் முக்கியமாக மாதர்கள், இந்த லக்ஷணத்தை விருத்தி செய்துகொள்ளல் வேண்டும். வெடி வெடிப்பது போல சிரிக்கக்கூடாது. வர்ஷதாரையாகக் கண்ணீர்விட்டு அழவுங் கூடாது. 'அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு' என்ற நான்கையும் உத்தமப் பெண்களின் அணிகலன்களென்று கவிகள் வர்ணித்திருக்கின்றனர்.

ओं ईषत्स्मिताननायै नमः ।

ஓம் ஈஷத்ஸ்மிதாநநாயை நம: (60)

लकाररूपा ।

*லகாரரூபா* 61

காதி வித்யையில் நான்காவது வடிவமாயுள்ள 'ல' காரத்தினுல் விளக்கப்படுபவள்.

ओं लकाररूपायै नमः ।

ஓம் லகாரரூபாயை நம: (61)

ललिता ।

*லலிதா* 62

உவமையற்ற அளவற்ற லாவண்யத்துடன் கூடியவள்.

விவரணம்:—நற்குணம் பொருந்தியவர் அனைவரும் அழகிய பொருளைக்கண்டால் உவகை பெறுவார்கள். தீயோர் பிறருடைய அழகைக்கண்டு பொறாமையோ, லோபமோ அடைவார்கள். ஞானிகள் நற்குணம் படைத்தவராதலால், உலகிலுள்ள இயற்கைப் பொருள் களிலும், மனிதனுடைய புத்திக்கூர்மையினால் செய்யப்படும் செயற்கை விந்தைகளிலும் அழகைக்கண்டு மகிழ்வார்கள். அவர்களுக்குப் பிரபஞ்சம் ஆண்டவனருளால் அமைக்கப்பட்ட ஆனந்தக்களமாகவும், அதில் ஆண்டவன் தாண்டவமாடுகிறானென்றும் தோன்றும். இறப்பு என்பது பழைய உருவங்கள் நசித்து, புதிய அழகிய உருவங்கள் பிறக்கும் தன்மையுடன் கூடியதாதலால், இறப்பையும் அவர்கள் வெறுக்கமாட்டார்கள். கவி ரவீந்திரநாத் டாகூர் **'The twin brothers Life and Death dancing over the wide world'** 'இரட்டைப்பிள்ளைகளாகிய பிறப்பும், இறப்பும் அகன்ற பாரினில் ஆடும் நடனம்' என்று வர்ணித்தார். பராசக்தி அளவற்ற அழகுவாய்ந்தவளாதலாலேயே பிரபஞ்சம் அழகுடன்பிறந்து ஞானிகளுக்கு ஆனந்தத்தை தருகிறது. மக்கள் பெற்ற தாயைக் கொள்ளுவாரன்றோ ?

**ओं ललितायै नमः ।**

ஓம் லலிதாயை நம: (62)

**लक्ष्मीवाणीनिषेविता ।**

***லக்ஷ்மீவாணீ நிஷேவிதா*** 63

லக்ஷிமி, ஸரஸ்வதியென்ற இருவர்களாலும் ஸேவிக்கப்படுபவள்.

விவரணம்:— 'லக்ஷ்மி' அல்லது 'ரமா' ஸர்வைச்வரிய சக்தி. 'ஸரஸ்வதி' ஸர்வஞான சக்தி. இந்த மந்த்ரத்தில் "ஸேவை" யென்பது பராசக்தியின் கட்டளையை எதிர்நோக்கி அதை அந்தரங்க அன்புடன் நிறைவேற்றலாகும். பராசக்தியின் உபாஸகனுக்கு ஸர்வைசுவர்யமும், ஞானமும் உண்டாகும் என்பது பொருள்.

**ओं लक्ष्मीवाणीनिषेवितायै नमः ।**

ஓம் லக்ஷ்மீவாணி நிஷேவிதாயை நம: (63)

लाकिनी ललनारूपा लसद्दाडिमपाटला ।
ललन्तिकालसत्फाला ललाटनयनार्चिता ॥ १४ ॥

லாகிநீ லலநாரூபா லஸத்தாடிம பாடலா ।
லலந்திகா லஸத்பாலா லலாட நயநார்சிதா ॥

**लाकिनी ।**

***லாகிநீ*** 64

ஆனந்த வடிவமான பிரம்மமாக விளங்குபவள்.

விவரணம் :— 'கம்' என்றால் 'ஸுகம்' 'பிரம்மம்' என்பன. 'அகம்' (अकम्) என்றால் ஸுகமற்றது; அதாவது பிரம்மதத்வத்தினின்றும் வேறுபட்டது என்று பொருள். பிரம்மம் ஒன்றே நிலைத்துள்ளது. ஆனந்தமயமானது. ஜகத்தோ பன்மை வாய்ந்தது, அழிவுள்ளது, துக்கத்திற்கு இடமானது. ஆகையால் 'அகம்' என்பது ஜகத்தைக் குறிக்கிறது. 'லய' என்றால் 'மறைகிறது' என்பது. அதனால் உற்பத்தி, மறைவு என்ற இரண்டும் குறிக்கப்பட்டுள்ளன. இந்த மந்திரத்தால் விளக்கப்படும் கருத்தென்னவெனின், ஜகத் யாரிடத்திலிருந்து தோன்றி யாரிடத்தில் திரும்பவும் மறைகிறதோ அந்தப் பிரம்மமே பராசக்தியென்பது.

**ॐ लाकिन्यै नमः ।**

ஓம் லாகிந்யை நம: **(64)**

**ललनारूपा ।**

***லலநாரூபா*** 65

யாருடைய ரூபமாகப் பெண்கள் இருக்கின்றனரோ, அந்தப் பராசக்தி.

விவரணம் :— பராசக்தி ஜகத்திற்குத் தாயாக இருப்பதால் பெண் உருவங்கொண்டவளாகக் கருதப்படுகிறாள்.

विद्याः समस्ताः तव देवि भेदाः स्त्रियः समस्ताः सकला जगत्सु ।

"தேவி! ஜகத்தில் உள்ள எல்லா வித்யைகளும் எல்லாப் பெண்களும் உனது ரூபங்களேயாவன" என்று தேவீ மாஹாத்ம்யத்தில், (11-6) கூறப்பட்டுள்ளது. தவிற,

'लिङ्गाङ्कितमिदं पश्य जगदेतद्भगाङ्कितम् ।'

என்பது புராண வசனம். அதன் அர்த்தம் "பரமாத்ம பராசக்திகளுடைய வடிவமாக ஜகத்தையறிந்துகொள்" என்பது. 'லிங்கம்' என்ற பதத்திற்கு "மறைந்திருக்கும் வஸ்துவை அறிகுறியாக நின்று விளக்குவது எதுவோ அது" என்று பொருள்; அரசனின் சக்தியைக் கிரீடம் விளக்குவதுபோல். ஆலயங்களில் பிரதிஷ்டை செய்திருக்கும் லிங்கவடிவம் அத்தன்மையதே. அது பிரஹ்மத்திற்கு அறிகுறியாக நிற்கிறது. எப்படியெனில், அதன் வடிவம் கோளம். கோளத்திற்கு ஆரம்பிக்குமிடமும், முடியுமிடமும் கிடையாது. அது ஆதி, அந்தம் அற்றது. (अनाद्यन्तम्) அதுவே பிரம்மத்தின் தத்வம். கோளம் விகாரமற்றது, மற்ற ரூபங்களைப்போலன்று. பிரம்மமும் விகாரமற்றது. கோளம் சிறுத்துக்கொண்டே வந்தால் மத்திப் புள்ளியில் ஒடுங்கிவிடும். பிரபஞ்சம் மறையும்பொழுது பிரம்மத்தில் ஒடுங்கிவிடுகிறது. மேலும் எந்த ரூபத்தையும் அணு அம்சங்களாகப் பிரித்தால் கோள அம்சங்களே விளையும். (Every form can be resolved into infinitesimal spherical segments each having its own spherical radius.) ஆகையால், பிரம்மமே எப்படி ஜகத்திற்கு ஆதாரமோ, அதைப்போல் ஜகத்திலுள்ள உருவங்கள் அனைத்துக்கும் கோளமும் வட்டமுந்தான் ஆதாரம். இவ்வுருவங்கொண்ட லிங்கம் பிரம்மத்தின் அறிகுறியாக நின்று அதை விளக்குகிறது. பிரணவம் எப்படி நாதப்பிரம்மமோ, அதைப்போல் 'லிங்கம்' ரூபப்பிரம்மம். 'भग' என்பது பராசக்தி, 'भगं श्री काम माहात्म्य वीर्य यत्नार्के कीर्तिषु' என்பது அமரகோச வாக்கியம். எல்லாச் சக்தி விலாஸங்களையும் भग என்ற பதம் குறிக்கிறது. 'भग'த்தை அதாவது 'பராசக்தி'யையுடையவன் 'பகவான்' பரமாத்மா. 'भग'த்தினின்று பாக்கியம் உண்டாகிறது.

ॐ ललनारूपायै नमः ।

ஓம் லலனாரூபாயை நம: (65)

लसद्दाडिमपाटला ।

***லஸத்தாடிமபாடலா*** 66

புதிதாக மலர்ந்த மாதுளம்பூவினுடைய வெண்மை சேர்ந்த சிவப்பு வர்ணமுடையவள்.

விவரணம் :— வெண்மை ஸத்வகுணத்தையும், சிவப்பு ரஜோ குணத்தையும் குறிக்கின்றன. பராசக்தி சுத்த சைதன்யமாக இருப்பினும், ரஜோகுணத்தின் சேர்க்கையால் ஜகத்தை உண்டுபண்ணுகிருள். ரஜோகுணம் இல்லாவிடில் சிருஷ்டி கிடையாது. கறுப்பு நிறம் தமோ குணத்தைக் குறிக்கும். அது அக்ஞானத்தின் தன்மை. அதன் கலப்பற்றவளாகப் பராசக்தி இருக்கிருள்.

ओं लसद्दाडिमपाटलायै नमः ।

ஓம் லஸத்தாடிமபாடலாயை நம: (66)

ललन्तिकालसत्फाला ।

*லலந்திகாலஸத்பாலா* 67

லலந்திகையென்ற நெற்றிச் சுட்டியால் அலங்கரிக்கப்பட்டவள்.

விவரணம் :— 'லலந்திகை' யென்பது ஒரு வகை ஆபரணம். அது நடுவில் நவரத்னங்களும், சுற்றிலும் முத்துக்களும் வைத்ததாகும். இதைப்போலுள்ள நெற்றிப் பதக்கம் முதலிய ஆபரணங்களையும் 'லலந்திகை' யென்ற பதம் குறிக்கிறது. புருவங்களுக்கிடையே ஸுஷும்னு நாடியில் ஆக்ஞா சக்ரம் இருப்பதாக யோகிகள் கண்டுபிடித்திருக்கின்றனர். இந்த ஆக்ஞா சக்ரம் கீழ்கண்டவாறு ஸௌந்தர்ய லஹரியில் வர்ணிக்கப்படுகிறது :—

तवाज्ञाचक्रस्थं तपनशशिकोटिद्युतिधरं
परं शम्भुं वन्दे परिमिलितपार्श्वं परचिता ।

"கோடி ஸூர்ய சந்திரர்களுடைய காந்தியுடன் பரமேசுவரன் பராசக்தியைப் பக்கத்தில் அணைத்துக்கொண்டு ஆக்ஞா சக்கிரத்தில் வீற்றிருக்கிருர். அவரை நமஸ்கரிக்கிறேன்". பெண்கள் நெற்றியில் ஆபரணங்களைப் பூணுதலோ, ஆண் பெண் எல்லோரும் நெற்றியில் திலகங்கள், குங்குமம, விபூதி முதலியவற்றையணிதலோ எல்லாம் ஆக்ஞா சக்கிரத்தில் விளங்கும் சிவசக்தியின் பூஜையேயாகும்.

ॐ ललन्तिकालसत्फालायै नमः ।

ஓம் லலந்திகா லஸத்பாலாயை நம: 67

रलाटनयनार्चिता ।

*லலாடநயனூர்ச்சிதா* 68

(i) புருவங்களுககிடையே விளங்கும் ஞான திருஷ்டியுடன் பொருந்தியவர்களால் உபாஸிக்கப்படுபவள்.

விவரணம் :—'லலாடம்' என்பது புருவங்களுக்கு இடையேயுள்ள மத்திய பாகத்தைக் குறிக்கும். 'நயனம்' என்ருல் 'ஞானம்'. நாம் ஒரு விஷயத்தைச் சிந்தனை செய்யும்பொழுது நம்மை அறியாமலே கண்ணை மூடிக்கொண்டு மனத்தைப் புருவங்களுக்கிடையே செலுத்துகிரேம். இந்த இடத்தில் ஆக்ஞா சக்கரம் இருக்கிறது. அது மனத்தின் இருப்பிடம். இதில் இடை, பிங்களை என்ற இரண்டு அறிவு நாடிகளும் கூடுகின்றன. ஒருவகை அறிவு உட்செல்லுவது (आन्तर), மற்ருென்று வெளியே செல்லும் அறிவு (बाह्यम्). கேசரீ முத்திரையை மேற்கொண்டு சித்தத்தை அடக்கி அறிவை ஆக்ஞா சக்கிரத்தில் நிலை நிறுத்தினல் ஞானம் உதயமாகிறது.

கேசரீ முத்திரையென்பது வெளிநாக்கை உள்நாக்கிற்கு உட்புறமாக மடித்துக்கொண்டுபோய், உச்சுவாஸ நிச்சுவாஸங்களை அடக்குதல் என்று சொல்லப்படுகிறது. அப்பியாஸத்தினுல் எவ்வளவு காலம் வேண்டுமானுலும் இந்த முத்திரையை அவலம்பனம் செய்யலாம். அதன் பயன் என்னவெனின், ஆயுளை அதிகரித்துக்கொள்ளலாம், சரீரத்தை எந்த உருவமாய் மாற்றிக்கொள்ள வேண்டுமோ அப்படி மாற்றிக்கொள்ளலாம், ஞானதிருஷ்டியின் அளவைப் பெருக்கலாம் என்றெல்லாம் சொல்லப்படுகிறது. சிருங்கேரி ஸ்ரீ சாரதா பீடத்தை யலங்கரித்த 10வது குரு ஸ்ரீ வித்யாசங்கர தீர்த்தர் இந்த முத்திரையை அவலம்பித்து லிங்க ரூபமாக உடலை மாற்றிக்கொண்டு ஸித்தியடைந்ததாக அவர் சரித்திரத்திலிருந்து தெரிகிறது.

இவ்வித யோகஸித்தியையடைந்தவர்களால் பராசக்தி உபாஸிக்கப்படுகிருள் என்பது பொருள்.

இதே அர்த்தத்தையுடைய மற்றொரு விளக்கமும் பொருந்தும். என்னவெனின், அஸி, வரணையென்ற நதிகளுக்கிடையே இருக்கும் 'அவிமுக்தம்' எனப்படும் காசி (வாரணாஸி) க்ஷேத்திரத்தில் அத்ரி மஹரிஷிக்கும் யாக்ஞவல்கியருக்கும் ஒரு காலத்தில் வினவிடைகள் நடந்தன. இந்த ஸம்வாதம் ஜாபால உபநிஷத்தில் இருக்கிறது. இதன் விஷயம் என்னவெனின், அவிமுக்த க்ஷேத்ரத்தில் பரமேசுவர ஆராதனை செய்தால் பரமாத்மாவையடைகிறான் என்பது. இந்த உபநிஷத்தில் பரமாத்ம ஞானத்தை யாக்ஞவல்கியர் விளக்கியிருக்கிறார். வாரணாஸியை லலாடமாகவும், யாக்ஞவல்கியர் விளக்கியிருக்கும ஞானத்தை நயனமாகவும் கொள்ளவேண்டும். இந்த ஞானத்தை யடைந்தவர்களால் பராசக்தி உபாஸிக்கப்படுகிறாள் என்பது.

(ii) நெற்றிக்கண் பொருந்திய த்ரியம்பகனால், அல்லது ருத்ரர்களால் பூஜிக்கப்படுபவள் என்பது இரண்டாவது பொருள்.

ॐ ललाटनयनार्चितायै नमः ।

ஓம் லலாடநயனார்ச்சிதாயை நம: (68)

लक्षणोज्ज्वलदिव्याङ्गी लक्षकोट्यण्डनायिका ।
लक्ष्यार्था लक्षणागम्या लब्धकामा लतातनुः ॥ १९ ॥

லக்ஷணோஜ்ஜ்வல திவ்யாங்கீ லக்ஷகோட்யண்ட நாயிகா ।
லக்ஷ்யார்த்தா லக்ஷணா கம்யா லப்த காமா லதாதநு: ॥

लक्षणोज्ज्वलदिव्याङ्गी ।

லக்ஷணோஜ்ஜ்வலதிவ்யாங்கீ 69

(i) (ஸ்வரூப தடஸ்த) லக்ஷணங்களுடன் விளங்கும் சுத்த வடிவத்துடன் கூடியவள்.

விவரணம் :— ஸத், சித் ஆனந்தம் என்பவை பராசக்தியின் ஸ்வரூப லக்ஷணங்கள். ஜகத்தை ஆக்கும் சக்தியாகப் பராசக்தி விளங்கும்பொழுது அவளுடைய தடஸ்த லக்ஷணம் தெரியவருகிறது. அதாவது ஸர்வக்ஞத்வம், ஸர்வசக்திமத்வம் முதலியவை. तदात्मानं स्वयमकुरुत । "தன்னைத்தானே உண்டுபண்ணிக்கொண்டாள்" என்ற

தைத்திரீய சுருதிப்படி ஸச்சிதானந்தமே கனத்து உபாதிகளின் ஸம்பந்தத்தால் ஒரு வடிவம் எடுத்து அளவற்ற சோபையுடன் பராசக்தி பிரகாசிக்கிருள் என்பது கருத்து.

(ii) ஸாமுத்ரிகா சாஸ்திரத்தில் கூறப்பட்ட திவ்ய லக்ஷணங்கள் வாய்ந்து காந்தியுடன்கூடிய சிரஸ், முகம், கை கால்கள் முதலிய அவயவங்களுடன் கூடியிருப்பவள் என்பது மற்றொரு கருத்து.

ओं लक्षणोज्ज्वलदिव्याङ्ग्यै नमः ।

ஓம் லக்ஷணோஜ்வல திவ்யாங்க்யை நமः (69)

लक्षकोट्यण्डनायिका ।

*லக்ஷகோட்யண்டநாயிகா* 70

கணக்கில் அடங்காத அண்டங்களைத் தனது 'ஸத்' என்ற நித்யத்வமாகிய தன்மையின் பிரதிபிம்ப அம்சங்களினல் காப்பவள்.

விவரணம் :— 'லக்ஷம்' 'கோடி' என்ற பதங்களுக்குக் 'கணக்கிலடங்காதிருப்பன' என்பது பொருள். ஏனெனில் பிரபஞ்சம் ஆதியற்றது. எத்தனையோ அண்டங்கள் தோன்றி, அழிந்துகொண்டிருக்கின்றன. இவைகளின் தொகுதியை ஸமஷ்டி என்பார். ஒவ்வொரு பாகமும் 'வியஷ்டி' எனப்படும். ஸமஷ்டியின் ஆத்மஸ்வரூபம் விராட் ஹிரண்யகர்ப்பர் என்றும், வியஷ்டியாகிய பாகங்களின் ஆத்மாக்கள் விச்வன், தைஜஸன், என்றும் சொல்லப்படுகிறது. இவைகள் சாசுவதமாக இருக்கமாட்டா. ஆயினும் சிற்சில காலம் நிலைத்திருப்பதன் காரணம் என்னவெனின், பராசக்தியின் ஸத்தை இவைகளிலும் விளங்கிக்கொண்டிருக்கிறது என்பதே.

ओं लक्षकोट्यण्डनायिकायै नमः ।

ஓம் லக்ஷகோட்யண்ட நாயிகாயை நமः (70)

लक्ष्यार्था ।

*லக்ஷ்யார்த்தா* 71

(i) வேதாந்த மஹா வாக்கியங்களை நன்கு சோதித்து அதன் மூலம் அறியப்படும் சுத்த சைதன்யமாயிருப்பவள்,

விவரணம் :— மஹா வாக்கியங்கள் நான்கு.

1, 'ப்ரஜ்ஞானம் ப்ரஹ்ம' (प्रज्ञानं ब्रह्म):- இது ஐதரேய ஆரண்யகத்தில் உள்ளது; ருக்வேத மஹா வாக்கியம். எந்தச் சக்தியினுல் நாம் இந்திரிய விஷயங்களை அறிகிறோமோ, அநுபவிக்கிறோமோ, அதுவே 'பிரஜ்ஞானம்' அல்லது உள்ளறிவு எனப்படும். இந்த அறிவு சுத்த சைதன்ய வடிவமாய் எல்லா ஜீவராசிகளிலும், பஞ்சபூதங்களிலும், ஒரே தன்மை வாய்ந்து விளங்கிக்கொண்டிருக்கிறது. இதுவே பிரம்மம்.

2. "அஹம் ப்ரஹ்மாஸ்மி" (अहं ब्रह्मास्मि) :—இது யஜுர்வேத மஹாவாக்கியம். பிருஹதாரண்யக உபநிஷத்தில் உள்ளது. தேசம், காலமென்ற உபாதிகள் அற்று, அந்தக்கரண விருத்திகளை ஸாக்ஷியாகப் பார்த்துக்கொண்டிருப்பவன் 'அஹம்' எனப்படுவான். ஸ்வயம் பிரகாசமாய், பூர்ணமாய் இருக்கும பிரம்மமே நான் (அஹம்) என்பது இந்த வாக்கியத்தின் கருத்து.

3. 'தத்த்வமஸி' (तत्त्वमसि) :– இது சாந்தோக்ய உபநிஷத் வாக்கியம். ஸாமவேதத்திற்கு உரித்தானது. ஜகத் தோன்றுவதற்கு முன்னும் பின்னும், ஒரே லக்ஷணத்துடன் விளங்கிக்கொண்டு, நாம ரூப பேதங்களன்றி, 'ஸத்பாவம்' என்பது யாதொன்று உண்டோ அதுவே 'தத்' என்பது. 'त्वम्' (நீ) என்று யாரைச் சொல்லுகிறோமோ, அவனுடைய தேஹம், இந்திரியங்கள் முதலியவற்றிற்கு அப்பால் யாதொரு சைதன்யம் அவனிடம் அடிப்படையாயிருக்கிறதோ, அதுவே त्वम् (நீ) என்பது. 'நீயே பிரம்மம்' என்பது இந்த மஹா வாக்கியத்தின் பொருள்.

4. 'அயமாத்மா ப்ரஹ்ம' (अयमात्मा ब्रह्म) :— இது அதர்வண வேத மஹா வாக்யம் மாண்டூக்ய உபநிஷத்திலுள்ளது. ஸ்வப்பிரகாசமாய் அகங்காரம் முதல் சரீரம் வரையுள்ள தொகுதியை விளக்கும் வஸ்து எதுவோ அதுவே 'பிரத்யக் ஆத்மா' எனப்படும். இதுவும் பரமாத்மாவென்ற பிரம்மமும் ஒன்றே என்பது இந்த மஹா வாக்கியத்தின் கருத்து.

(ii) 'அர்த்த:' என்றால் குருவினிடம் யாசிக்கப்படுவது. அதாவது பிரம்ம வித்யை; அதன் விஷயமான ஸச்சிதானந்த தத்வம். 'லக்ஷயம்' என்பதற்குக் குரு உபதேசம் பெற்று, யோகாப்பியாஸங்

களினுல் சித்தத்தை ஸமாதி நிலையில் ஆழ்த்தி, ஸகுணமாகவோ, நிர்க்குணமாகவோ, எங்கும் நிறைந்திருக்கும் வஸ்துவாக ஸாக்ஷாத்காரம் செய்யப்படும் பொருள் என்று அர்த்தம். பராசக்தி (குருவினிடத்தில் அறிந்துகொள்ள) யாசிக்கப்படும் பிரம்மஸ்வரூபமாக இருக்கிருள் என்றவாறு.

**ओं लक्ष्यार्थायै नमः ।**

ஓம் லக்ஷ்யார்த்தாயை நம: (71)

**लक्षणागम्या ।**

***லக்ஷணுகம்யா*** 72

லக்ஷணையினுல் அறிய முடியாதவள்.

விவரணம் :— 'திருச்சிராப்பள்ளி காவேரியில் இருக்கிறது' என்று சொல்லும்பொழுது இந்த வாக்கியத்திற்கு நேர்ப்பொருளைக்கொள்ள முடியாது. ஏனெனில், காவேரி ஜலத்தில் திருச்சிராப்பள்ளிப்பட்டணம் இருக்க முடியாது. 'காவேரி' யென்பதற்குக் 'காவேரியின் கரை' என்று அர்த்தம் கொள்ளவேண்டும், அதாவது காவேரியுடன் ஸம்பந்தப்பட்ட அதன் கரையில் திருச்சிராப்பள்ளி இருக்கிறது என்று அர்த்தம். இது 'லக்ஷணை'க்கு உதாஹரணம். இந்த உதாஹரணத்தில் காவேரி யென்ற சப்தம், அதன் கரை, இரண்டுக்குமுள்ள ஸம்பந்தம் என்ற மூன்றும் தெளிவாக இருக்கின்றன. ஏனெனில் 'காவேரிக்கு' ஜலம், கரை முதலிய விபாகங்கள் இருக்கின்றன. சுத்த ஞான ரூபியாயிருக்கும் பரர்சக்திக்கு இவ்வித விபாகங்கள் கிடையாது. ஆகையால் அவளை லக்ஷணையால் அறியமுடியாது என்பது.

1 '**विज्ञातारमरे केन विजानीयात्**' என்பது சுருதி. அறிவை எதனுல் அறியமுடியும்? என்பது பொருள். எது அறிகிறதோ அதுவே அறிவு. ஆகையால் மற்றென்ருல் அறிவை அறியமுடியாது, ஆனல் பிரம்மம் வேதாந்த மூலமாக அறியப்படுகிறதேயென்ருல் நேர்முகமாக அறிவிப்பதாக வேதாந்தங்கள் சொல்லவில்லை, விசேஷணங்கள் அனைத்தையும் எடுத்துவிட்டால் எஞ்சி நிற்பது எதுவோ அதுவே பிரம்மம்

---

1. *பிருஹதாரண்யகம் 4-5-15.*

என்றுதான் சொல்லுகின்றன. ஆகையால் பராசக்தி லக்ஷணையால் அறியமுடியாதவள் என்று சொல்லுவது பொருத்தமே.

**ॐ लक्षणागम्यायै नमः ।**

ஓம் லக்ஷணகம்யாயை நம: (72)

**लब्धकामा ।**

***லப்தகாமா*** 73

இஹலோகத்திலும் பரலோகத்திலுமுள்ள இஷ்டப்பட்ட பொருள் அனைத்தையும், அவற்றினின்று விளையும் ஸுகம் அனைத்தையும் அடைந்தவள்.

விவரணம் :— பராசக்திக்கு அடையவேண்டியது ஒன்றும் இல்லாததால் அவள் இவ்விதம் வர்ணிக்கப்படுகிருள். உட்கருத்து என்னவெனின், அவளுக்குப் புறம்பாக ஒன்றும் இல்லையென்பது. **मत्स्थानि सर्वभूतानि** (எல்லாப் பூதங்களும் என்னில் அடங்கியுள்ளன) என்பது கீதா வசனம்—9–4.

**ॐ लब्धकामायै नमः ।**

ஓம் லப்தகாமாயை நம: (73)

**लतातनुः ।**

***லதாதநு:*** 74

கல்பலதை முதலிய கொடிகளைப்போல் மெல்லியதும், அழகு வாய்ந்ததுமான சரீரத்தை உடையவள்.

விவரணம் :— கல்பலதை கேட்டதைக் கொடுக்கும் தன்மையது என்பது பிரஸித்தம். பராசக்தி அவ்விதம் இருக்கிருள்.

**ॐ लतातनवे नमः ।**

ஓம் லதா தநவே நம: (74)

**ललामराजदलिका लम्बिमुक्तालताञ्चिता ।**
**लम्बोदरप्रसूर्लभ्या लज्जाढ्या लयवर्जिता ॥ १६ ॥**

லலாம ராஜதலிகா லம்பிமுக்தா லதாஞ்சிதா ।
லம்போதரப்ரஸூர் லப்யா லஜ்ஜாட்யா லயவர்ஜிதா ॥

ललामराजदलिका ।

*லலாமராஜதலிகா* 75

கஸ்தூரி திலகத்தினுலோ, கஸ்தூரி பத்திரத்தினுலோ விளங்கும் நெற்றியுடன் கூடியவள்,

விவரணம் :— நெற்றிப்பொட்டை எல்லோரும் அணியவேண்டும். அது ஆச்ஞா சக்கரத்தில் விளங்கா நிற்கும் சிவசக்தியைப் பூஜித்தலாகும். பராசக்தி தன்பிரபுவாகிய பரமாத்மாவைத் தன் சரீரத்திலுள்ள ஆக்ஞா சக்கரத்தில் பாவித்து இவ்விதம் கௌரவிக்கிருள்.

ॐ ललामराजदलिकायै नमः ।

ஓம் லலாமராஜதலிகாயை நம: (75)

लम्बिमुक्तालताञ्चिता ।

*லம்பிமுக்தாலதாஞ்சிதா* 76

அந்த அந்த அவயவங்களுக்குத் தக்கவாறு அங்கங்கே அணியப் பட்டுத் தொங்கி நிற்கும் முத்துமாலைகளால் அலங்கரிக்கப்படுபவள்.

விவரணம் :— முத்து வெண்மை நிறம் வாய்ந்ததால் ஸத்வ குணத்தைக் குறிக்கிறது. பராசக்தியை ஸத்வமயமாகத் தியானிக்க வேண்டும் என்பது கருத்து.

ॐ लम्बिमुक्तालताञ्चितायै नमः ।

ஓம் லம்பிமுக்தாலதாஞ்சிதாயை நம: (76)

लम्बोदरप्रसूः ।

*லம்போதரப்ரஸூ:* 77

மஹா கணபதியைப் பெற்ற தாயார்.

விவரணம் :— விக்கினங்களைப் போக்கடித்து எல்லா நன்மைகளை யும் பயக்கும் மஹா கணபதியென்ற சக்தியை ஜனங்கள் தியானிப்பதற்

காக விளங்கச் செய்தவன் என்று பொருள். மஹா கணபதியை யானை முகத்துடன் தியானிக்கவேண்டும். அதன் உட்கருத்தை அறிதல் நலம். ஸௌந்தரியலஹரியில் (சு. 10) பராசக்தியைப்பற்றி,

सुधाधारासारैः चरणयुगलान्तर्विगलितैः प्रपञ्चं सिञ्चन्ती ।

என்று வர்ணிக்கப்படுகிறது. இதன் கருத்து 'பராசக்தி தன் பாதங்களினின்று பெருகும் அமிருத மழையினால் பிரபஞ்சத்தை நனைக்கிருள். (ஜீவிக்கும்படி செய்கிருள்)' என்பது. இந்தக் கருத்துக்கு ஒரு வடிவம் கொடுப்பதென்றால் ஒரு கலசத்தினின்றும் அமிருதம் குழாய் மூலம் கீழே இறங்கி உலகங்களின் மீது பாயவேண்டும். யோக சாஸ்திரத்தில் ஒவ்வொரு ஜீவனிடமும் அமிருதம் சிரஸ்ஸில் இருப்பதாக சொல்லப் படுகிறது. தலையிலிருந்து தொங்குவதான குழாய்போல் இருக்கும் உருவத்துடன் அமைந்துள்ளது யானை. ஆகையால் யானை முகத்துடனும் மனித உடலுடனும் மஹா கணபதியின் வடிவம் தியானத்திற்காக அமைக்கப்பட்டதாகும். கணபதிக்கு நைவேத்யமாக மோதகம் ஏற்பட்டது. மோதகங்கள் அண்டங்களைக் குறிக்கின்றன. அண்டங்களை வயிற்றில் வைத்துக்கொண்டு துதிக்கையின் வழியாக சிரஸ்ஸிலிருந்து இறங்கும் அமிருதப் பெருக்கினால் உலகங்களை உஜ்ஜீவிக்கிருர் என்பது கருத்து. இந்த சக்தி முற்கூறிய சுலோகத்திலிருந்து பராசக்தியின் சகதியம்சமேயென்பது எளிதாக விளங்கும்.

ॐ लम्बोदरप्रसुवे नमः ।

ஓம் லம்போதரப்ரஸுவே நம: (77)

लभ्या ।

*லப்யா* 78

அடைவதற்கு யோக்கியமானவள்.

விவரணம் :— நச்வரமான பொருள்கள், ஸித்திகள், இவைகளைப் பெற எவ்வளவோ பாடுபடுகிறோம். இவைகளினின்று நித்யானந்தம் ஒருக்காலும் கிடைக்காது. உண்மையில் விவேகம் படைத்தவர் பராசக்தியை அறிவதற்கே முயற்சி செய்ய வேண்டுமென்பது கருத்து.

பராசக்தி அறிவினுக்கு அறிவாகி நம்மிடத்திலேயே விளங்கிக் கொண்டிருக்கிருள். உண்மையில் நாம் பராசக்தி ஸ்வரூபமாயிருந்த

போதிலும், அக்ஞானத்தால் அது விளங்காததால், கழுத்தில் தங்க நகையையணிந்துகொண்டே ஊரெங்கும் தேடுவதுபோல நாம் விலகியிருக்கிறோம். சிரவணாதிகளால் ப்ரஹ்மத்தை அறிந்தமாத்திரத்தில் அக்ஞானம் விலகினதும் முன்னுல் உள்ள பராசக்தி ஸ்வரூபத்தையே மறுபடியும் அடைகிறோம்.

ओं लभ्यायै नमः ।

ஓம் லப்யாயை நம: (78)

लज्जाढ्या ।

*லஜ்ஜாட்யா* 79

நாணத்துடன் விளங்குபவள்.

விவரணம் :— நாணம் ஒருத்தியிடமிருந்தால் அடிக்கடி காணப்பட மாட்டாள். பராசக்தி மறைந்து நின்றுகொண்டே பக்தர்களுக்கு வரன்களைக் கொடுக்கும் இயல்புடன் கூடியவள் என்பது கருத்து. 'நாணம்' பெண்களுக்கு அணிகலம். ஆண்களிடத்தில் அது 'விநயம்' எனப்படும். தேவீ மாஹாத்மியத்தில் பராசக்தி நற்குலத்தில் பிறந்தவர்களிடம் லஜ்ஜாரூபமாக விளங்குகிறுள் என்று சொல்லப்படுகிறது.

'कुलजनप्रभवस्य लज्जा'

இந்த மந்த்ரத்தில் 'லஜ்ஜை' என்ற பதத்தினுல் அதைப்போன்ற இதர அந்தக்கரண தர்மங்களும் குறிப்பிடப்படுகின்றன.

ओं लज्जाढ्यायै नमः ।

ஓம் லஜ்ஜாட்யாயை நம: (79)

लयवर्जिता ।

*லயவர்ஜிதா* 80

அழிவற்றவள்.

விவரணம் :— ஆதியிருந்தாலன்றோ அந்தமுண்டு. ஆரம்பம் இல்லாதாயின் முடிவு எது? பராசக்தி என்றும் நிலைத்திருப்பதால் ஆதி, அந்தம் அற்றவள். அதுபோலவே, வளருதல், குறைதல் முதலிய மற்ற விகாரங்களும் அற்றவள்.

'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म ।' — ஆனந்தவல்லி

'பிரஹ்மம் சாசுவதம், சுத்தசைதன்யஸ்வரூபி, அந்தமற்றது' அதாவது தேசகால உபாதிகள் அற்று, அறிவினுக்கு அறிவாய் விளங்குவது.

अविनाशी वा अरेऽयमात्मा अनुच्छित्तिधर्मा ।

"இந்த ஆத்மவஸ்து சாசுவதமானது. விகாரங்கள் அற்றது"
(பிருஹதாரண்யகம் 4-5-14)

**ओं लयवर्जितायै नमः ।**

ஓம் லயவர்ஜிதாயை நம: (80)

**ह्रींकाररूपा ह्रींकारनिलया ह्रींपदप्रिया ।**
**ह्रींकारबीजा ह्रींकारमन्त्रा ह्रींकारलक्षणा ॥ १७ ॥**

ஹ்ரீங்கார ரூபா ஹ்ரீங்கார நிலயா ஹ்ரீம்பத ப்ரியா ।
ஹ்ரீங்கார பீஜா ஹ்ரீங்கார மந்த்ரா ஹ்ரீங்கார லக்ஷணா ॥

**ह्रींकाररूपा ।**

***ஹ்ரீங்காரரூபா*** 81

யாருடைய (காதிவித்யா என்ற) மந்திரத்தில் 'ஹ்ரீம்' என்ற சப்தமும் வடிவமும் ஐந்தாவது அவயவமாக விளங்குகின்றனவோ அந்தப் பராசக்தி.

விவரணம் :— 'கல்யாண விருஷ்டிஸ்தவம்' என்ற ஸ்தோத்திரத்தில் ஸ்ரீ சங்கரபகவத்பாதாள்

"ह्रींकारमेव तव नाम गृणन्ति वेदाः"

(அம்ப! வேதங்கள் உனது பெயர் 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரமே என்கின்றன) என்று கூறியிருக்கிறார்கள்.

**ओं ह्रींकाररूपायै नमः ।**

ஓம் ஹ்ரீம்கார ரூபாயை நம: (81)

**ह्रींकारनिलया ।**

***ஹ்ரீங்காரநிலயா*** 82

'ஹ்ரீம்' என்பதை வீடாக உடையவள்.

விவரணம் :— பராசக்தி எங்கும் வியாபித்திருப்பினும், 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரத்தில் வஸிப்பவளாகத் தியானிக்கப்படுகிருள். ஒருவன் ஒரு கிராமத்தில் நடுவீட்டில் குடியிருந்தால், அவன் எங்கே போனுலும், சாப்பிடவோ, தூங்கவோ நடுவீட்டுக்கு வந்துவிடுவான். அவனைக் காண வருபவர் நடுவீட்டையே தேடிவருவார். அவன் எங்கே இருந்தாலும் நடுவீட்டுக்காரன் என்றே குறிப்பிடப்படுவான். அதுபோல் பராசக்தியை அடைவதற்கு 'ஹ்ரீம்' என்ற அவளது வாஸஸ்தலமாகிய பீஜ மந்திரத்தையே நாம் ஜபிக்கவேண்டும் என்பது கருத்து.

**ओं ह्रींकारनिलयायै नमः ।**

ஓம் ஹ்ரீங்காரநிலயாயை நம: (82)

**ह्रींपदप्रिया ।**

***ஹ்ரீம்பதப்ரியா*** 83

'ஹ்ரீம்' என்ற பதத்தில் ப்ரீதியுடன் இருப்பவள்.

விவரணம்:— 'பதம்' என்ருல் (1) எதனுல் அறியப்படுகிறதோ அல்லது (2) எது அடையப்படுகிறதோ அது. முதல் அர்த்தத்திற்கு உதாரணம், 'கிளி' யென்ற பதத்தினுல், 'கிளி' யென்ற பக்ஷியை நாம் அறிகிருேம். இரண்டாவது அர்த்தத்திற்கு உதாரணம், 'பரம பதத்தை அடைந்தான்' என்பதால் உத்தமஸ்தானம் அடையப்பட்டது என்று பொருள்.

'ஹ்ரீம்' என்ற சொல் பராசக்தியின் மந்திரமாதலால், அவளை அறியும்படி செய்யும் சக்தி வாய்ந்தது. ஆகையால் பராசக்தி 'ஹ்ரீம்' என்ற பதத்தில் (சொல்லில்) மிகவும ப்ரீதி வைத்திருக்கிருள்.

மற்றது, 'ஹ்ரீம்' என்பது 'ஹகாரம்' 'ரேபம்' 'ஈகாரம்' 'அனுஸ்வாரம்' இந்நான்கும் கூடிய வார்த்தை. அதை ஸங்கீர்த்தனம் செய்து கொண்டிருந்தால் பராசக்தியின் கருணையடையப்படுகிறது. அவளையே அடையலாம். எல்லாப்புருஷார்த்தங்களையும் பெறலாம். ஆகையால் 'ஹ்ரீம்' பதம் பராசக்திக்கு மிகவும் ப்ரியமாயிருக்கிறது.

ओं ह्रींपदप्रियायै नमः ।

ஓம் ஹ்ரீம்பத ப்ரியாயை நம: (83)

ह्रींकारबीजा ।

*ஹ்ரீம்கார பீஜா* 84

'ஹ்ரீம்' காரம் யாருடைய பீஜமந்த்ரமோ அந்தப் பராசக்தி.

விவரணம் :— 'பீஜம்' என்ருல் 'வித்து'. ஆலவிதை தன்னுள் ஆலமரத்தை உண்டுபண்ணும் சக்தியைக்கொண்டிருக்கிறது. ஆலமரத்திற்கு ஆலம்விதையே பீஜம எனப்படும். ஆலம்விதையைப் பார்த்ததும் ஆலமரத்தை நினைக்கிறோம். எந்த அக்ஷரத்தினுல் எந்தத் தேவதை ஞாபகத்திற்கு வருகிறதோ அதுவே அந்தத் தேவதையின் பீஜம்.

'ज्ञापकं देवतानां यत् बीजमक्षरमुच्यते'

'ஹகார' மென்பது ஆகாசபீஜம். ஆகாசம் எப்படி சுத்தமாய் ஒன்றிலும் ஒட்டாத தன்மை வாய்ந்ததோ, அதைப்போல் சுத்த சைதன்யமாக இருக்கும் சிவனை 'ஹகாரம்' குறிக்கிறது. அக்னியின் பீஜமான ரேபம் பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்கு அடுத்து நிற்கும் காரணமாகிய மாயாயுக்தமான ஈசுவரனை குறிக்கிறது. ஈகாரமென்பது மன்மத பீஜம். காமனை இல்லாவிடில ஸ்ருஷ்டி கிடையாது. ஸ்ருஷ்டிக்குக் காரணமாய் நிற்கும் மன்மத பீஜம் ஸ்ருஷ்டிக்குப்பின் ஸ்திதிக்கு அல்லது பரிபாலனைத்திற்கு ஹேதுவான விஷ்ணுவையும் குறிக்கிறது. அனுஸ்வாரம் முற்கூறிய மூன்றின் தொகுதியின் முடிவில் இருப்பதால் 'லய' த்தைக் குறிககிறது. ஆகையால் 'ஹ்ரீம்' என்பது ஜகத்தின் தோற்றம், நிலை, அழிவு இம்மூன்றையும் இவற்றிற்கு ஆதாரமான சுத்த சைதன்யத்தையும் குறிப்பதால், பராசக்தியைக் குறிக்கும் வாசகமாக விளங்குகிறது. அதாவது பராசக்தியின் பீஜமே 'ஹ்ரீம்' என்பது.

ओं ह्रींकारबीजायै नमः ।

ஓம் ஹ்ரீங்கார பீஜாயை நம: (84)

ह्रींकारमन्त्रा ।

*ஹ்ரீங்கார மந்த்ரா* 85

(i) (பதமும் அதன் பொருளும் ஒன்றேயாதலால்) 'ஹ்ரீம்' காரத்தை தியானிப்பதால் (அதனுல் குறிக்கப்படும் தன்னையே உபாஸிப்பதாக எண்ணி அந்த உபாஸகனை) ரக்ஷிக்கும் தன்மை வாய்ந்த பராசக்தி.

குறிப்பு:— मननात् त्रायते यत् तत् मन्त्रम् "சிந்திப்பதால் சிந்திக்கிறவனை ரக்ஷிக்கிறது எதுவோ அதுவே மந்த்ரம் எனப்படும்"

(ii) 'ஹ்ரீம்' என்பது யாருக்கு உரித்தான மந்த்ரமோ அந்தப் பராசக்தி.

ॐ ह्रींकारमन्त्रायै नमः ।

ஓம் ஹ்ரீங்கார மந்த்ராயை நம: (85)

**ह्रींकारलक्षणा ।**

***ஹ்ரீங்கார லக்ஷணு*** 86

'ஹ்ரீம்' என்ற பதத்திஞல் எந்த லக்ஷணங்கள் குறிக்கப்படுகின்றனவோ, அவற்றுடன் கூடியவள்.

விவரணம்:— 84வது மந்திரத்தின் கீழ் 'ஹ்ரீம்' பதத்திஞல் குறிக்கப்படும் லக்ஷணங்கள் விவரிக்கப்பட்டன. அவை பிரபஞ்சத்தின் உற்பத்தி, ஸ்திதி, லயம் என்பவைகளும், அவைகளுக்குக் காரணமாயிருக்கும் சைதன்யமும் என்பதும் தெளிவாக்கப்பட்டது. உபாதிகளை அகற்றியபின் சுத்த சைதன்யமாக நிற்பது பராசக்தி. 'ஹ்ரீம்' என்பது பராசக்தியின் தடஸ்த லக்ஷணமாயிருக்கிறது. இதன் விவரணம் 24வது மந்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ளது.

ॐ ह्रींकारलक्षणायै नमः ।

ஓம் ஹ்ரீங்கார லக்ஷணுயை நம: (86)

**ह्रींकारजपसुप्रीता ह्रींमती ह्रींविभूषणा ।**
**ह्रींशीला ह्रींपदाराध्या ह्रींगर्भा ह्रींपदाभिधा ॥ १८ ॥**

ஹ்ரீங்கார ஜப ஸுப்ரீதா ஹ்ரீம்மதீ ஹ்ரீம்விபூஷணு ।
ஹ்ரீம்ஶீலா ஹ்ரீம்பதாராத்யா ஹ்ரீம்கர்ப்பா ஹ்ரீம்பதாபிதா ॥

ह्रींकारजपसुप्रीता ।

*ஹ்ரீங்காரஜபஸுப்ரீதா* 87

'ஹ்ரீம்' காரம் என்ற பீஜ மந்திரத்தை ஜபிப்பதால் பிரீதி அடைபவள்.

விவரணம் :— முந்திய மந்திரங்களில் 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரத்தின் பொருளும், கௌரவமும், பலனைத்தரும் சக்தியும் விளக்கப்பட்டன. இவற்றை மனத்தில் நினைத்துக்கொண்டு ஜபித்தல் அவசியம்.

அர்த்தம் தெரியாமல் ஜபிப்பது பிரயோஜனப்படாது. அது பதரைக்குத்துவதற்குச் சமானம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'तुषाणां खण्डनं यथा' அர்த்தம் தெரியாமல் சொல்பவனை மரக்கட்டைக்கும் பாரத்தைச் சுமப்பவனுக்கும் இணையாகக் கூறப்பட்டிருக்கிறது. அர்த்தத்தை உணர்ந்து சொன்னால் எல்லா நன்மைகளையும் அடையலாம்.

ओं ह्रींकारजपसुप्रीतायै नमः ।

ஓம் ஹ்ரீங்கார ஜப ஸுப்ரீதாயை நம: (87)

ह्रींमती ।

*ஹ்ரீம்மதீ* 88

ஹ்ரீங்காரத்துடன் கூடியவள்.

விவரணம்:—'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரத்தினால் குறிக்கப்பட்டும், 'ஹ்ரீம்' என்ற பதத்தினால் குறிக்கப்படும் லக்ஷணங்களுடன் கூடியிருப்பதனாலும், 'ஹ்ரீம்' என்ற பதத்திற்கு லக்ஷ்யார்த்தமாயிருப்பதனாலும், 'ஹ்ரீம்' சப்தத்திற்கும் அதன் அர்த்தத்திற்கும் வேற்றுமை இல்லாததாலும் எல்லாவிதத்திலும் ஹ்ரீங்காரத்துடன் கூடியவளாக பராசக்தி விளங்குகிறாள்.

ओं ह्रींमत्यै नमः ।

ஓம் ஹ்ரீம்மத்யை நம: (88)

ह्रींविभूषणा ।

*ஹ்ரீம்விபூஷணா* 89

'ஹ்ரீம்' என்பதை ஆபரணமாக உடையவள்

விவரணம்:— 'ஹ்ரீம்' என்பது ஜடமாயுள்ள மாயை அல்லது பிரகிருதியைக் குறிக்கும். எப்படியெனின், 'ஹகாரம்' வெண்ணிறத்தையும், அதன் தன்மையுடன் கூடிய ஸத்வ குணத்தையும் குறிக்கும். 'ரேபம்' சிவப்பு நிறத்தையும் ரஜோ குணத்தையும் குறிக்கும். 'ஈகாரம்' கறுப்பு நிறத்தையும் தமோ குணத்தையும் குறிக்கும். பிரகிருதி இம்மூன்று குணமயமானது என்று முன்னுரையில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் 'ஹ்ரீம்' என்பது பிரகிருதியைக் குறிக்கும். இந்த கேவல பிரகிருதி (nature) அநித்யமாகவும், அஞ்ஞான ஸ்வரூபமாகவும், துக்க மயமாகவும், ஸ்வயம்பிரகாசம் அற்றதாகவும் இருப்பதால் பராசக்தியின் பூஷணமாகக் கருதமுடியாதபோதிலும் அந்த பிரகிருதியுடன் கூடிய சைதன்யம், அதாவது ஈசுவர ஸ்வரூபம் ஸ்வயம்ப்ரகாசமாயிருப்பதாலும் சிரஸ் முதல் பாதம் வரை எல்லா நகைகளையும் பூண்ட பெண்மணிபோல் ஆனந்தத்தைக்கொடுப்பதாலும் இந்த ஸ்வரூபத்தைப் பொருளாகக் கொண்ட 'ஹ்ரீம்' பதத்திற்கு எல்லா ஐசுவரியங்களையும் கொடுக்கும் சக்தி இருப்பதாலும், 'ஹ்ரீம்' பதம் சோபையைக் கொடுக்கும் பூஷணமாகிறது. மேலும் "குண்டல புருஷன்" என்று சொன்னால் மனம், வேறு குண்டலமில்லாத புருஷர்களினின்றும் திரும்பி, குண்டல புருஷனையே எவ்விதம் நினைக்கிறதோ, அதைப்போல் 'ஹ்ரீம்' என்று சொல்லும்பொழுது மற்ற எல்லாவற்றையும் விலக்கி 'ஹ்ரீம்' பதப்பொருளான பராசக்தியிடமே மனம் செல்வதால் 'ஹ்ரீம்' என்பது அவளுக்கு ஆபரணம்.

ओं ह्रींविभूषणायै नमः ।

ஓம் ஹ்ரீம் விபூஷணாயை நம: (89)

ह्रींशीला ।

***ஹ்ரீம்சீலா*** 90

(i) பிரம்ம, விஷ்ணு, ருத்ரர்களுடைய பாரமார்த்திக ரூபமான ஸச்சிதானந்தத்தை ஸ்வரூபமாகக் கொண்டவள்.

விவரணம்:— 'ஹ்ரீம்' என்பது 89வது மந்திரத்தில் கூறியதுபோல் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களைக் குறிப்பதால் முறையே

அந்தக் குணங்களுடன் பொருந்திய விஷ்ணு, பிரம்மா, ருத்திரன் இவர்களையும் குறிக்கும். இவர்களின், உபாதியற்ற, ஆத்மரூபம் ஸச்சிதானந்தமாதலால், அதுவே அவர்களுடைய ஸ்வபாவம். 'சீலம்' என்றால் ஸ்வபாவம். ஆகையால் பிரம்ம, விஷ்ணு, ருத்திரர்களின் ஆத்மரூபம் ஸச்சிதானந்தமாகிய பராசக்தியே.

(ii) 'சீலம்' என்பதற்கு 'தர்மம்' என்பதும் பொருள். 'शीलं स्वभावे धर्मे च' என்பது கோசம். 'ஹ்ரீம்' என்பதால் குறிக்கப்படும் ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் யாருடைய மாயா சக்தியைச் சேர்ந்தனவோ, அந்தப் பராசக்தியென்றும் பொருள் கொள்ளலாம்.

ओं ह्रींशीलायै नमः ।

ஓம் ஹ்ரீம்சீலாயை நம: (90)

ह्रींपदाराध्या ।

*ஹ்ரீம்பதாராத்யா* 91

'ஹ்ரீம்' பீஜ மந்திரத்தினால் ஆராதிக்கத் தகுந்தவள்.

விவரணம் :— 'ஹ்ரீம்' என்ற மந்திரத்தின் ஸித்தி ஒருவனுக்கு உண்டாகிவிட்டால், எல்லாவித போகங்களையும், மோக்ஷத்தையும் அடைகிறான் என்று கீழ்க்கண்ட புவனேசுவரீ கல்ப வசனம் விளக்குகிறது.

"ह्रींकारेणैव संसिद्धः भुक्तिं मुक्तिं च विन्दति ।"

ओं ह्रींपदाराध्यायै नमः ।

ஓம் ஹ்ரீம்பதாராத்யாயை நம: (91)

ह्रींगर्भा ।

*ஹ்ரீம்கர்ப்பா* 92

மும்மூர்த்திகள் தத்தம் சக்திகளுடன் ஒன்றுகூடி யாருடைய கர்பபத்தினின்றும் பிறக்கின்றனரோ அவள்.

விவரணம் :— 'ஹ்ரீம்' என்பது பிரஹ்ம, விஷ்ணு, ருத்திரர்களைக் குறிக்கும் என்பது 90-வது மந்திரத்தில் சொல்லப்பட்டது.

இவர்களின் காரியங்கள் முறையே ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் எனப் படுவன. இவர்களின் சக்திகள் ஸரஸ்வதி, லக்ஷ்மி, துர்க்கை என்பவர்கள். இவர்கள் பராசக்தியின் அம்ச சக்திகளாதலால் பராசக்திக்குப் பிறந்தவர்களாகச் சொல்லப்படுகிருர்கள்.

मम योनिर्महद्ब्रह्म तस्मिन् गर्भं दधाम्यहम् । (14–3)

என்பது கீதையில பகவானுடைய வாக்கு. உலக உவமையை அனுசரித்து பரமாத்மா பிதாவாகவும், பராசக்தி தாயாகவும், 'ஜகத்' எனபது பிறக்கும் குழந்தையாகவும் வர்ணிக்கப்படுகிறது. 'யோனி' என்பது கர்ப்பத்தைத் தாங்கி அதை வளருமபடி செய்யும ஸ்திரீகளின் சரீர அங்கம். பராசக்தியை 'மஹத்யோனி:' என்று முற்கூறிய கீதா வசனத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'யோனி' என்பதற்குப் பொதுப் படையாக 'சூழ்நிலை' என்று பொருள் கொள்ளலாம். குழந்தை பிறக்குமட்டும் அன்னையின் யோனியில் வசித்து, வளர்ச்சிபெற்று, அந்தச் சூழ்நிலையை அதிகரித்ததும் வெளியே வந்துவிடுகிறது. ஐந்து வயது வரை வீடு என்ற சூழ்நிலையில் வளருகிறது. அதை அதிகரித்ததும் பள்ளி, சமுதாயம், தேசம், உலகம் என்ற யோனிகளாகிய சூழ்நிலை களில் முறையே இருந்துகொண்டு வளர்ச்சியைப் பெறுகிருன். சிலர் வீட்டுடன் நின்றுவிடுகிருர்கள். சிலர் தேசத்துடன் நிற்கின்றனர். உலகத்தையும் தாண்டி எங்கும் நிறைந்திருக்கும் பரமாத்மாவின் ஸச்சிதானந்த ஸ்வரூபத்தை அடைபவர்கள் ஸ்ரீமத் சங்கரபகவத்பாதர் களைப்போல் சிலரேதான். அவர்கள் எல்லாவிதச் சூழ்நிலைகளினின்றும் விடுபட்டவர்கள். அவர்களே முக்தர்கள். இச் சூழ்நிலைகள் அனைத்தையும் பராசக்தியின் கர்ப்பரூபங்கள் என்று கருதுவது பொருந்தும்.

ओं ह्रीङ्गर्भायै नमः ।

ஓம் ஹ்ரீம்கர்ப்பாயை நம: (92)

ह्रींपदाभिधा ।

*ஹ்ரீம்பதாபிதா* 93

'ஹ்ரீம்' என்பது யாருடைய பெயரோ அவள்.

விவரணம் :— ஹ்ரீம் என்பது பல வர்ணங்களின் தொகுதியைக் குறிக்கும். (மந்திரம் 70-ஐப் பார்க்கவும்.) ஒவ்வொரு வர்ணமும்

ஒவ்வொரு சக்தியைக் குறித்தபோதிலும், பல வர்ணங்கள் சேர்ந்த 'ஹ்ரீம்' என்பது எல்லா சக்திகளும் ஒருங்கே அமைந்துள்ள பராசக்திக்குப் பெயர் ஆகிறது.

ओं ह्रींपदाभिधायै नमः ।

ஓம் ஹ்ரீம் பதாபிதாயை நம: (93)

ह्रींकारवाच्या ह्रींकारपूज्या ह्रींकारपीठिका ।
ह्रींकारवेद्या ह्रींकारचिन्त्या ह्रीं ह्रींशरीरिणी ॥ १९ ॥

ஹ்ரீங்கார வாச்யா ஹ்ரீங்கார பூஜ்யா ஹ்ரீங்கார பீடிகா ।
ஹ்ரீங்கார வேத்யா ஹ்ரீங்கார சிந்த்யா ஹ்ரீம் ஹ்ரீம்சரீரிணீ ॥

ह्रींकारवाच्या ।

*ஹ்ரீங்காரவாச்யா* 94

எல்லோரும் 'ஹ்ரீம்' என்ற சப்தம் யாரைக்குறிக்கிறது என்று கருதுகிறார்களோ அவள்.

விவரணம்:— 'மந்திரி' என்ற பதம் அந்தப் பதவியில் யார் இருக்கிறாரோ அவனைக்குறிக்கும். இந்த அர்த்தம் 'மந்திரி' என்ற பதத்தில் ரூடியாக இருக்கிறது என்பார்கள். 'ரூடம்' என்றால் எல்லோராலும் சாதாரணமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. 'ஹ்ரீம்' என்பதன் அர்த்த விசேஷங்கள் விவரிக்கப்பட்டன. இந்த விசேஷங்கள் அனைத்தும் பராசக்திக்கே உரித்தானவைகள். ஆதலால் 'ஹ்ரீம்' அவளையே குறிக்கிறது என்று எல்லோரும் ஒப்புக்கொண்டு, அந்தப் பெயரினால் அவளைக் குறிப்பிடுகின்றனர்.

ओं ह्रींकारवाच्यायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரவாச்யாயை நம: (94)

ह्रींकारपूज्या ।

*ஹ்ரீங்காரபூஜ்யா* 95

'ஹ்ரீம்' என்ற மூலமந்திரத்தினால் பூஜிக்கப்படுபவள்.

விவரணம்:—ஒரு சக்தியைப் பூஜிக்கவேண்டுமானல் அந்தச் சக்தியின் மூலமந்திரத்தைக்கொண்டு பூஜிக்கவேண்டும். அப்படிச் செய்தால் அந்தர்முகமாகத் தியானிக்கும்பொழுது அந்தச் சக்தி ஹிருதயத்தில் பிரஸன்னமாவாள். ओं ह्रीं नमः என்பது 99ஆவது மந்திரம் 'ஹ்ரீம்' என்ற பதத்துடன் பிரணவத்தை ஆதியில் இணைத்து இறுதியில் 'நம:' என்ற வணக்கத்தைக் குறிக்கும் பதத்தைச் சேர்ப்ப தால், இந்த மந்திரம் கிடைக்கிறது, குருவினிடமிருந்து உபதேசத்தைப் பெற்று, ஸ்ரீசக்கரத்தில் இந்த மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு பராசக்தியைப் பூஜிக்கவேண்டும்.

ओं ह्रींकारपूज्यायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரபூஜ்யாயை நம: (95)

**ह्रींकारपीठिका ।**

***ஹ்ரீங்காரபீடிகா*** 96

'ஹ்ரீம்' பீஜ மந்த்ரத்திற்கு ஆதாரமாயிருப்பவள்.

விவரணம் :— 'பீடம்' என்றால் ஆதாரம். ஒரு சப்தத்திற்கு அதன் அர்த்தமே ஆதாரம் எனப்படும். ஏனெனில், சப்தத்திற்கு உயிரைக் கொடுப்பது அதன் அர்த்தமே.

ओं ह्रींकारपीठिकायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரபீடிகாயை நம: (96)

**ह्रींकारवेद्या ।**

***ஹ்ரீங்காரவேத்யா*** 97

(குருவினிடமிருந்து உபதேசமாகப் பெற்றுக்கொள்ளப்பட்ட) 'ஹ்ரீம்' மந்திரத்தினல் அறியக்கூடியவள்.

விவரணம் :— பராசக்தியின் ஸ்வரூபம் நிர்க்குணப் பிரஹ்மமாகும். அதை உணருவதற்கு அஞ்ஞானம் ஒழியவேண்டும். ஸம்ஸார பந்தங்களில் கட்டுப்பட்டவர்கள் அஞ்ஞானத்தினல் உண்டாகும் ஆசாபாசங்களில் ஈடுபட்டிருப்பதால், அவளை அறியமுடியாது.

குருவையண்டி உபதேசத்தைக் கேட்டு, அதைச் சிந்தித்து, தனதாக் ஆக்கிக்கொள்ளல் (श्रवणं मननं निदिध्यासनम्) முதலிய விதிகள் தத்வஞானமாகிய பலனையடைவதற்கென்றே ஏற்பட்டிருக்கின்றன. இதன் மூலமாய்ப் பராசக்தியின் ஸ்வரூபஞானம் விளங்கி அவளை அடைவதென்ற புருஷார்த்தம் கிடைக்கிறது.

ॐ ह्रींकारवेद्यायै नमः ।

ஓம் ஹ்ரீங்காரவேத்யாயை நம: (97)

ह्रींकारचिन्त्या ।

*ஹ்ரீங்காரசிந்த்யா* 98

'ஹ்ரீம்' காரத்தால் தியானிக்கப்படுபவள்.

விவரணம் :— பிரணவம் என்பது ॐ (ஓம்) என்று குறிப்பிடப் பட்டாலும், ஐந்து பிரணவங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றில் 'ஹ்ரீம்' என்பது ஒன்று. அது 'ஓம்' என்பதைப்போல் பிரமமத் தின் பிரதீகமாக (Symbol) விளங்குகிறது. எப்படி 'ஓம்' என்பது நிர்க்குணமான பரப்பிரம்மத்தையும் ஸகுணமான அபரப்பிரம்மத்தையும் தியானிக்க உதவுகிறதோ, அதைப்போல் 'ஹ்ரீம்' என்பதும் நிர்க்குணமான பராசக்தியையும், ஸகுணமான பராசக்தியையும் உபாஸிக்க உதவுகிறது. தியானிக்க ஆரம்பித்ததும் அந்த நிமிஷமே சித்தத்தில் ஸாக்ஷாத்காரம் ஏற்படுவதே தியானத்தின் உயர்ந்த லக்ஷணம். 'ஹ்ரீம்' இத்தகைய வன்மை வாய்ந்தது.

ॐ ह्रींकारचिन्त्यायै नमः ।

ஓம் ஹ்ரீங்கார சிந்த்யாயை நம: (98)

ह्रीं ।

ஹ்ரீம் 99

எல்லாவற்றையும் அபஹரிக்கிறவள். 99

விவரணம் :— வித்யை, தனம் முதலிய எல்லாவற்றையும் கொடுக்கும் சக்திவாய்ந்தவளாகப் பராசக்தி இருப்பினும், அஞ்ஞானம்

அகன்று ஆசை அனைத்தையும் துறந்தவனுக்கு இவையொன்றும் பயன் படாவாதலால், அவனிடமிருந்து இவற்றைப் பராசக்தி அபஹரித்து விடுவதாகச் சொல்லப்படுகிருள். அவளிடம் பேரின்பமாகிய முக்தி நிலை ஒன்றையே நிலைக்கச் செய்கிருள். பராசக்தி மாயையை அபஹரித்து முக்தியைத் தரும் தன்மை வாய்ந்தவள் என்பது பொருள்.

ॐ ह्रीं नमः ।

ஓம் ஹ்ரீம் நம: (99)

ह्रींशरीरिणी ।

ஹ்ரீம்சரீரிணி 100

'ஹ்ரீம்' மூல மந்திரத்தைச் சரீரமாக உடையவள்.

விவரணம்:—பராசக்தியே 'ஹ்ரீம' என்ற சப்த உருவத்துடன் அவதரித்திருக்கிருள் என்பது.

ॐ ह्रींशरीरिण्यै नमः ।

ஓம் ஹ்ரீம்சரீரிண்யை நம: (100)